அருணகிரிநாதர் அருளிய

# திருவகுப்புகள்











55வது ஆண்டு

ஸ்கந்த ஷஷ்டி விழா மலர் - 2008

## முருகன் திருவருட் சங்கம்

திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம்



உ

முருகா சரணம்



ஸ்ரீமத் அருணகிரிநாதர் அருளிய

# திருவகுப்புகள்

55ஆவது ஆண்டு ஸ்கந்த ஷஷ்டி விழா மலர் வெளியீடு

## முருகன் திருவருட் சங்கம்

101/50, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

மலர் வெளியிடும் நாள் : 2-11-2008 (ஞாயிறு மாலை)

**மலர் வெளியீடு - முன்னிலை :**

"திருப்புகழ் அடிமை" ஸ்ரீ **S. நடராஜன்,** B.Com. அவர்கள்

**தலைமை வகித்து மலரினை வெளியிடுபவர் :**

ஸ்ரீ **V.V. ஸுந்தரம்** அவர்கள்

(Chief Executive Officer, Airbee Wireless, Chennai - 600 034.)

**சிறப்பு விருந்தினர்**

ஸ்ரீ **R. ரமணி** அவர்கள்

(Director, India Intellisys Technology (P) Ltd., Chennai)

**மலரினைப் பெறுநர்கள் :**

ஸ்ரீ **B. கிருஷ்ணகுமார்**
Dy. General Manager, Sundaram Motors, Chennai.
Grandson of Sri T.M. Krishnaswamy Iyer **(திருப்புகழ் மணி)**

ஸ்ரீ **K. ஜெயராம கிருஷ்ணன்,** Vice-President, T.C.S., Chennai - 600 006.

ஸ்ரீ **H. ராமஸுப்ரமணியன்**
Sr. General Manager, Advance Engg. Brakes India Ltd., Chennai - 600 050.

ஸ்ரீ **சந்திரசேகர முதலியார்,** திருமழிசை

ஸ்ரீ **K. வெங்கட்ரமணி** (திருப்புகழ் அன்பர்கள்)

ஸ்ரீ **N.S. மணி** ( திருப்புகழ் அன்பர்கள்)

ஸ்ரீ **S. ரமேஷ்,** Sr. Vice-President, Reliance Industries, Mumbai

ஸ்ரீ **A. சிதம்பரம்,** Deputy Director of Small Scale Industries (Retd.)

ஸ்ரீ **N. விச்வநாதன்,** Sr. Manager, Project Division (Retd.) A.B.B. Ltd., Baroda

ஸ்ரீ **R. ராம்குமார்,** (C.E.O. 360 Digital Media Pvt. Ltd., Chennai - 600 090)

ஸ்ரீ **D. அனந்த ஸுப்ரமணியன்** (செயலர், முருகன் திருவருட் சங்கம்)

இசைமணி ஸ்ரீ **V. முத்துக்கிருஷ்ணன்** (முருகன் திருவருட் சங்கம்)

திருப்புகழ் இசைவாணர் ஸ்ரீ **V. லக்ஷ்மி நாராயணன்** (முருகன் திருவருட் சங்கம்)

ஸ்ரீ **N. அனந்தகிருஷ்ணன்** (முருகன் திருவருட் சங்கம்)

ஸ்ரீ **S. வால்மீகி** (முருகன் திருவருட் சங்கம்)

முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம் முருகா சரணம்

முதல் பதிப்பு : அக்டோபர் 2008

கிடைக்குமிடம் :

**வே. கணேசன்**
"மங்களம்"
நெ. 24/13, ஸி. பி. ராமஸ்வாமி தெரு,
அபிராமபுரம், சென்னை - 600 018.
☎ : 24996078
செல் : 9444145032

அச்சிட்டோர் :

**ஆர். எஸ். டி. ப்ரிண்டர்ஸ்**
140, முண்டகக்கண்ணி அம்மன் கோயில் தெரு,
மயிலை, சென்னை - 600 004.
☎ : 24662054

உ

முருகா சரணம்

ஸ்ரீமத் அருணகிரிநாதர் அருளிய

# திருவகுப்புகள்

(மூலமும் - உரையும்)




பதவுரை ஆசிரியர்

"திருப்புகழ் அடிமை"

ஸ்ரீ S. **நடராஜன்,** B.Com.


**(வாக்கிற்கு அருணகிரி-வாழ்க்கைக்குத் திருப்புகழ்)**


55ஆவது ஆண்டு ஸ்கந்த ஷஷ்டி விழா மலர் வெளியீடு

**முருகன் திருவருட் சங்கம்**

101/50, பெரிய தெரு, திருவல்லிக்கேணி,

சென்னை - 600 005.

"திருப்புகழ் அடிமை"
S. NATARAJAN, B.Com.,

. . . . . .சுமணன் தெரு,
தியா. . . . .நகர், சென்னை - 17.
போன். . .212 3015

# அணிந்துரை

உலக ஆசைகளை வளர்த்துக் கொண்டே போவது தீமை என்பதை எல்லாச் சான்றோர்களும் வலியுறுத்தி இருக்கின்றனர். அருணகிரியாரும் "தொலைவிலாத பேராசை துரிசறாத ஓர் பேதை" என்று தன்னையே நிந்தித்துக் கொள்கிறார். ஆனால் உலக பசு பாச ஆசைகளுக்குத்தான் இந்த விதி. ஆன்மீக வழியில் மேன்மேலும் முன்னேற வேண்டும் எனும் ஆசைக்கு அளவு கோல் கிடையாது. இந்த முறையில் அருணகிரியாரும் "ஆசைகூர்பத்தனேன்" என்று சொல்லிக்கொண்டு மாத்ருகா புஷ்ப மாலையாகிய கந்தர் அநுபூதியை அருளிச் செய்திருக்கிறார். பதினாறாயிரம் திருப்புகழ்ப்பாக்கள் பாடியும் கூட இந்த ஆசை அவருக்குத் தணியவில்லை. முருகப்பெருமானின் பல சிறப்புகளையும் அவருடைய பரிவாரங்களையும் பாட வேண்டும் எனும் ஆசை பல திருப்புகழ்ப் பாக்களில் வெளிப்படுகிறது. அதன்படி இருபத்தி ஐந்து திருவகுப்புக்கள் அருளி இருக்கிறார். வடமொழியில் பாதாதிகேசாந்த துதியைப் பின்பற்றி முருகப்பெருமானின் சீர்பாதங்களைப் போற்றும் சீர்பாத வகுப்பு முதலாவதாகத் திகழ்கிறது. ஒரு திருப்புகழில் "நின்பதயுக ப்ரசித்தி என்பன வகுத்துரைக்க" என்றபடி இந்த வகுப்பு வெளி வந்தது. கந்தப்பெருமான் கன்னியாகுமரியின் செல்வன் என்பதால் பெரும்பான்மையாகத் தேவி பெருமை நிரம்பப் பெற்ற தேவேந்திர சங்க வகுப்பு வருகிறது. "வேல் பாடேன் தாழாதீயேன்" என்ற தன்குறையை நீக்க, வேல்வகுப்பு பாடப்பெற்றது. திருவதிகைத் திருப்புகழில் "நின் ஆறிருபுயமென உரைசெய அருள்வாயே" என்ற வாக்கிற்கு இணங்க புய வகுப்பு இயற்றப்பட்டது. இந்த வகுப்புகளைத் தினந்தோறும் பாராயணம் செய்ய இயலாவிட்டாலும் சில முக்கிய நாட்களில் பாராயணம் செய்வதற்காக எல்லா வகுப்புகளும் உரையோடு முருகன் திருவருட்சங்கத்தினரால் வெளியிடப்படுகிறது. முதல் மூன்று வகுப்பும் மணி, மந்திர, ஔஷதம் எனக் கூறப்படுவதால் நித்தமும் ஓதுவது நலம். இச்சா சக்தியாகிய வள்ளியைத் தன்னுடன் சேர்த்துக் கொண்ட திருவிளையாடலை விவரிக்கும் வேளைக்காரன் வகுப்பும் வேடிச்சிகாவலன் வகுப்பும் செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் பாராயணம் செய்வது மிகுந்த நன்மை பயக்கும். நவராத்திரி கொலு வைத்து தினந்தோறும் மாலையில் விளக்கேற்றி கொலு வகுப்பை பாராயணம் செய்வது சிறப்பு. கிரஹணகாலத்தில் மயில் வகுப்பைப் படிக்க வேண்டும் என்று எனது வழிகாட்டி குஹஸ்ரீ ரசபதி அவர்கள் கூறியிருக்கிறார். பூதங்களையும், வேதாளங்களையும் எதற்காகப் பாடிச் சென்றார் என்று சில பேர் வினவலாம். கவி மரபை ஒட்டித் தக்கயாகப் பரணி முதலிய பரணி நூல்களைப் போல் நான்கு வகுப்பு பாடி இருக்கிறார். பூதங்களும், வேதாளங்களும் அநாசாரமான உணவை உண்கின்றனர் என்றால், அவை எல்லாம் பாவமே உரு எடுத்த அரக்கர்களின் முடிவைக் காண்பிக்கின்றன. யுத்த மத்தியிலும் 'களம் முழுதும் வாழிய திருப்புகழ் முழக்குவன", அதைப் போல் "குறத்தி இறைவனை நிறைத்து மலரடி குறித்து வழிபடு குணத்தை உடையன" அதே போல் வீரவாள் வகுப்பில் ரத்தினம் போல் ஓர் அடி வருகிறது. "யாருமே அற்றவன் என்மீது ஓர் ஆபத்து உறவராமலே சுற்றிலும் இருந்து காத்திடுமே" இதுவும் அடிக்கடி பாராயணத்துக்குரிய வகுப்பு. சித்து வகுப்பு படித்து, நகைச்சுவையுடன் அநுபவிக்கத்தக்கது. இதை அங்கதம் (ஆங்கிலத்தில் Satire) என்பார்கள். இதில் வரும் மூலிகைகளை வெறும் பெயருடன் நிறுத்தி விடாமல், சிறிது ருசி உண்டாவதற்காக சில குறிப்புகளைக் கொடுத்திருக்கிறேன். இந்த பெரியத் தொண்டு நிறைவேறுவதற்காக எனக்கு வேண்டிய உடல்நலம் கொடுத்த ஷண்முகப் பெருமானின் திருவடிகளில் மனமார்ந்த நமஸ்காரங்களைத் தெரிவித்து இந்தப் பணிக்காக என்னைத் தூண்டிய முருகன் திருவருட்சங்கத்தினரை வாழ்த்துகிறேன்.

# பதிப்புரை

**வே. கணேசன்**

**முருகன் திருவருட் சங்கம்**
101/50 பெரிய தெரு,
திருவல்லிக்கேணி
சென்னை - 600 005.

சீல முருகன் திருவருட் சங்கம் உயர்
வேலன் கருணையினால் மேன்மையுடன் - ஞாலமிசை
அன்பர்எலாம் கூடி அரியபல தொண்டியற்றி
இன்பமுடன் வாழ்க இனிது.

(திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகள்)

சென்னைத் திருவல்லிக்கேணியில் 1954 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற முருகன் திருவருட்சங்கமானது, கலியுக வரதனின் திருவருளைப் பெறுவதையே, பிறவி எடுத்ததன் குறிக்கோளாகக் கொண்டு 54 ஆண்டுகள் நிறைவு செய்து 55-ஆவது ஆண்டில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

இச்சங்கமானது இன்றளவில் பல ஆன்றோர்கள் இயற்றிய பக்தி நூல்களையும், அருணகிரிநாதர் அருளிய திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரநுபூதி, மயில் விருத்தம், வேல் விருத்தம், சேவல் விருத்தம், திருஎழுகூற்றிருக்கை, திருப்புகழ் போன்ற பல அருட் பநுவல்களையும் "பாடும் பணியே பணியாக" மட்டும் அல்லாமல் அச்சிறந்த நூல்களை அச்சிட்டு "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற நோக்கில் வருடம் தவறாது ஸ்கந்த ஷஷ்டிப் பெருவிழா அன்று வெளியிட்டுக் கொண்டு வருவதை யாவரும் அறிவர்.

கடந்த 48 ஆவது ஆண்டு ஷஷ்டி விழாவில் திருவகுப்புகள் மயில், வேல், சேவல் விருத்தங்கள் (மூலம் மட்டும்) அடங்கிய சிறு நூலை நங்கை நல்லூர் பொங்கி மடாலயத்தின் பொறுப்பாளர் அருளிசைமணி ஸ்ரீ S.V. ஸுப்ரமணியன் அவர்கள் மூலம், பாடல்களைச் சந்தம் கெடாவண்ணம், பொருள் விளங்குமாறு சிறப்பாகப் பிரித்தும், தொகுத்தும் பஜனையில் ஈடுபடும் அன்பர்கள் பாடுவதற்குத் தக்கவாறு அமைத்து வெளியிட உதவினார்கள்.

இந்த ஆண்டு, அருணகிரிநாதர் அருளிய நவமணிகளை ஆராய்ந்து சிறப்பான முறையில் பாடல்களின் பொருளை அடியார்களுக்குக் கற்பித்தும், திருப்புகழைப் பயிற்றுவித்தும் சுமார் 55 ஆண்டுகளாக (எந்த ப்ரதிபலனையும் எதிர்பார்க்காமல்) திருப்புகழ்ப் பணியில் நாள் தவறாமல் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு இருப்பவரும், அடியார்களினால் 'திருப்புகழ் அடிமை' என்ற நாமத்துடன் அழைக்கப்படுபவருமான திரு. S. நடராஜன் அவர்கள் தன்னுடைய தேக உபாதைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் இன்று வெளியிடப்படும் 'திருவகுப்புகள்' என்கிற இந்த அரிய பொக்கிஷத்தை உரை எழுதித் தொகுத்து

அளித்திருக்கிறார்கள். (இந்நூலில் பா[illegible]ன் மூ[illegible]களிலும் மற்றும் பாடல் சொற்பிரிவு, பதவுரை, பொழிப்புரை சிறிய எழுத்துக்களில[illegible]கப்பட்டிருக்கின்றன). திரு. S. நடராஜன் அவர்கள் மேன்மேலும் இவை போன்ற நற்ப[illegible]களில் ஈடுபட இறைவன் அவருக்கு நோய், நொடி அற்ற நீண்ட ஆயுளையும், இகபர சௌபாக்கியத்தையும் அருள வேண்டும் என்று முருகன் திருவருட்சங்கத்தின் சார்பில் ப்ரார்த்திக்கிறோம்.

இந்நூலைக் கணினியில் சிறப்பாக அச்சுக்கோத்துத் தந்த உரிமையாளர்கள் (S.R. Computer Systems-DTP) திருவாளர்கள் S. கெஜராஜ், P.S. சரவணன் ஆகியோர்களுக்கும், இந்நூலைச் சிறப்பான தாளில் அச்சிட்டு வழங்கிய R.S.T. Printers உரிமையாளர்களுக்கும், இந்நூலில் ஒப்பச்சு திருத்தி எனக்கு உறுதுணையாகச் செயல்பட்ட ஸ்ரீ S. ஸுப்ரமணியன், சரோஜினி தெரு, தியாகராயநகர் திரு. V. வேங்கடராமன், அரும்பாக்கம் மற்றும் ஏனைய வழிகளில் எனக்குப் பக்கபலமாகத் திகழ்ந்த ஸ்ரீ S. ஸ்ரீதரன், ட்ரஸ்ட்பாக்கம் வடக்குத்தெரு, மந்தைவெளி அவர்கட்கும் இந்நூல் வெளியிடுவதற்கு வேண்டிய விளம்பரங்களைக் கொடுத்து உதவிய நிறுவனங்களுக்கும், அதனைப் பெற உதவிய அடியார் பெருமக்களுக்கும், இந்நூலின் முகப்பு அட்டையில் பால முருகன் தோன்றும் காட்சியினையும், நூலின் உள்ளே பல வண்ணத்தில் இறைவனது வண்ணப் படங்களையும் கணிப்பொறி மூலம் சிறப்பாக அமைத்துக் கொடுத்த சங்கத்தின் மெய்யன்பரும், பொருளாளருமாகிய சேகர் என்கிற ஸ்ரீ N. சந்திரசேகர் போன்றோர்களுக்கும், முருகப் பெருமானின் திருவருள் என்றும் பக்கலில் நிறைந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அன்பர்கள் யாவரும், வைரமாகத் திகழும் திருவகுப்பினைப் பெற்று அருணகிரியார் உரைப்பது போல் பக்தியுடன் நாள்தோறும் திருவகுப்பினைப் பாராயணம் செய்து அதன் மூலம் எவ்விதமான வினைகளோ, பாவமோ, பழியோ, குற்றமோ, நோயோ, இகழ்ச்சியோ, வசிய மந்திரங்களோ சற்றேனும் நம்மை நெருங்காமலும், இரவிலோ, பகலிலோ, தனிமையிலோ தைரியமாக செல்லவும், எந்தச் சபையிலும் சிறப்பாகப் பேசும் நாவன்மையும், எந்த மொழியோ அல்லது இசையோ கைவரவும், யம பயம் நீங்கவும், சிவஞானமும் மேலான வாழ்க்கையும் சிவபோகமும் முருகப் பெருமானின் திருவருளினால் அடைந்து உய்யப் பிரார்த்திக்கிறேன்.

### திருவகுப்புகளின் சிறப்பு

கருவகுப்பைக் களைந்தருள்செய் கழற்கந்த வேல்முருகன்
உருவகுப்பைத் தொகுத்துவகுத் துரைஅருண கிரிநாதர்
திருவகுப்பைத் தெரிந்துகற்றுத் தெளிந்துணர்ந்தார் பகுப்பவற்றுள்
ஒருவகுப்பை உயிந்துளத்துள் அநுபவித்தாலும் உயர்வே.

அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

பொருளுண்டாம் போற்றும் புகழுண்டாம் வேலோன்
அருளுண்டாம் சீர்பலவும் உண்டாம் - மருளறவே
அங்கத் தினராய் முருகன் திருவருட்
சங்கத்தை சார்ந்தார் தமக்கு.

அருட்கவிமணி காமாக்ஷிதாஸர் (வழக்கறிஞர்)

# பொருளடக்கம்

## வாழ்த்துப்பா (அறுசீர் விருத்தங்கள்)

1. தருணமழ விடையன்நட ராஜன்றன்
   பெயர்தாங்கு சான்றோன் நந்தம்
   அருணகிரி முநிபகர்செய் திருவகுப்புக்
   குரைவரைந்தான் அதனை ஒட்டிப்
   பொருள் இசையப் பதம்பிரித்துப் பொழிப்புரைதந்
   தச்சிட்ட புலம்சேர் அந்த
   முருகனருட் திருச்சங்கத் தலைமைபெறு
   கணேசப்பேர் மொய்ம்பன் வாழி

## நேரிசை வெண்பா

2. வாழிமுரு கன்திருவ ருட்சங்கம் மாநிலத்தில்
   கோழிபிடி செங்கரத்துக் கோனருளால் - ஊழியம்செய்(து)
   அச்சங்கத் தார்மகிழ்வோ டான்றோராய்ப் பல்லாண்டிங்(கு)
   எச்சங்க மும்புகழ வே.


நங்கைநல்லூர்
15-10-2008
போன் : 2231 2473
செல் : 93821 89621

ஸு.வே. ஸுப்ரம்மண்யன்
பொங்கி மடாலயம்






திருப்பரங்குன்றம்



பழமுதிர்சோலை

# திருவகுப்பு

## அறிமுகம்

ஒரே பொருளை பல ... க வகுத்து, தொகுத்துச் சொல்லும் நூல் வகைக்கு வகுப்பு என்று பெயர். அருணகிரிய ... வ்வகையில் 25 வகுப்புகள் பாடி அருளியுள்ளார். இவற்றுள் முதல் 18 தான் அருணகிரிய ...ன் வாக்கு என்று ஆறுமுக நாவலர் போன்ற ஆன்றோர்களின் கருத்தாகும்.

ஏழையின் இரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக்காரனும்

என்று அருணகிரிப் பெருந்தகை திருவகுப்பில் கூறுவதினால், அவர் மனித உடம்பை விட்டு கிளி ரூபம் பெற்ற பின், திருவகுப்புகளைப் பாடி இருப்பார் எனத் தோன்றுகிறது. இக்கருத்திற்கு போதுமான ஆதாரங்களும் உள்ளன. பெண்ணாசை பெரும் தீமை விளைவிக்கும் என்பதை பல திருப்புகழ்களில் அருணகிரியார் கூறி இருப்பதை பார்க்கிறோம். ஆனால், திருவகுப்புகளில் பெண்ணாசையைப் பற்றி எங்குமே கூறப்படவில்லை. மேலும் எம பயத்தைப் பற்றி பல திருப்புகழ்ப்பாக்களில் சித்தரித்திருக்கிறார். முதல் 18 வகுப்புகளில், சேவகன் வகுப்பைத் தவிர, வேறு எந்த வகுப்பிலும் இது பற்றி கூறப்படவே இல்லை.

உரைபெற வகுத்தருணை நகரின்ஒரு பத்தனிடும்
ஒளிவளர் திருப்புகழ்ம தாணிக்ரு பாகரனும்

என்று வேடிச்சி காவலன் வகுப்பில் 'நான்' என்று சொல்லாமல் ஒரு பத்தன் (பக்தன்) படர்க்கையில் கூறி இருப்பது கவனிக்கப்பாலது. தான் முன்பு மானிடப் பிறவியில் திருப்புகழை இயற்றினேன் என்கிற தொனி இங்கு ஒலிக்கிறது.

**மற்றுமொரு ருசிகரமான செய்தி**

திருப்புகழிலும், கந்தர் அந்தாதியிலும், புகலியின் வித்தகரான ஞானசம்பந்தரை, முருகப் பெருமானாகவே பாவித்துப் பாடியுள்ள அருணகிரியார், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், திருவகுப்பு ஆகிய நூல்களில் இக்கோட்பாடு காணப்படவில்லை. இதே போல் திருப்புகழில் பல இடங்களில் வரும் - வயலூரா - எனும் சொல் ஏனைய நூல்களில் காணப்படவில்லை.

"செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்பகழ்வி ருப்பமொடு
செப்பென எனக்கருள்கை" மறவேனே

என்று வரும் "பக்கரை விசித்ரமணி" எனத்தொடங்கும் விநாயகர் திருப்புகழில் சொல்லி இருப்பது இறைவனின் கட்டளை என ஏற்று, திருப்புகழில் மட்டும் செய்ப்பதியைக்கூறி, ஏனைய நூல்களில் கூறாமல் விட்டு விட்டார் என எண்ணத் தோன்றுகிறது.

# சீர்பாத வகுப்பு

ஒருவனுக்கு நோய் நேர்ந்தால், மூன்று வகையான சிகிச்சைகள[illegible]மற்கொள்ளுவது மரபு. ரட்சை, தாயத்து போன்றவைகளைத் தரித்துக்கொள்வது ம[illegible]னப்படும். ஜெபங்கள், அருட்பாடல்களை ஓதுவது மந்திரம். நோய்தீர மருந்துகளை உ[illegible]ள்ளுவது ஔஷதம். பிறவி நோயை அகற்றுவதில் மணியாகத் திகழ்வது சீர்பாத வகு[illegible]ரணம் என்னவெனில் ஆண்டவனை விட, அவனது திருவடிகளே சிறந்தது. நம்மை நன்னெறிக்கு அழைத்துச் செல்வது.

நின்னிற் சிறந்தது நின்தாள் இணையவை - என்பது பரிபாடல் வாக்கு.

இறைவனின் சீர்பாதங்களே முக்திக்கு வித்தாகும் என்கிற கோட்பாட்டை மாணிக்கவாசகர் சிவ புராணத்தின் துவக்கத்திலேயே,

நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க

என்பதில் சிவபெருமானின் திருவடிகளே பஞ்சாட்சர வஸ்துவாக உள்ளது என்பதை மிகவும் சூட்சகமாக உணர்த்துகிறார். அதேபோல், முருகப்பெருமானின் திருவடிகளே ஆறெழுத்தின் சொரூபம் எனக் கொள்ளலாம். ஒருவருக்கு ஆறெழுத்து உபதேசம் செய்யப்பட வில்லை என்றாலும், இந்த சீர்பாத வகுப்பைப் பாராயணம் செய்வதால், ஷடாட்சரத்தைச் ஜெபித்த பலன் கிட்டும் என்பது திண்ணம்.

சீர்பாத வகுப்பிற்கு மூலாதாரமாக திகழ்வது அருணகிரியார் முருகனிடம் செய்த பிரார்த்தனையே,

வரையினிலெங்கணு முலவி நிறைந்தது
வரிசை தரும்பதம் அதுபாடி
வளமொடு செந்தமி ழுரைசெய அன்பரு
மகிழ வரங்களும் அருள்வாயே

என்று ''பரவு நெடுங்கதிர்'' எனத் தொடங்கும் மதுரைத் திருப்புகழில் காணப்படும் வேண்டுதலேயாகும்.

நின் பதயுகள பிரசித்தி என்பன வகுத்து உரைக்க
நின்பணி தமிழ் திரயத்தை அருள்வாயே
''வரையினி லெங்கணு முலவி நிறைந்தது'',

எனவும் இறைவனிடம் இறைஞ்சுவதையும் காணலாம்.

அடியவர் இச்சையில் எவை எவை உற்றன அவை தருவித்தருள் பெருமாளாகிய முருகப்பெருமான், அருணகிரியாரின் வேண்டுதலை நிறைவேற்றினார். நமக்குக் கிடைத்தது சீர்பாத வகுப்பு.

# 1. சீர்பாத வகுப்பு

## மூலம்

தனத[illegible]னதனன தனதனன தனதனன
[illegible]தனன தனதனன தனதான தானதன

1. உததியிடை கட[illegible]ர கதவருண குலதுரக
வுபலளித [illegible]னகரத சதகோடி சூரியர்கள்

2. உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவின் இருளகல ஒரு சோதி வீசுவதும்

3. உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்

4. ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
யுணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்

5. உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு
முழலுவன பரசமய கலையார வாரமற

6. உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும்

7. உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
வுருவுடைய மலினபவ சலராசி யேறவிடும்

8. உறுபுணையு மறிமுகமு முயரமரர் மணிமுடியில்
உறைவதுவு முலைவிலது மடியேன் மனோரதமும்

9. இதழிவெகு முககமன நதியறுகு தறுகணர
இமகிரண தருணவுடு பதிசேர் சடாமவுலி

10. இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
இமையமயில் தழுவுமொரு திருமார்பி லாடுவதும்

11. இமையவர்கள் நகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத வுரகர்பதி அபிஷேக மாயிரமும்

12. எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்

13. இனியகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயுப்
இலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்

14. இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை யொருநொடியில் லமாக வோடுவதும்

15. எருழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
யிரலைமரை யிரவுபகல் இரைதேர்க டாடவியில்

16. எயினரிடு மிதணதனில் இளகுதினை கிளிகடிய
இனிதுபயில் சிறுமிவளர் புனமீ துலாவுவதும்

17. முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட

18. முடுகுவதும் அருணெறியில் உதவுவதும் நினையுமவை
முடியவரு வதுமடியர் பகைகோடி சாடுவதும்

19. மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல தீவரமும்

20. முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முநிவர்கரு தரியதவ முயல்வார் தபோபலமும்

21. முருகசர வணமகளிர் அறுவர்முலை நுகருமறு
முகுகுமர சரணமென அருள்பாடி யாடிமிக

22. மொழிகுழற அழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென அறைகூவி யாளுவதும்

23. முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடும் ஆசுகவி

24. முதலமொழி வனநிபுண மதுபமுக ரிதமவுன
முகுளபரி மளநிகில கவிமாலை சூடுவதும்

25. மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதி மூலமென

26. வருகருணை வரதனிகல் இரணியனை நுதியுகிரின்
வகிருமட லரிவடிவு குறளாகி மாபலியை

27. வலியசிறை யி ளியின் முகடுகிழி படமுடிய
வளருமு ருதனிரு பதுவாகு பூதரமும்

28. மகுடமொரு ப ய அடுபகழி விடுகுரிசில்
மருகனிட தளமும் வருதார காசுரனும்

29. மடியமலை பிளவு மகரசல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேல னீலகிரி

30. மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
வசனிபயி ரவிகவுரி யுமையாள்த்ரி சூலதரி

31. வநசைமது பதியமலை விசயைதிரி புரைபுநிதை
வநிதையபி நவையநகை யபிராம நாயகிதன்

32. **மதலைமலை கிழவனநு பவனபய னுபயசதுர்**
**மறையின்முதல் நடுமுடிவின் மணநாறு சீறடியே**

## (பாடல்) சொற்பிரிவு (1)

1. உததி இடை கடவும் மரகத அருண குல துரக
உப லளித கனக ரத சதகோடி சூரியர்கள்

2. உதயம் என அதிகவித கலப கக மயிலின் மிசை
யுக முடிவின் இருள் அகல ஒரு சோதி வீசுவதும்

3. உடலும் உடல் உயிரும் நிலைபெறுதல் பொருள் என உலகம்
ஒருவி வரும் மநுபவன சிவ யோக சாதனையில்

4. ஒழுகும் அவர் பிறிது பரவசம் அழிய விழி செருகி
உணர்வு விழி கொடு நியதி தமதூடு நாடுவதும்

5. உரு எனவும் அரு எனவும் உளது எனவும் இலது எனவும்
உழலுவன பரசமய கலை ஆரவாரம் அற

6. உரை அவிழ உணர்வு அவிழ உளம் அவிழ உயிர் அவிழ
உள படியை உணரும் அவர் அநுபூதி ஆனதுவும்

7. உறவு முறை மனைவி மகவு எனும் அலையில் எனது இதயம்
உருவுடைய மலினம் பவம் சல ராசி ஏற விடும்

8. உறுபுணையும் அறிமுகமும் உயர் அமரர் மணிமுடியில்
உறைவதுவும் உலைவிலதும் அடியேன் மனோரதமும்

9. இதழி வெகுமுக ககனநதி அறுகு தறுகண் அரவு
இம கிரண தருண உடுபதி சேர் சடா மவுலி

10. இறை மகிழ உடை மணியோடு அணி சகல மணி கலென
இமைய மயில் தழுவும் ஒரு மார்பில் ஆடுவதும்

11. இமையவர்கள் நகரில் இறை குடி புகுத நிருதர் வயிறு
எரி புகுத உரகர்பதி அபிஷேகம் ஆயிரமும்

12. எழுபிலமும் நெறுநெறென முறிய வடகுவடு இடிய
இளைய தளர் நடைபழகி விளையாடல் கூருவதும்

13. இனிய கனி கடலை பயறு ஒடியல் பொரி அமுது செயும்
இலகு வெகுகட விகட தட பார மேருவுடன்

14. இகலி முது திகிரிகிரி நெறிய வளைகடல் கதற
எழு புவியை ஒரு நொடியில் வலமாக ஓடுவதும்

15. எறுழி புலி கரடி அரிகரி கடமை வருடை உழை
இரலை மரை இரவு பகல் இரை தேர் கடம் அவியில்

16. எயினர் இடும் இதண் அதனில் இளகு தினை கிளி கடிய
இனிது பயில் சிறுமி வளர் புனம் மீது உலாவுவதும்

17. முதலவினை முடிவில் இரு பிறை எயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட

18. முடுகுவதும் அருள் நெறியில் உதவுவதும் நினையும் அவை
முடியவரு வதும் அடியர் பகைகோடி சாடுவதும்

19. மொகு மொகு என மதுபம் முரல் குரவு விளவினது
குறு முறியும் மலர் வகுள தள முழு நீல தீவரமும்

20. முருகு கமழ்வதும் அகில முதன்மை தருவதும் விரத
முனிவர் கருத அரிய தவம் முயல்வார் தபோ பலமும்

21. முருக சரவண மகளிர் அறுவர் முலை நுகரும் அறு
முககுமர சரணமென அருள் பாடி ஆடி மிக

22. மொழி குழற அழுது தொழுது உருகுமவர் விழி அருவி
முழுகுவதும் வருக என அறை கூவி ஆளுவதும்

23. முடிய வழி வழிஅடிமை எனும் உரிமை அடிமை முழுதும்
உலகறிய மழலை மொழி கொடு பாடும் ஆசுகவி

24. முதல மொழிவன நிபுண மதுபம் முகர் இத மவுன
முகுள பரிமள நிகில கவி மாலை சூடுவதும்

25. மத சிகரி கதறி [illegible] முதலை கவர் தர நெடிய
மடு நடுவ [illegible] வருவி ஒரு — விசை ஆதி மூலம் என

26. வரு கருணை [illegible] இகல் இரணியனை நுதி உகிரின்
வகிரும் [illegible] அரி வடிவு — குறள் ஆகி மாபலியை

27. வலிய சிறையிட [illegible] ரியின் முகடு கிழிபட முடிய
வளருமுகில் [illegible] ந்தன் — இருபது வாகு பூதரமும்

28. மகுடம் ஒருபதும் முறிய அடு பகழி விடு குரிசில்
மருகன் நிசிசரர் தளமும் — வரு தாரகாசுரனும்

29. மடிய மலை பிளவு பட மகர சலநிதி குறுகி
மறுகி முறை இட முனியும் — வடிவேலன் நீலகிரி

30. மருவு குருபதி யுவதி பவதி பகவதி மதுர
வசனி பயிரவி கவுரி — உமையாள் த்ரிசூலதரி

31. வநசை மதுபதி அமலை விசயை திரிபுரை புநிதை
வநிதை அபிநவை அநகை — அபிராம நாயகி தன்

**32. மதலை மலைகிழவன் அநுபவன் அபயன் உபய சதுர்**
**மறையின் முதல் நடு முடிவின் — மணநாறு சீறடியே**

**பதவுரை :**

உததி இடை - கடலின் நடுவில், கடவு - கடுமையான வேகத்துடன் செலுத்தப்படுகின்ற, மரகத அருண - பசுமை, செம்மை முதலான ஏழு நிறங்களை உடைய, குல துரக - உயர்ந்த ஜாதியைச் சார்ந்த ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட, உப லளித - வனப்பு வாய்ந்த, கனக ரத - பொன் மயமான தேரில், சதகோடி சூரியர்கள் உதயம் என - எண்ணற்ற கோடிக்கணக்கான சூரியர்கள் உதித்தார்கள் என எண்ணும் படி, அதிக வித கலப கக மயிலின் மிசை - விவரித்துச் சொல்ல முடியாத படி பல நிறங்களைக் கொண்ட தோகைகளை உடைய பட்சியான மயிலின் மேல், யுக முடிவில் இருள் அகல - சதுர் யுக முடிவில் உலகெல்லாம் அழியும்படி பிரளய காலத்தில் தோன்றும் பேரிருள் போன இடம் தெரியாமல் ஓடிப்போக, ஒரு சோதி வீசுவதும் - ஒப்பற்ற பிரகாசத்தை வீசி எங்கும் வியாபித்திருப்பதும் (மணநாறு சீறடியே), உடலும் - ஐம்பூதத்தின் செயர்க்கையாக அமர்ந்திருக்கும் இந்தத் தேகமும், உடல் உயிரும் - உடலின் உள் இருந்து கொண்டு சதா துன்பங்களைத்தரும் உயிரும், நிலைபெறுதல் - அழிய விடாமல் விதேக முக்தி அடைவதையே, பொருள் என - நாம் அடைய வேண்டிய குறி என எண்ணி, உலகம் ஒருவி - உலகப் பற்றை அடியோடு நீக்கி, வரும் - அந்த பக்குவ நிலையில் தோன்றும், மநுபவன - மந்திரங்களுக்கு இருப்பிடமான, சிவ யோக சாதனையில் - சிவயோக பயிற்சியில், ஒழுகுமவர் - நெடிது காலம் நிலை பெற்று நிற்கும் யோகிகள், பிறிது பரவசம் அழிய - கருவி கரணங்கள் வசம் வெளிப்பட்டுக் கொண்டிருக்கும் நிலமை கெட, விழி செருகி - புறக் கண்கள் சுழுமுனையை நோக்கும் நிலையில் மயிர் பாலம் என்று

சொல்லப்படும் நெற்றியின் நடு இடத்தில் செருகி நிற்க, உணர் [illegible] ழிகொடு - ஞானக் கண் கொண்டு, நியதி - யோக சாஸ்திரத்தில் விளக்கி இருக் [illegible] முறைப்படி, தமதூடு நாடுவதும் - தனது இதய கமலமாகிய தகராகாசத்தில், நாடுவது [illegible] ரும்பி நோக்கிய படி இருப்பதும், (மணநாறு சீறடியே)

உரு எனவும் - இறைவன் உருவத் திரு மேனி உடையவன் என்ப [illegible] லர், அரு எனவும் - இல்லை, அவருக்கென்று உருவம் கிடையாது அவர் நிஷ்கள ரூ [illegible] என்பார் சிலர், உளது எனவும் - எங்குமுள்ள பரம்பொருளே இறைவன் என்பது ஒரு கொ [illegible] கை, இலது எனவும் - கடவுள் என்கின்ற தத்துவமே கிடையாது என்பவர்களும், உழலுவன - இவர்கள் எல்லோரும் மெய்ப்பொருளை காணாமல் பயனின்றி பொழுதைப் போக்கும், பரசமய - பொய் சமயங்களின், கலை ஆரவாரம் அற - தர்க்கம் செய்து கூச்சல் எழுப்பும் நிலை முற்றும் ஒழியவும், உரை அவிழ - பேச்சு நின்று மௌனம் உறவும், உணர்வு அவிழ - உணர்ச்சி சிறு எல்லை விட்டு பெரிய சுற்றில் திகழவும், உளம் அவிழ - நெஞ்சக் கன கல்லும் நெகிழ்ந்து உருகி, உயிர் அவிழ - 'நான் தான்' என்று முனைப்புடன் நிற்கும் அகங்காரம் அவிழ்ந்து போக, உள படியை - எப்போதும் சாஸ்வதமாய் திகழும் மெய்ப்பொருளை, உணருமவர் - உணர்ந்து அநுபவிக்கும் சிவ ஞானிகளின், அநுபூதி ஆனதுவும் - ஞான சொரூபமாக விளங்குவதும் (மண நாறு சீறடியே), உறவு முறை - உற்ற சொந்தம் என்கிற முறையில் வரும், மனைவி மகவு எனும் அலையில் - மனைவி மக்கள் எனப்படும் அலைகள் வீசுகின்ற, எனது இதய - எனது உள்ளத்தைப் போன்ற, உருவுடைய - சொரூபம் உள்ள, மலின - பாவங்கள் நிறைந்த, பவ சல ராசி - பிறவிக்கடலில் இருந்து, ஏற விடும் - ஏறச்செய்யும், உறுபுணையும் - திடமான தெப்பமும் (மண நாறு சீறடியே), அறிமுகமும் - ஞான உலகத்திற்கு வாயில் போன்றதும், உயர் அமரர் மணி முடியில் - சீலம் மிக்க தேவர்களின் மகுடம் தரித்த தலைகளில், உறைவதுவும் - தங்குவதும் (மண நாறு சீறடியே), உலைவிலதும் - அழிவில்லாததும் (மண நாறு சீறடியே), அடியேன் மனோரதமும் - அடியேனுடைய சித்தத்திற்கு இலக்காக இருப்பதுவும் (மண நாறு சீறடியே), இதழி - கொன்றையும், வெகுமுக ககன நதி - அளவற்ற கிளைகளை உடைய ஆகாச கங்கையையும், அறுகு - அறுகம் புல்லையும், தறுகண் அரவு - அஞ்சாமையையும் வீரமும் உடைய வாசுகி என்கின்ற சர்ப்பத்தையும், இம கிரண தருண உடுபதி - குளிர்ந்த ஒளி கிரணங்களை உடையதும் இளமை பொருந்தியதும் நட்சத்திர கூட்டங்களுக்குத் தலைவனான சந்திரனையும், சேர் - சேர்த்து வைத்துக்கொண்டுள்ள, சடா மவுலி - ஜடையாளராகிய, இறை - எல்லாப் பொருள்களிலும் விளங்கும் சிவ பெருமான், மகிழ - இன்பமடைய, உடை மணியோடு - அரை மணியில் அணிந்துள்ள, அணி சகல மணி கலென - அணிந்திருக்கும் தண்டை, வெண்டையம், கிண்கிணி சதங்கை முதலிய ஆபரணங்களின் கலின் என ஒலிக்க, இமைய மயில் தழுவும் - இமவான் மடந்தையாகிய பார்வதி தேவி தழுவிக் குழையும், ஒரு திரு மார்பில் ஆடுவதும் - ஒப்பற்ற பரமனின் மார்பில் விளையாடல் செய்வதுவும் (மண நாறு சீறடியே),

இமையவர்கள் நகரில் - இமைப்பது இல்லாத விண்ணவரின் பொன்னுலகில், இறை குடி புகுத - இந்நகரின் மன்னனாகிய இந்திரன் மீண்டும் குடியேற, நிருதர் வயிறு எரி புகுத - சூரபத்மனின் வயிற்றில் கிலி என்ற ஜுரம் நுழைய, உரகர்பதி - சர்ப்ப ராஜனான

ஆதிசேஷனின், அ[illegible] ஆயிரமும் - ஆயிரம் பணாமுடிகளும், எழுபிலமும் - அதலம் முதல் ஏழு பாதாள உலக[illegible]ம், நெறுநெறென முறிய - மட மடவென்று முறிந்து போகவும், வடகுவடு இடிய - [illegible]ல் உள்ள மேரு மலையின் சிகரங்கள் இடியவும், இளைய தளர் நடைபழகி - இளம் [illegible]த்து தளர்ந்த நடையைப் பயின்று, விளையாடல் கூருவதும் - திருவிளையாடல் செ[illegible]ம் (மண நாறு சீறடியே), இனிய கனி - இனிப்புள்ள வாழை, மா, பலா முதலிய பழங்கள[illegible], கடலை பயர் - கடலை பயர், ஒடியல் - பனங்கிழங்கின் பிளவு, பொரி - பொரி ஆகியவற்றை, அமுது செயும் - திரு அமுதாக உட்கொள்ளும், இலகு - விளங்குகின்ற, வெகுகட - அதிகமாக பாயும் மத நீரையும், விகடம் - விசித்திரமான அழகும் உள்ள, தட பார மேருவுடன் - பரவிய மகிமை உள்ள மேரு மலை போன்ற கணபதியுடன், இகலி - பகைமை கொண்டது போல் நடித்து, முது திகிரி கிரி நெரிய - பழைய சக்ரவாள கிரி நெரியுறவும், வளைகடல் கதற - உலகை வளைத்துள்ள கடல் பயந்து பேரொலி கிளப்பவும், எழு புவியை - கீழ் மேல் தலா ஏழு உலகங்களை, ஒரு நொடியில் வலமாக ஓடுவதும் - ஒரு நொடிப் பொழுதில் பிரதட்சணமாக ஓடி வந்ததும் (மண நாறு சீறடியே), எறுழி - காட்டுப் பன்றிகளும், புலி - புலிகளும், கரடி - கரடிகளும், அரி - சிங்கங்களும் - கரி-யானைகளும் கடமை - காட்டு பசுக்களும், வருடை - மலை ஆடுகளும், உழை இரலை மரை - (மான்களின் வகைகள்) பலவிதமான மான் இனங்களும், இரவு பகல் - எப்பொழுதும், இரை தேர் - உணவைத் தேடித் திரிகின்ற, கடாடவியில் - அடர்ந்த பெரும் காட்டில், எயினர் இடு - வேடுவர்களால் அமைக்கப்பட்ட, இதண் அதனில் - பரணில் அமர்ந்து, இளகு தினை கிளி கடிய - வளப்பம் மிக்க தினைப் பயிரை உண்ண வரும் கிளி வகைகளை ஓட்ட, இனிது பயில் - ஆலோலம் பாடிக் கொண்டே ஓட்டும் வழக்கத்தை நன்றாக பழகி வந்த, சிறுமி - வள்ளிப் பிராட்டி, வளர் - அருமையாக வளர்ந்து வந்த, புனம் மீது உலாவுவதும் - தினைப் புனத்தில் உலாவிக் கொண்டிருப்பதுவும் (மண நாறு சீறடியே), முதலவினை முடிவில் - பிறவிக்கு வித்தான வினைகளை அனுபவித்து முடிந்த காலத்தில், இரு பிறை எயிறு - சந்திரனின் பிறை போன்று வளைந்த பற்களும், கயிறுகொடு - பாசக் கயிற்றையும் கொண்டு, முதுவடவை விழிசுழல - பெரிய வடவாமுகாக்கனி போன்ற தீப்பொறிகளைக் கக்கும் கண்கள் சுழலும் படி, வரு - உயிர்களைப் பிடித்துக் கொண்டு போக வரும், கால தூதர்கெட - எம தூதர்கள் பின் வாங்கி ஓட, முடுகுவதும் - அவர்களை விரட்டி துரத்துவதும் (மண நாறு சீறடியே), அருள் நெறியில் உதவுவதும் - உயிர்கள் ஆன்மிக வழியில் செல்லுவதற்கு உதவி புரிந்து கொண்டிருப்பதும் (மண நாறு சீறடியே), நினையுமவை முடிய வருவதும் - எண்ணிய எண்ணங்களெல்லாம் இனிதே நிறை பெற உற்ற துணையாக நிற்பதுவும் (மண நாறு சீறடியே), அடியர் பகைகோடி சாடுவதும் - அடியவர்களுக்கு ஏற்படும் உட்பகை புறப்பகை போன்றவைகளை மோதி அழிப்பதுவும் (மண நாறு சீறடியே), மொகு மொகு என - மொகு மொகு எனும் ஒலியுடன், மதுபம் முரல் - சித்தர்களாகிய வண்டுகள் ரீங்காரம் செய்யும், குரவு - குரா மலரும், விளவினது குறு முறியும் - விளா மரத்தின் இளந்தளிரும், மலர் வகுள தள - மகிழ மரத்தின் தளிர்கள் கூடிய மலர்களும், முழு நீலம் - பெரிய செங்குவளை மலர்களும், தீவிரமும் - இந்தீவரம் எனப்படும் கருங் குவளை மலர்களையும் (நீலோற்பலம்), முருகு கமழ்வதும் - மணம் வீசி விளங்குவதும் (மண நாறு சீறடியே), அகில முதன்மை தருவதும் - எல்லாவற்றுள்ளும் முதன்மை ஸ்தானத்தை வழங்க வல்லதும் (மண நாறு சீறடியே),

விரத முநிவர் - பல விதமான விரதங்களை அநுஷ்டிக்கும் திய[illegible]லர்கள் கூட, கருத அரிய - நினைக்க முடியாத அளவிற்கு, தவம் முயல்வார் - தவ[illegible] முயன்று செய்கின்ற மேலோரின், தபோ பலமும் - தவத்தின் பயனாக முத்தியைத் தரு[illegible] (மண நாறு சீறடியே), முருக சரவண - சரவண மடுவில் அவதரித்த ஞான தீபமே, ம[illegible] அறுவர் முலை நுகர் அறுமுக - கார்த்திகை மகளிர் அறுவரது பயோதரத்தில் வாய் வை[illegible] பருகும் சண்முகனே, குமர சரணம் என - குமரா உன்னுடைய திருவடிகளுக்கு அடைக்[illegible]ம் என்று, அருள் பாடி - அப்பரமனின் கருணையை பாடியும், ஆடிமிக - பக்தி மார்க்கத்தின் உச்ச கட்டமான கூத்து ஆடியும், மொழி குழற - சொற்கள் பெரிதும் குழற, அழுது - உள்ளம் நெக்குருகி அழுது, தொழுது - கை குவித்து வணங்கி, உருகுமவர் - உள்ளம், உடல், ஆவி இவை மூன்றும் உருகி நிற்கும் அடியார்களது, விழி அருவி முழுகுவதும் - ஆனந்தக் கண்ணீராகிய அருவியில் மூழ்குவதும் (மண நாறு சீறடியே), வருக என - அழுது நிற்கும் அவ்வடியார்களை வருக வருக என, அறை கூவி - வீறிட்டு அழைத்து, ஆளுவதும் - ஆண்டு ஆளுவதும் (மண நாறு சீறடியே), முடிய - எடுத்த பிறப்பு அனைத்திலும், வழி வழி அடிமை - பரம்பரை பரம்பரையாக திருப்பணி நினைவில் இருந்த அடிமை, எனும் உரிமை, அடிமை மழலை மொழி கொடு பாடும் - இனிய மொழி கொண்டு பாடுகின்றதும் எனும் தன் அடிமை உரிமையை, உலகம் முழுதும் அறிய - உலகனைத்தும் காட்சியாக அறியுமாறு, ஆசு கவி முதல் மொழிவன - ஆசு கவியாக சொல்லப் பட்ட பாக்களை, வன நிபுண மதுபம் - பெரும் திரளாக வரும் புலவர்களாகிய வண்டுகள், முகர் - முகர்ந்து பார்க்கும் அதாவது சிந்தித்துப் பார்க்கும், இத மவுனம் முகுள - இன்பத் தேன் மயமான மவுனம் அரும்பிய நிலையிலிருந்து கூறும், பரிமள - மணம் வீசுகின்ற, நிகில கவி மாலை சூடுவதும் - திருப்புகழ் அனைய என்னுடைய சகல பாமாலைகளைச் சூடிக்கொள்வதும் (மண நாறு சீறடியே), மத சிகரி - மும் மத அருவி உடையதும் மலை போன்ற தோற்றம் உடையதும், நெடிய மடு நடுவில் - நீண்ட தடாகத்தின் மத்தியில் இருந்த, முது முதலை கவர் தர - பெரிய முதலையால் பிடித்துக் கொள்ளப் பட்டு, கதறி - ஓலமிட்டு அழுது, வெருவி - தனக்கு முடியும் காலம் வந்து விட்டதோ என அஞ்சி, ஒரு விசை ஆதி மூலமே என - ஒரு முறை 'ஆதி மூலமே' என அழைக்க, வரு கருணை வரதன் - உடனே விரைந்து வந்து அந்த கஜேந்திரனைக் காத்த கருணா மூர்த்தியும், இகல் இரணியனை - பகைமை பாராட்டிய இரணியாசுரனை, நுதி உகிரின் வகிரும் அடல் அரி - நகத்தின் நுனியால் பிளக்கும் கொலைத் தொழிலை புரியும் நரசிம்ம மூர்த்தியும், குறள் வடிவாகி - குள்ள வடிவங் கொண்ட வாமனா மூர்த்தியாக, மாபலியை - மகா பலி சக்ரவர்த்தியை, வலிய சிறைஇட - கடினமான சிறையில் வைக்க, வெளியின் முகடு கிழிபட - அண்டத்தின் உச்சி பிளவு பட, முடிய வளரு முகில் - முழுமையாக வளர்ந்த மேகம் அன்ன நிறமும் கொடைத் திறமும் கொண்டவனும், நிருதன் இருபது வாகு புதரமும் - அசுரனான இராவணின் இருபது தோள்களான மலைகளும், மகுடம் ஒரு பதும் முறிய - கிரீடம் அணிந்த பத்து தலைகளும் முறிக்கப்பட்டு, அடு பகழி விடு குரிசில் மருகன் - போரிடும் கணையை ஏவி பெருமை வாய்ந்த ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியாக அவதாரம் எடுத்த திருமாலின் மருகனும், நிசிசரர் தளமும் - அசுரர் சேனைகளும், வரு தாரகாசுரனும் - யுத்தத்தில் எதிர்த்து வந்த தாரகாசுரனும், மடிய - இறந்து போகவும், மலை பிளவு பட - கிரவுஞ்ச மலை பிளவு படவும், மகர சலநிதி குறுகி மறுகி முறையிட - மகர மீன்கள் அதிகமாக உள்ள சமுத்திர நீர் வேலின்

சூட்டினால் குறைந்து ச[illegible]ங்கி 'ஓ' என்று இரைச்சல் இடவும், முனியும் வடிவேலன் - உக்கிர கோலம் கொள்ளும் [illegible]ந்த வேலாயுதம் ஏந்தியுள்ள பெருமானும், நீலகிரி மருவு குருபதி - மூன்று வேளைகளி[illegible]ன்று நீலோற்பல மலர் மலரும் திருத்தணியில் வீற்றிருக்கும் ஆச்சார்ய சிரேஷ்டனு[illegible]வதி - என்றும் இளமை உடையவள், பவதி - தன்னிடம் இருந்து எல்லாவற்றையும் உ[illegible] செய்பவள், பகவதி - திரு, செல்வம், புகழ், ஞானம், வீரம், வைராக்யம் எனும் ஆறு [illegible]ணங்களை உடையவள், மதுர வசனி - தேன் போன்ற இனிய மொழியை உடையவள், பைரவி - காலத்தை அளக்கும் பைரவி, கவுரி - விபூதி போன்ற வெண்ணிறம் உடையவள், உமையாள் - பிரணவ ரூபம் கொண்டவள், திரிசூலதரி - முத்தலை சூலம் ஏந்தியவள், வனசை - தாமரையை ஆசனமாகக் கொண்டவள், மதுபதி - காளி, அமலை - மலம் அற்றவள், விசயை - துர்க்கை, திரிபுரை - கீழ், பூ, மேல் லோகத்தின் தலைவி, புநிதை - தூய்மை மிக்கவள், வநிதை - அழகில் சிறந்தவள், அபினவை - என்றும் புதுமையாக இருப்பவள், அநகை - பாபம் அற்றவள், அபிராம நாயகி தன்மதலை - அபரிமித அழகியான தேவியின் குமாரனும், மலைகிழவன் - குறிஞ்சி நில அதிபதியும், அநுபவன் - எல்லா உயிர்களுக்கும் அநுபவ சாட்சியாக உள்ளவனும், அபயன் - பயமழித்து ஆறுதல் அளிப்பவனுமாகிய முருகப் பெருமானின், சதுர் மறையின் முதல் நடு முடிவின் - நான்கு வேதங்களின் முதல், இடை, கடை, ஆகிய நிலைகளிலும், மணநாறும் - அருள் மணம் வீசும், உபய சீறடியே - இரண்டு இளம் திருவடிகளே தான்.

## விளக்க உரை

**சதகோடி சூரியர்கள் ....... சோதி வீசுவதும் (1 - 2)**

பூதக் கண்ணாடியிலும் கூட காண முடியாத அளவிற்கு மிகவும் சிறியதும், அளவற்ற எண்ணிக்கையில் இருப்பவைகள் உயிர்த் துகள்களாகும். இவைகளே, இந்த பூவுலகத்திற்கு அருகாமையில் உள்ள புவர்லோகம் எனப்படும். தம்மை அணுவாக்கிக் கொண்டிருக்கும் காரணத்தால், அவைகளுக்கு ஆணவம் எனப் பெயர் பெற்ற மூல மலத்தின் தொடர்பால் இருள், மறதி, அறியாமை, துன்பம் இவைகள் தாம் இந்த அணுக்கள் பெற்ற அநுபவங்கள். கருணாமூர்த்தியாகிய இறைவன், இந்த நிலையைக் கண்டு உறாமல், சங்கல்பம் செய்ய விண்ணிலிருந்த அணுக்கள் காற்றின் வழியாகவும் மழை நீரின் வழியாகவும் பூமிக்கு வந்து சேர்ந்து, உணவு மூலமாக பரமனின் அருள் நாதத்தால் உருவான பலவித கருக்களில் சார்ந்து அந்தந்த உருவம் எடுக்கின்றன. இது மாதிரியே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் ஐந்து வித தன் மாத்திரைகளும் அவ்வுயிர்களுடன் சேருகின்றன. இவ்விதமாக முன் சொன்ன ஏழு விதமான உருவங்களை முறையே தேவர், மனிதர், விலங்கு, ஊர்வன, பறப்பன, நீரில் வாழ்வன, தாவரம் எனும் உடல் பெறுகின்றன.

நுட்பமான உயிர்களுக்கு ஸ்தூலமான உடல்கள் இறைவனால் கூட்டப்படுகின்றன. ஆனால் மூர்ச்சை, நித்திரை, மரணம் என்னும் மூன்று நிலைகளிலும் ஆன்மா பலவின் அணுவின் நிலையை கவனிக்க வேண்டும். இதிலிருந்து தெரிவது என்னவெனில் இந்த அணுக்களுக்கு எந்தவித தொழிலையும் இயற்றுவதற்கு சுதந்திரம் கிடையாது என்பதே. உடலில் உயிர்களை புகுத்தின பின் மனம், புத்தி, அகங்காரம் என்கிற அந்தக் கரணங்கள் இருத்தி இதற்காகவே

தான் படைத்திருக்கும் புவனத்தில் இன்ப துன்பங்களை ஆன்மாக்கள் அனுபவிக்கச் செய்கிறான். அப்போது இருளின் மத்தியில் ஒளியும், மறதியில் நினைவும், அறியாமையில் அறிவும், துன்பத்தில் இன்பமும் தோன்றுகின்றன. இதனால் இவ்வுல[illegible]தை - மிஸ்ரம் (கலப்பு) -- என்பர்.

எந்த வித கலப்பும் இல்லாமல் முழு அறிவும் ஒளியும் நினைவு[illegible]ன்பமும் கிடைக்குமா என்று ஏங்கும் ஆன்மாக்களுக்கு அப்படி ஒரு நிலை உள்ளது. அதுவே பெரு வாழ்வு என்று சொல்லப்படும் - வீடு பேறு - என்பதை வேதாகமங்கள் பரவலாக சொல்லி இருக்கின்றன. இந்த நிலையை அடைய பெரு முயற்சி எடுக்கிறது உயிர். இந்த ஆன்மிக வழியில் ஆன்மாக்கள் அழிந்து போகாமல் இயங்குவதற்காக உடல், கரணம், புவனம் இவைகளை ஏற்படுத்தி, கருணாமூர்த்தியான இறைவன் பாதுகாத்து வருகிறான். இவைகள் அனைத்தையும் உயிர்கள் அறிந்திருந்தும் ஆற்றில் குளிக்கப் போய் சேற்றை பூசிக்கொண்டது போல், அவைகள் மேலும் மலத்தைச்சேர்த்துக் கொள்கின்றன. உடம்பை அளித்த கருணையை ஒரு போதும் உணராத உயிர்கள் இளைப்பாறும் வண்ணம் இறைவன் அவைகளை தன்னுள்ளே ஏற்றுக்கொள்கிறான். இதுவே - சம்ஹாரம் - எனப்படும். உடல், கரணம், புவனம் அனைத்தும் சம்ஹாரத்தில் மறைய அத்துடன் சூரியனும், சந்திரனும் சேர்ந்து மறைந்து போவதினால் பிரபஞ்சம் முழுவதும் அகண்ட இருள் சூழ்ந்து விடுகிறது. இந்நிலையில், சில காலம் ஓய்வு பெற்ற உயிர்களை, மீண்டும் செயலாக்க இறைவனின் திருவுள்ளம், எண்ணுகிறது. அப்போது இறைவன் சொரூப இலக்கணத்திலிருந்து - தடஸ்தம் - எனப்படும் அரு உருவத் திருமேனியை தாங்குகிறான். மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல் தேகத்தைத் தாங்கும் உயிர்களுக்கு அருள் ஊட்டும் பொருட்டு தானும் ஒரு அருள் மேனி தாங்கி முருகனாக, பெரிய தோகையுடன் பல நிறங்கள் கொண்ட மயிலின் மேல், காட்சி அளித்து நடனம் புரிகிறான். பிரணவத்தின் நாதம் ஒலிக்கும் அக்கடலின் நடுவில் கோடிக்கணக்கான சூரியர்கள் ஒரே சமயத்தில் உதயமாவது போல, முருகப் பெருமானின் திருவடி ஒளி வீசுகிறது. இந்த பிரகாசம் சராசர பிரபஞ்சம் எங்கும் வியாபித்து காணப்படுகிறது. இதன் உந்துதலினால் படைப்பு முதலான செயல்கள் ஆரம்பமாகின்றன.

மயில் சுத்த மாயை. அதன் மேல் அமர்ந்திருக்கும் குமரன் ஞான சொரூபன். பரிபூரண ஞானமாகிய முருகனின் திருவடி, அகண்ட இருளை ஒழித்து பேரொளியைப் பரப்புகிறது. நக்கீரரும் இக்கருத்தை திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில், பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு - என்பார். அருணகிரியாரோ முருகப்பெருமானின் திருவடி ஒளியை ஒரு சூரியருக்கு ஒப்பு ஆகாது எனக் கருதி கோடிக்கணக்கான சூரியர்கள் என்கிறார்.

**மரகத அருண**

மரகத வருண என பிரிப்பதை விட மரகத அருண எனப்பிரித்து பார்க்கையில் ஆழமான கருத்து வெளியாவதைக் காணலாம். மரகத நிறம் பசுமையையும், குளிர்ச்சியையும் குறிக்கும். சிவப்பு நிறம் ஒளியையும், ஞானத்தையும் குறிக்கும். இவற்றின் மத்தியில் மற்ற பளிக்கற்றைகள் அடங்கும். ஆகையால் மரகத அருண என பிரித்து பொருள் கொள்வது மிகவும் பொருத்தம் உள்ளது. இறைவன் தனக்கென ஒரு உருவம் இல்லாதவன் எனினும்

உலகை பாதுகாத்து நடத்துவதற்காக பல உருவங்களை எடுககிறான். தான் கருவில் பிறவாத வகையில் இருந்தாலும், உயிருக்கு உயிராய்த் திகழ்கிறான். இதை அப்பர் பெருமான்,

உருவாகி என்னைப் படைப்பாய் போற்றி - என்பார். (திருத் தாண்டகம்)

**உலகம் ஒருவி - ... செருகி (3 - 4)**

அதிக வெம்மையும், அ... குளிர்ச்சியும் இல்லாமல் சமமான இடத்தில், பொருத்தமான பீடத்தில் அமர்ந்து, பத்மாசனம் முதலிய நிலையில் வடக்கு பார்த்து இருந்து, தீட்சை புரிந்த ஆச்சார்யனின் திருவடி மலர்களை, குகப் பெருமானின் திருவடிகளாகப் பாவித்து மனமும் புலன்களும், தம் போக்கில் போக விடாத படி தடுக்க வேண்டும். மனம் அடங்கினால் பிராணவாயுவும் அமைதி பெறும். பிராணயாமம் மூலம் நாடிகளைச் சுத்தி செய்து, சுழுமுனையில் பிராணவாயுவை இழுத்து, நெற்றியின் நடுவில் ஒரு நீல ஒளி இருப்பதாக பாவித்து, வாயுவையும் நாட்டத்தையும் அங்கே செலுத்தி லலாடயோகம் எனப்படும் 'நெற்றிக்கு நேரே புருவத்தின் இடையில், உற்று உற்று பார்க்க ஒளிவிடும் மந்திரம்

'பற்றுக்கு பற்றாய் பரமன் இருந்திடம்
சிற்றம்பலம் என்று தேர்ந்து கொண்டேனே' (திருமந்திரம்)

இந்த யோக மார்க்கத்தை திருமூலர் முதல் இக்காலத்தில் யோகாடா முறையில் பயிலும் அமெரிக்கராகிய ராய் டேவிஸ் முதலியோர் பயின்று வருகின்றனர்.

நிலை பெறுதல்
யோகிகள் இந்த பூத உடம்புடன் முக்தி அடைவார்கள் என்பதை
"இந்தச் சடமுடன் உயிர் நிலை பெற"

என்ற அடிகள் மூலம் அருணகிரியார் ஆமோதிக்கிறார். இக்கருத்திற்கு பிரத்யேக சான்றாக இருப்பவர்கள் சைவ சமய ஆச்சார்யர்கள் நால்வருமே.

**விளக்கவுரை (5-6)**

சமயங்கள் அனைத்தும் பரம்பொருளை அடைவதற்கு வழியைக் காண்பித்தாலும், முடிவில் சென்று அடையும் இடம் ஒன்றுதான் என்பதை உணராததால், சமய சச்சரவுகள் தலை தூக்கி நிற்கின்றன. இந்தப் பகைமை நீங்கி, உணர்வு மலர்ந்து, உள்ளம் நெகிழ்ந்து, தன்முனைப்பு கெட்ட இடத்தில் முருகப்பெருமானின் திருவடி ஞான அநுபவமாய் காட்சி அளிக்கிறது. கந்தக்கடவுள் பரமசிவருக்கு உபதேசித்த சமயம், அவருக்கு இந்த நிலை ஏற்பட்டது என்பார் அருணகிரியார்.

இக்கருத்தை, 'சயிலாங்கனை' எனத்தொடங்கும் மதுராந்தகத்து வட திருச்சிற்றம்பலம் திருப்புகழில்,

"சதிதாண்ட வத்தர் சடையி டத்துக்
கங்கை வைத்த நம்பர் உரைமாளச்
செயல்மாண்டு சித்த மவிழ நித்தத்
த்வம்பெ றப்ப கர்ந்த உபதேசம்" - என்கிறார்

உணர்வு அவிழ, உளம் அவிழ, உயிர் அவிழ உணர்வு அவிழ்தல் என்றால், பார்த்ததை எல்லாம் உணராத படி விடுதலை பெறும் முறையில் மலர்ச்சி அடையும் நிலையே உணர்வு அவிழ்தல் ஆகும். உள்ளம் - உள் நின்று காரியங்களைச் செய்வதால் இதற்கு அந்தக்கர்ணம் என்று பெயர். மெழுகு அனலில் கரைவது போல் அது உருக வேண்டும். 96 தத்துவங்களும் கடந்த இடத்தில் பாசம் நீங்கி - இருவினை ஒப்பு மல பரிபாகம் - எய்த உயிர் தனை விடுவதே - உயிர் அவிழ என்கிறார். உயிர்களோடு கலந்து அத்துவிதமாயும் எல்லாம் தன்னுள் அடங்கிய எல்லை இல்லாத சிவமயமாய் நிற்கும் நிலையே அநுபூதி நிலை.

இதற்கு முன் வரிகளில் திருவடியின் தியானத்தைப் பற்றி கூறிய அருணகிரியார் அந்த தியானத்தினால் ஏற்படும் சிவயோகத்தின் முதிர்வில் கிடைக்கும் மௌன சாம்ராஜ்ய இன்ப அநுபவத்தை இவ்வரிகளில் கூறியுள்ளார்.

கீழ்கண்ட வரிகளை ஆழ்ந்து ஆராய்ந்தால் பெரும் உண்மை தெரிய வரும்

1. ''திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே'' (கருப்பற்றூறி திருப்புகழ்)

2. ''சராசர வியாபக பராபர மநோலய
சமாதிய நுபூதிபெற நினைவாயே'' (இலாபமில் திருப்புகழ்)

3. ''யுகஇறு திகளிலு மிறுதியி லொரு பொருள்
உள்ளக்க ணோக்கு மறிவூறி
ஒளிதிக ழுருவுரு வெனுமறை யிறுதியி
லுள்ளத்தை நோக்க அருள்வாயே'' (ககனமு திருப்புகழ்)

வேதத்திலும், சித்தாந்தத்திலும் கூறப்படும் அநுபூதி நிலை ஒன்றேயாகும். இந்த உண்மையை அறிந்தவர்களே சித்தர்கள் என்ற கருத்தை தாயுமானவர், - வேதாந்த சித்தாந்த சமரச நன்நிலை பெற்ற வித்தக சித்தர் கணமே - என்பார்.

**விளக்கவுரை (7 - 8)**

நமக்கு பிறவியினால் வரும் சொந்த பந்தங்களைத் தவிர திருமண மூலமாக மற்றுமொரு கிளை ஆரம்பமாகிறது. இந்த சங்கிலித் தொடரில் முதல் சங்கிலி மனைவி. அவள் மூலமாக மக்கள், இதையே மனைவி மகவு என்கிறார் அருணகிரியார்.

நம் மனம் சதா பாவ காரியங்களையே எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பதினால் அதில் அழுக்கு படிந்து விடுகிறது. இதனால் பிறவிக்கடலாகிய அழுக்குக் கடலில் மூழ்கி விடுகிறோம். ஏழு பிறவிக் கடலிலிருந்து ஏற்றி விடும் நற்கருணை ஓடக்காரனான முருகப்பெருமானின் மணம் நாறும் சீறடிகளே நாம் சேருவதற்க்குறிய தெப்பமாகும். இக்கருத்தை கந்தர் அந்தாதியில் - அனக புரி வாசல் நீக்க திறவு ஆ - என்பார்.

அதையே இங்கு ஞானம் அடைய வாசலாக திகழ்கிறார் முருகப்பெருமான் என்கிறார் - ''எனது ஆவி கவர் சீர் பாதம்'' - என்பார் ''காதோடு'' எனத் தொடங்கும் திருமாகாளம் திருப்புகழில்

**விளக்கவுரை (9 - 10)**

கொன்றை மலர் இறைவன் பிரணவ சொரூபி என்பதை விளக்கும் திரு அடையாள மாலையாகும். ஆயிரம் முகங்களை உடைய கங்கை நதி ஆங்காரத்துடன் உலகை அழிக்க வரும் போது, உலகைக் காக்கும் பொருட்டு வேகம் கெடுத்து ஆண்ட வேந்தனாகிய பரமன் அறுகு நுனி பனி போல தனது சடையில் வைத்துக்கொண்டான். இது ஜீவாத்மாக்களின் ஆங்காரத்தை அடக்கி பரமன் தன்னுள்ளே சேர்த்துக் கொள்வதை குறிக்கிறது. உயிர்களின் மூல உஷ்ணத்தை தணிப்பதற்கு அடையாளமாக அறுகையும் பரிக்கிரக சக்தியாகிய சர்ப்பங்களை ஏவல் இட்டு, அனுப்புவது தான் என்பதைக் காட்ட சர்ப்பங்களையும், சரணாகதியாக தன் காலில் விழுந்தவரையும் காப்பாற்றுவது தான் என்பதை காட்ட தசஷ யாகத்தில் சபிக்கப்பட்ட சந்திரனை தன் தலையில் தாங்கிக் கொண்டிருப்பதையும் காணலாம். எல்லா ஆக்கங்களையும் கொண்டிருந்தும் பற்றற்றவன் என்பதைக் காண்பிக்க ஜடா முடியனாக இறைவன் உள்ளான், சிவன் அகார ரூபன். தேவி உகார வடிவினள், மயில் மகாரம். இங்கு ஓங்காரத்தின் எதிரொலி வருகிறது. இந்த ஓங்காரத்தின் நடு பீடத்தில் ஆனந்தமாக முருகன் ஆடல் புரிகிறான்.

**விளக்கவுரை (11 - 12)**

முருகப் பெருமான் மெல்ல தள்ளாடி தள்ளாடி வருவது சூசகமான எதிர் காலத்தைக் குறிக்கிறது. தூக்கி எடுக்கும் திருவடி எதிர் காலத்தில் இந்திரனைத் தூக்கி விண்ணில் குடியேற்றப் போவது. ஊன்றிய திருவடி அவுணர் குலத்தை நிலத்தோடு நிலமாக தேய்க்கப் போவது. திருவடிகளின் அதிர்ச்சியில் உலகையே தாங்கும் ஆதிசேஷனின் ஆயிரம் பணாமுடிகள் துன்பப்பட்டாலும் உயிர்களுக்கு எந்த விதமான இன்னலும் நேரவில்லை என்பது தெரிகிறது ''மண்கமழ்'' எனத் தொடங்கும் கந்தர் அலங்காரப் பாடலில்,

''வேலெடுத்துத் திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை திருவரையிற்
கிண்கிணி யோசை பதினா லுலகமுங் கேட்டதுவே''

முருகன் நாதத்தத்துவம். ஆகையால், அந்த ஓசைகள் அண்ட சராசரங்கள் அனைத்தும் ஒலிக்கின்றன ''மூலங்கிள'' எனத்தொடங்கும் பழநித் திருப்புகழில்,

''காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய வோசையு மேயுக
காலங்களி னோசைய தாநட மிடுவோனே'' என்பார்.

**விளக்கவுரை (13 - 14)**

இரண்டு பேரும் கனியைக் கேட்டால் சிவபெருமான் கனியை இரண்டாக்கி தர முடியாதவரா?. ஆனால் அது சாதாரண கனி அன்று. அது பூரண ஞானம். ஞானத்தை இரண்டாகப் பிரிக்க முடியாது. உலகத்தின் ஆதி கர்த்தாவாகிய சிவபிரானால் இன்னொரு கனியை சிருஷ்டித்துத் தர முடியாதா? இந்தப் போட்டியின் உண்மையான தத்துவத்தின் தன்மையை புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த விளையாட்டின் மூலம் உலகத்திற்கே ஒரு பெரும் தத்துவத்தை உணர்த்துகிறார். சராசரமும் தம்முள் அடங்கியது என்பதை கணபதியும், தாம் பிரபஞ்சம் முழுவதும் நீக்கமற நிறைந்திருப்பதை இளைய பிள்ளையாரும் காண்பிக்கிறார்கள்.

கணபதி சாத்வீக ஆகாரங்களை உண்டு ஒப்பில்லாத வலிமை படைத்துள்ளார் என்பது சாத்வீக உணவின் வல்லமையை உறுதி செய்கிறது.

**விளக்கவுரை (15 - 16)**

அச்சம் விளைவிக்கும் பெரும் காட்டில், தன்னுடைய அடியாரானவளும், தன்னால் முன்பு வரம் கொடுக்கப்பட்டவளுமாகிய வள்ளிப் பிராட்டியை ஆட்கொள்ள வந்த விதத்தில் முருகனுடைய எளிமை கூறப்பட்டது.

''பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை விரும்பும் குமரனை''

- எனும் கந்தர் அலங்கார அடிகளில் இக்கருத்தைக் காணலாம். பத்திப் பயிரை வளர்ப்பது சாதாரண காரியம் அன்று. காமம், குரோதம் போன்ற பறவைகள் பயிரைத்தின்ன வரும் போது, வைராக்கியம் என்னும் கவணில், முருகக் கடவுளின் திரு நாமாக்கள் என்னும் கற்களை வைத்து பறவைகளைத் துரத்துகிறாள் வள்ளிப்பிராட்டி.

''மேவியபு னத்திதணில் ஒவியமெ னத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக் காரனே'' (திரு வேளைக்காரன் வகுப்பு)
''ஒமெழுத்தி லன்பு மிகவூறி
ஒவியத்தி லந்த மருள்வாயே'' (காமியத்தழுந்தி திருப்புகழ்)

**விளக்கவுரை (17 - 18)**

சில பயிர்கள் குறுகிய காலத்தில் பலனைத் தரும். சில பயிர்கள் பலனைத் தர பல வருடங்கள் ஆகும். அதுபோல வினைகளும் தத்தம் வலிமை, எளிமைக்கு ஏற்றபடி அந்தந்த கால கட்டத்தில் வினைப் பயனைத் தரும். இதையே - முதலவினை - என்கிறார்.

முன் செய்த வினைகளே சஞ்சித பிராரப்த கர்மங்களாய் வரும். இக் கர்மாக்களை அனுபவிக்கக் காரணமாகிய இந்த உடம்பு இன்ப துன்பங்களை அனுபவித்து முடிந்தவுடன் உயிர் தினை அளவுகூட உடம்பில் நிலைத்து நிற்காது. பட்டினத்தார் சொல்லுவார்.

வினைப் போகமே இத்தேகம் கண்டாய்
வினை தான் ஒழிந்தால் தினைப் போதளவு
நில்லாது கண்டாய் என்று.

ப்ராரப்த கர்மாக்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் போதே மேலும் மேலும் ஆகாமிய வினைகளை ஏற்றிக் கொண்டே போகும் உயிரை உடலிலிருந்து பிரித்துச் செல்வதற்கு பயங்கரமான கோலத்துடன் எம தூதர்கள் வருகிறார்கள். சூக்கும பாசத்தால் சுவாசத்தில் கோத்து இழுத்துக் கொண்டு கொல்லும் சமயம், நமக்குத் துணையாக யார் வருவார்கள்? அப்போது முருகப் பெருமானின் திருவடிகள் கால தூதர்களை விரட்டி, ஞான மார்க்கத்தில் செலுத்தி, சாயுச்சிய பதவிக்கு கொண்டு செல்கின்றன. தன் அடியார்களைப் பிடிக்க எமனே நேரில் வந்தாலும்,

"அந்தகனும் எனை அடர்ந்து வருகையினில்
அஞ்சல் என வலிய மயில் மேல் நீ
அந்த மறலியோடு உகந்த மனிதன் நமது
அன்பன் என மொழிய வருவாயே" (தந்த பசி திருப்புகழ்)

என்பார். வேண்டுவோர் வேண்டுவன ஈவதில் முருகனுக்கு இணை முருகனே. இக்கருத்தை ஆதிசங்கரரும் சுப்ரமண்ய புஜங்கத்தில் புகழுகிறார். எம பயத்தைக் கடப்பதற்கு உபதேச மூலமாக ஒரு சூழ்ச்சி கற்று தருகிறார்.

பெருத்த வசன வகுப்பில், "இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை அருள்வதும்" என்பார்.

முருகனுடைய வள்ளல் தன்மையை - "யார் வேண்டினாலும் கேட்ட பொருள் ஈயும் தியாகாங்க சீலம் போற்றி" - எனவும் அடியவர்களின் பகையை முருகன் அழிப்பதை தேவேந்திர சங்க வகுப்பில் 'பகையாமாந்தரர்கள் அந்தகன்' என்கிறார்.

**விளக்கவுரை (19 - 20)**

தெய்வீக வண்டுகள் முருகப் பெருமானின் திருவடிகளில் விளங்கும் சிவ ஞான அமுதைப் பருகுவதற்காக மொகு மொகு என திரண்டு நிற்கின்றன. குரா மலரை ஞான ஆச்சாரியன், தனது சீடர்களுக்கு உபதேசம் செய்யும் வேளைகளில் தரிக்கக் கூடியதாகையினால், **தான் ஒருவனே** எல்லாரையும் விட உயர்ந்த குருபரன் என்பதை விளக்க, குரா மலர் மாலையையும், செந்தமிழில் விளவு என்றால் கலப்பு எனும் பொருள், ஆதலால் உயிர்களை இறுதியில் தன் திருவடி நிழலில் கலக்கச் செய்து கொள்பவன் நானே என்பதை விளக்க விளாந்தளிரையும், பேரானந்தத்தை தருபவன் தானே என்பதைக் காண்பிக்க மகிழ மலரையும், மும்மலங்களால் பிணையப்பட்டு வாடும் உயிர்களை, முழுமை அடையச் செய்பவன் தானே, என்பதால் முழு நீல மலரையும், மாயா மண்டலம் தன் ஆட்சியில் அடங்கி, விரிந்து சுருங்குவது என்பதை விளக்க கருங்குவளை மலரையும் தரித்திருக்கிறான் கந்தப் பெருமான்.

**விரத முநிவர்களின் நிலை**

மனம் லோக விஷயாதிகளின் சென்று சலியாமலும், ஒருமை நோக்கத்துடன் பிறக்கும் போது நேர்ந்த பிறப்பொன்றும், குரு தீட்சையால் ஏற்பட்ட பிறப்பொன்றும் ஆக இரு வகைப் பிறப்பினையும் ஆராய்ந்து காலை, பகல், மாலை எனும் முச்சந்திகளிலும் ஜெபம், தர்ப்பணம், அநுஷ்டானம், ஹோமம் எனும் செயல்களை எல்லாம் தவறாமல் செய்து, நான்மறைகளை ஓதி, நீத்தார் வழிபாடு, தெய்வ வழிபாடு, அதிதி பூஜை, சுற்றத்தாருக்கு உணவு அளிப்பது பின்னர் தன் பசி ஆற்றுவது என்று சொல்லப்படும் ஐந்து வகை வேள்விகளை ஆற்றி, பிரணவத்தை சதா தியானம் செய்து கொண்டு, சிவ புண்ணியத்தால் தானும் வாழ்வாங்கு வாழ்ந்து, பிறரையும் வாழ்விப்பவரே விரத முனிவர்கள்.

இதைக்கண்டு மகிழ்ந்து, அவர்களின் தவப்பயனாகக்காட்சி கொடுப்பது, முருகப்பெருமானின் சீறடிகள்.

பூத வேதாள வகுப்பில், ''அப்படி பத்தி பழுத்த மனத்தினர் அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்'' என்பார் அருணகிரியார்.

**விளக்கவுரை (21 - 22)**

ஒவ்வொரு நாமத்துடனும் பிரணவத்தை முதலிலே சேர்த்து நம என்று முடிப்பது மரபு. பாடப்பாட பத்தி பெருக்கால் தன்னை மறந்து உடலும் ஆடத் தொடங்கும். ஆரம்பத்தில் முழுதுமாக வந்த சொற்கள், பின் தெளிவற்று குழறத் தொடங்கும். அடியார்களின் இன்பக் கண்ணீராகிய அருவியே அறுமுகனுக்கு திருமஞ்சன நீராகும். அந்த அருவியிலே குளித்தபடியே அடியார்களை பெருங் குரலிட்டு அழைத்து, ஆண்டு கொள்கிறது திருவடி என்பது கருத்து, மற்றுமொரு நுண்ணிய கருத்தும் காணக்கிடக்கிறது. கண்ணீர் வெள்ளத்தில் பரமனின் திருவடிகள் மூழ்கினவுடன் ''தான் மூழ்குகின்றேனே கை கொடுத்து என்னை மீளுங்கள்'' என்று கூப்பிட, அந்நிலை கண்டு நெருங்கிய அடியார்களைத் தன்னுடன் அன்போடு ஆண்டு கொள்கிறான் சண்முகப் பெருமான், முன் கூறியது அற வழி. பின்பு வருவது மற வழி அதாவது அன்பு வழி.

முருகு என்கிற சொல் ம்-ர்-க் என்கிற எழுத்துடன் உ கரம் சேரும் போது உண்டாகிறது. இம் மூன்றெழுத்தில் வல்லினம், இடையினம், மெல்லினம் எனும் மூன்று வகைகளும் வருவது சிறப்பு. மூன்று விதமான ஆத்மாக்கள், மெலிந்தவராகிய சகலர், இடைப்பட்டவராகிய விஞ்ஞாகலர், வலியவராகிய பிரளயாகலர் எனும் இம்மூன்று வகையினரையும், வேறுபாடு இன்றி, ஆளும் தெய்வம் குமார தேவனே என்பதைக் காண்பிக்க மகரம், ரகரம், ககரம் சேர்ந்து வருவதே முருகு நாமம். குமரன் என்பதற்கு பல பொருட்கள் இருப்பினும் இங்கு குச்சிதங்களான அறு பகைகளை வெல்லுபவன் என பொருள் கொள்ளலாம். சரவணன் என்பதற்கு நாணல் படுக்கையிலே ஜெனித்தவன் என்பது பொருள். தர்ப்பைக்கு மின்சார சக்தியை கடத்தும் ஆற்றல் உண்டு. ஆதலால் சிவ பெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து வந்த அந்த மின் ஆற்றல் தர்ப்பையில் தங்கி, உலகம் உய்ய, சண்முகப்பெருமானாக முருகன் அவதாரம் செய்கிறான். பாம்பன் சுவாமிகளின் கருத்துப்படி, ச-மங்களம், ர-ஒளி- வ- அமைதி, ண - வீரம் என்பது பொருள். ஷடாட்சரம் உச்சரிக்கும் போது ணகரம் சரியாக உச்சரிக்கப்பட வேண்டும். ஆறுமுகங்களில் கீழ்நோக்கும் - அதோ முகம் - மேல் நோக்கும் - ஈசான முகம் - மேற்கு நோக்கும் - சத்யோ ஜாத முகம் - கிழக்கு நோக்கும் - தத்புருட முகம் - தெற்கு நோக்கும் - அதோ முகம் - வடக்கு நோக்கும் - வாம தேவ முகம் - அமைந்து விளங்குகின்றன. கந்தர் கலி வெண்பாவின் படி இப்படி ஒரு பொருளையும் காணலாம். சூரனைக் கடிந்து அசுரர்களை அழித்த முகம் ஒன்று. உயிர்களின் பழவினையை நீக்கி அழியாப் பேரின்பம் அளிப்பது ஒரு முகம். வேதாகமங்களை இயற்றுவது ஒரு முகம், பாச இருளை அகற்றி பேரொளியாக விளங்குவது ஒரு முகம். இரு தேவிமார்களுக்கும் பேரின்பம் அளிப்பது ஒரு முகம். தன் திருவடிகளை நாடுவார்களுக்கு வரமளிப்பது ஒரு முகம். அநுபவிகள் அவரவர்கள் திருஷ்டிக்கு தக்கவாறு எந்த நிலையில் கண்டார்களோ அதை வர்ணித்திருக்கிறார்கள். ஆகையால், திருமுருகாற்றுப்படையில் வேறு விதமாக கூறி இருப்பதைப் பார்த்து, ஒருவருக்கொருவர் கருத்துக்கு முரண்பாடு உள்ளதே, என குழம்பி விடக்கூடாது. இதை, ''அளக பார'' எனத்தொடங்கும் திருச்செந்தூர் திருப்புகழில்,

"உருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்கழல் தருவாயே" - என்பார்.

**விளக்கவுரை (23 - 24)**

முதல மொழிவன என்பதற்கு ஒரு உட்பொருள் காணலாம். ஆண்டவன் முதன் முதலில் அடி எடுத்துக் கொடுத்த - முத்தைத் தரு - சொல்லை வைத்துப் பாடிய திருப்புகழை சூடி இருப்பது சீறடியே. ஒருவன் நல்ல விருந்து சாப்பிட்ட பின், சில நேரம் கழித்து, சாப்பிட்ட இனிப்பு பண்டத்தின் ஏப்பம் வருவது போல, மௌனமாகிய இன்ப நிலையில் திளைத்து வெளி முகமாக வந்த பின் தான் அநுபவித்த இன்ப உணர்வு அருள் வாக்காக வெளி வருகிறது. இவையே நம்மை வழி காட்டும் திரு நெறியாகும். வேதத்தில் வரும் உபநிஷத்துக்கள் எல்லாம் இப்படிக் கிடைத்தவைகளே.

திருவருணையில் கோபுரத்து இளையனார் தரிசனம் தந்து - சும்மா இரு சொல் அற - என மௌன உபதேசம் செய்த பின், அருணை முனிவருக்கு மோன நிலை கிடைத்து விடுகிறது. எல்லாம் அற தன்னை இழந்த நலத்தில் அவர் வெகு நாட்கள் இருந்ததைக் கண்ட முருகப்பெருமான் அவரை எழுப்பி, அவருடைய ஆத்ம ஞான அநுபவங்களை எல்லாம் உலகினர் உய்யும் பொருட்டு, திருப்புகழ்ப் பாக்களாக பாட வைத்தார். மொட்டாக இருந்த நிலை மலராக மலர்கிறது. மொட்டில் இருக்கும் போது பூஜைக்கு உதவாது. உள்ளிருக்கும் தேனும், வண்டுகளுக்கு உதவாது. அருணகிரியாரின் அநுபவ மொட்டு, திருப்புகழ் மலராக மலர்ந்த பின் வழிகாட்ட உதவுகிறது, மெய்ஞானம் வேண்டி வரும் அடியார்களுக்கு வழி காட்டியாக உதவும் தான் புனைந்த கவி மாலையை முருகன் உவப்போடு அணிந்து கொண்டதை, "இல்லே" எனத்தொடங்கும் கந்தர் அநுபூதி பாடலில், வாகுவில் என் சொல்லே புனையும் சுடர் வேலவனே" என்பார் அடிமை சொல்லும் தமிழ்பன்னீர் - இந்தத் திருப்புகழ் பாக்கள் முருகனுக்கு.

**விளக்கவுரை (25 - 26)**

அருவி பாயும் மலை போன்ற தோற்றம் கொண்டு, மதம் பாயும் கஜேந்திரனை யானை என்கிறார். அவ்வளவு பெரிய யானை நீராடப் புகுந்த தடாகமும் அதற்கேற்ப நீளம், அகலம், ஆழத்திலும் பெரிய மடு என்பதைக் குறிக்க நெடிய மடு என்கிறார். முனிவரின் சாபத்தினால் நெடு நாள் வாழ்ந்த முதலை என்பதால் முது முதலை என்கிறார். மண்ணில் யானைக்கு பலம் அதிகம் எனினும் தண்ணீரில் முதலைக்கே பலம் அதிகம். யானை ஆழத்திற்கு சென்று விட்டதினால், இக்காட்சியை மடு நடு என்கிறார். முதலையின் பிடியிலிருந்து மீள முடியாமல் மரண பயம் வந்து விட்டதால், அச்சம் கொண்டு தன்னுடைய வழிபடு தெய்வமாகிய நாராயண மூர்த்தியை அந்த யானை வீரிட்டு அழைத்தது, என்பதை ஒரு விசை ஆதி மூலமே என கூறியது என்கிறார். அவ்வளவில் இடர் தீர்க்க எளிமையும், கருணையும் உடையவன் என்பதை கருணை வரதன் என்கிறார். யானைக்கு முதலையின் பிடியிலிருந்து விடுதலையும், அகத்தியரால் யானைக்கு இருந்த சாபத்தின் விடுதலையும் தந்து வைகுண்ட பதவி அளித்தும்தேவர் முனிவரின் சாபத்தால் "ஊகு" எனும் கந்தர்வன் முதலையாய் இருந்ததால் அவனை அழிக்கும் சாக்கில் அவனுக்கு சாப விடுதலை தந்த அருமையை எண்ணி

திருமாலை வரதன் என்கிறார். எப்படையாலும் இறவா வரம் பெற்ற இரணியனை நகத்தின் நுனியால் கிழித்து கொன்றதை "நுதி உகிரின் வகிரும் அடல் அரி" என்கிறார். கருணை வரதன், மேகம், குரிசல் என்றெல்லாம் புகழப்படும் திருமாலின் மருகன் எங்கள் முருகன் என்று பெருமை கொள்கிறார் அருணை முநிவர். கஜேந்திரனை மரணம் நெருங்கிய காலத்திலும், சிந்தனை வழுவாது ஒரே மனத்துடன் திருமாலைத்தியானித்ததை, "அருண மணி" எனத் தொடங்கும் திருச்செந்தூர் திருப்புகழில்,

"செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென
முந்தச் சிந்தித் தருள்மாயன்" என்பார்

**விளக்கவுரை (27 - 28)**

சூரபத்மனின் திக்விஜயம் முதல் போரில் முந்தி வருபவன் தாரகாசுரன், ஆதலால் அவனை வரு தாரகாசுரனும் என்கிறார். போரில் முந்திய படியயே அவனே முதல் கள பலியாகவும் ஆகிறான். உயிர்களுக்கு அளவில்லாத துன்பங்கள் அளித்து வந்த அசுர தாரகன் ஞான தாரகனாகிய முருகப் பெருமானை நினையாத வண்ணம் பய மூட்ட வந்தான், ஆதலால் இறைவனின் திருப்பெயர் தாங்கி வந்து தீமை புரியும் அவனை ஞான சக்தியாகிய வேல்படை அழித்து விடுகிறது. மருள் ஒழிந்தால் அல்லாது அருள் விளையாது.

இதே போல் தக்கன் வேள்வியை அழிக்கச் சென்ற பூத கணங்களுக்குள், ஒரு பூதம் வித்யாதரர்களுக்கு இருப்பிடமான வடசேரி தென்சேரி இரு வெள்ளி மலைகளை வழியில் கண்டு சிவபெருமான் எழுந்தருளிய மலையின் பெயர் இவைகளுக்கு கூடாது என்று எண்ணி, அம் மலைகள் இரண்டையும் எடுத்து தன் செவியில் குதம்பை எனும் ஆபரணமாக அணிந்து சென்றது என ஒட்டக்கூத்தர் கூறுகிறார்.

தாரகனை மாயா பலம் எனவும், அசுரப் படைகளை குண விருத்தங்கள் எனவும், கிரவுஞ்சம் முக்குண விகர்ப்பம் எனவும் பாம்பன் சுவாமிகள் கூறுவார். அண்டத்திலும், பிண்டத்திலும் உள்ள அசுர கூட்டங்களை ஆறுமுகன் அழிக்கிறான். இந்தப் போருக்குப்பின் உயிர்களுக்கு அமைதி அளிக்க தணிந்து நிற்கிறான் தணிகேசன். குருபதி உயிர்கள் உய்வு பெற உபதேசிக்கும் திருமால்,இந்திரன், பிரமன், உபமன்யன், தபனன், நந்தி, முருகன் எனும் ஏழு குருமார்களில் குமரனே பரம ஆச்சார்யனாக இருப்பவன். ஆகையினால் அனைவரும் சுப்ரமணியனையே வழிபட வேண்டும் என்பதை விளக்க சிவபெருமானே தணிகையில் ஞானோபதேசம் கேட்டு நந்தி ஆற்றங்கரையில் வீராட்டகாச மூர்த்தியாக பெற்றுத் திகழ்கிறார். துந்துபி முதல் நகுலீஸ்வரர் வரை உள்ள யோக குருக்கள் 16 பேர்களுக்கும் பரம குரு குமரனே என கூர்ம புராணம் கூறுகிறது. சிவபெருமான் கேட்க, முருகன் உபதேசம் செய்வதை "மருவு மஞ்சு" எனத்தொடங்கும் திருவிரிஞ்சை திருப்புகழில்,

"அரிவி ரிஞ்சர் தேட அரிய தம்பி ரானும்
அடிப ணிந்து பேசி கடையூடே
அருளு கென்ற போது பொருளி தென்று காண
அருளு மைந்த ஆதி குருநாதா"

**விளக்கவுரை (29 - 32)**

ஒடுங்கிய இடத்திலிருந்தே எல்லாம் உதயமாம் எனும் சித்தாந்த கருத்தின்படி, தேவி இடத்தில் தனு, கரண, புவன போகங்கள் அனைத்தும் தோன்றி இறுதியில் அவளிடத்திலேயே ஒடுங்குவதினால் அவளை பவதி என்று அழைக்கிறார். உ - ம - அ எனும் எழுத்துக்களின் சேர்க்கையே உமை என்கிற பெயர் ஆகையினால் அவள் பிரணவ வடிவினள் என்பதைக் குறிக்கிறது. தேவியின் திருக்கரத்தில் தாமரை மலரை ஏந்தி இருப்பதால், அவள் இதயத் தாமரையில் வீற்றிருப்பவளாதலினாலும், அவளை வநசை என்கிறார். அநுபவன் என்றால் உயிருக்குத் துணையாய் இந்த கலியுகத்தின் கண்கண்ட தெய்வம் என்பது பொருள். கடைசி இரண்டு அடிகளில் கிழவன் எனத் துவங்கி இளந் திருவடிகள் என கூறி நகைச்சுவை உணர்வைக் காட்டி முடிக்கிறார் அருணை முனிவர். கிழவன் என்ற சொல்லுக்கு உரிமை என்பது பொருள். மலை கிழவன் என்றால் மலைகளுக்கு உரியவன் என்பது பொருளாகும். தன் வேர்களால் பூமியைத் தாங்குகின்றன மலைகள். மலைகளுக்கு உரியவன் என்பது எல்லா உயிர்களையும் தாங்குபவன் முருகன் என்பதே குறிப்பு. மலைப்பை விளைவிப்பதினால் மலை என்று பெயர் பெற்றது. அம்மலைக்குரிய கந்தனின் புகழும் மலைப்பை விளைவிக்கிறது. இக்காரணத்தால் தான், முனிவர்கள் அமைதியாக தவம் புரிய, மலைகளை நாடுகிறார்கள். அந்த இறைவன் அங்கு அவர்களுக்கு அநுபவமாகிறான், பயமகற்றி அமைதி தருகிறான். அவனது திருவடிகள் அறிவின் பூரணமாக வேதங்களின் அனைத்து பாகங்களிலும் அருள் மணம் கொழிக்கின்றன.

**தொகுப்புரை :**

திருமால் மருகன், உமையாள் குமரன், குறிஞ்சிக் கிழவன், அநுபவமாக வருபவன், அச்சம் அகற்றுபவனாகிய முருகனின் நான்மறைகள் முழுவதும் மணம் கொழிக்கும் இரண்டு இளம் திருவடிகள் - அகண்ட இருள் அகற்றி பேரொளி வீசுவன, சிவயோக சாதனையர் உள்ளத்தில் காணக் கிடைப்பன, பசு ஞானம் கெட்டவர் அநுபவத்திற்கு அநுபூதியாவன, பிறவிக்கடலில் இருந்து உயிர்களைக் கரையேற்ற மரக்கலமாய் வருவன, எல்லாவற்றையும் சாட்சி ரூபமாய் பார்த்துக் கொண்டிருப்பன, உயர்ந்த வானவர் தலைகளில் உறைவன, என்றும் நித்தியமாக இருப்பன, இழிந்த எனது மனத்திற்கு இன்பம் அளிப்பன, சிவபிரான் மகிழ உமையாள் தழுவும் திருமார்பில் ஆனந்தமாக ஆடுவன, அறமும், மறமும் அளவு இல்லாத ஆற்றலும் காட்சியாக இளைய தளிர் நடை பழகி விளையாடல் புரிவன, எண்ணும் அடியவர் நினைக்கும் இடங்கள் எங்கே இருப்பினும் அக்கணத்திலேயே அங்கே சென்று அருள வல்ல வல்லமையையும் உயிர்களைக் கரையேற்றுவதற்கு காரணமாகவும் இருப்பன, காப்பவன் நானே என உயிர்களுக்கு காட்டும் வகையில் வள்ளியின் தினைப் புனத்தில் உலாவுவன, அடியவரை நெருங்கும் எம படரைத் துரத்துவன, நிஷ்காமியமாக அருள் மார்க்கத்தை நாடுபவர்களுக்கு அருள் புரிவன, காமிய பக்தி உடையவர்களுக்கு நினைத்த காரியம் அநுகூலமே புரிவன, அடியவர்களுக்கு நேரும் புறப்பகை, அகப்பகைகளை அழிப்பன, தெய்வ லட்சணம் இலங்கும் படி மணங்கமழ மாலைகளை சூடுவன, எவரவர் இருந்திடத்தும் ஒருவன் இவன் என்று சொல்லும்படி அடியவருக்கு சர்வ முதன்மை தருவன, தவத்தின் பயனாக வருவன, உள்ளம் உருகும் அடியவரின் ஆனந்தக் கண்ணீரில் மூழ்குவன, அன்பர்களை வருக வருக என கூவி அழைத்து அருளுவன, மௌன ஞானிகள் பாடும் அன்பு கசியும் மணப் பாமாலைகளை சூடுவன என்றெல்லாம் சுப்ரமண்யப் பரத்துவத்தை பாடுகிறார் நமது அருணை முனிவர்.

# 2. தேவேந்திர சங்க வகுப்பு

## அறிமுகம்

மணி மந்திர ஔஷதத்தில், தேவேந்திர சங்க வகுப்பு, மந்திரம் போன்றது. வள்ளிமலை ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள், ஸ்ரீ வித்யாவில் மிகவும் சிறப்பான சாம்பவி முத்திரை இவ்வகுப்பில் உள் முகமாக பதிந்து இருப்பதாக கூறுவார்.

தன தன தன தன தன தன தன தன
தன தன தன தன
தானாந்தன தந்தன தானாந்தன தந்தன

## மூலம்

1. தரணியி லரணிய முர ணிர ணியனுடல்
தனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி யோடேந்துப யங்கரி

2. தமருக பரிபுர ஒலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை

3. சரிவளை விரிசடை யெரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர அம்பிகை

4. தருபதி சுரரொடு சருவிய அசுரர்கள்
தடமணி முடிபொடி
தானாம்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி

5. இரணகி ரணமட மயின்ம்ருக மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்

6. இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர்
எனதுயிர் கொளவரின்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொ ளுங்குயில்

7. இடுபலி கொடுதிரி யிரவலர் இடர்கெட
விடுமன கரதல
ஏகாம்பரை யிந்திரை மோகாங்கசு மங்கலை

8. எழுதிய படமென இருளறு சுடரடி
யிணைதொழு மவுனிகள்
ஏகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி

9. கரணமு மரணமு மலமொடு முடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்

10. கனலெரி கணபண குணமணி யணிபணி
கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

11. கனைகழல் நினையலர் உயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ முங்கழு நீர்தோய்ந்த பெருந்திரு

12. கரைபொழி திருமுக கருணையி லுலகெழு
கடனிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன்

13. அரணெடு வடவரை யடியொடு பொடிபட
அலைகடல் கெடஅயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்கும ரன்குகன்

14. அறுமுக னொருபதொ டிருபுய னபினவ
னழகிய குறமகள்
தார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்கள் அந்தகன்

15. அடல்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்

16. **அதிபதி யெனவரு பொருதிறல் முருகனை**
**அருள்பட மொழிபவர்**
**ஆராய்ந்து வணங்குவர் தேவேந்திர சங்கமே**

## (பாடல்) சொற்பிரிவு (2)

1. தரணியில் அரணிய முரண் இரணியன் உடல்
தனை நக நுதி கொடு
சாடு ஓங்கு நெடுங் கிரி ஓடு ஏந்து பயங்கரி

2. தமருகம் பரிபுரம் ஒலி கொடு நடம் நவில்
சரணிய சதுர் மறை
தாது அம்புய மந்திர வேதாந்த பரம்பரை

3. சரிவளை விரிசடை எரிபுரை வடிவினள்
சததளம் முகுளித
தாமம் குசம் மென் திரு தாள் அந்தரம் அம்பிகை

4. தருபதி சுரரொடு சருவிய அசுரர்கள்
தட மணிமுடிபொடி
தான் ஆம்படி செங்கையில் வாள் வாங்கிய சங்கரி

5. இரணம் கிரணம் மடமயில் ம்ருகமதம்
புளகிதம் இளமுலை இள
நீர் தாங்கி நுடங்கிய நூல் போன்ற மருங்கினள்

6. இறுகிய சிறுபிறை எயிறு உடை எம படர்
எனது உயிர் கொள வரின்
யான் ஏங்குதல் கண்டு எதிர் தான் ஏன்றுகொள்ளும் குயில்

7. இடு பலி கொடு திரி இரவலர் இடர்கெட
விடும் மனம் கர தலம்
ஏகாம்பரை இந்திரை மோகாங்க சுமங்கலை

8. எழுதிய படமென இருள் அறு சுடர் அடி
இணை தொழும் மவுனிகள்
ஏகாந்த சுகந்தரு பாசம் அங்குசம் சுந்தரி

9. கரணமும் மரணமும் மலமொடு உடல் படு
கடு வினைகெட நினை
கால அந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சு உமிழ்

10. கனல் எரி கண பணம் குணமணி அணி பணி
கன வளை மரகத
காசாம்பரம் கஞ்சுளி தூசு ஆம் படி கொண்டவள்

11. கனை கழல் நினையலர் உயிர் அவி பயிரவி
கவுரி கமலை குழை
காதார்ந்த செழும் கழுநீர் தோய்ந்த பெரும் திரு

12. கரை பொழி திருமுக கருணையில் [illegible]கெழு
கடல் நிலை பெற வளர்
காவு ஏந்திய பைங்கிளி மா சாம்பவி தந்தவன்

13. அரண் நெடு வட வரை அடியொடு பொடி பட
அலை கடல் கெட அயில்
வேல் வாங்கிய செந்தமிழ் நூலோன் குமரன் குகன்

14. அறுமுகன் ஒருபதோடு இரு புயன் அபினவன்
அழகிய குறமகள்
தார் வேய்ந்த புயன் பகைமையாம் மாந்தர்கள் அந்தகன்

15. அடல் மிகு கடம் தடம் விகடிதம் மதம் களிர்
அனவரதமும் அகலா
ஆமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம் படி செந்திலில்

16. **அதிபதி என வரு பொரு திறல் முருகனை**
**அருள் பட மொழிபவர்**
**ஆராய்ந்து வணங்குவர் தேவேந்திர சங்கமே**

**பதவுரை**

தரணியில் - பூவுலகத்தில், அரணிய - கோட்டைகளை அமைத்துக் கொண்டு முரட்டுத்தனமாக வாழ்ந்து வந்த, முரண் - பகைவனாகிய, இரணியன் உடல்தனை - இரண்யாசுரனின் உடலை, நக நுதி கொடு - நகங்களின் கூரிய நுனியைக் கொண்டு, சாடு - எதிர்த்து அழித்து, ஓங்கு நெடும் கிரி - பெரிய மலை போல் உயர்ந்த (அரியும் தேவியும் ஒரே ரூபமே என ஆன்றோர்கள் கருத்து). நரசிங்க அவதாரத்தை எடுத்தவள், ஓடு ஏந்து - ப்ரம்ம கபாலத்தை கையில் ஏந்தி உள்ளவள், பயங்கரி - அடியார்களின் அச்சத்தை நீக்குபவள், பகைவர்களுக்கு அச்சத்தைத் தருபவள், தமருக பரிபுர ஒலிகொடு - உடுக்கை சிலம்பு இவைகள் ஒலிக்க, நட நவில் - சங்கார நிர்த்தனம் புரியும், சரணிய - திருவடிகளை உடையவள், சதுர்மறை - நான்கு வேதங்களினாலும் துதிக்கப்படுபவள், தாது ஆம் புய - மகரந்தப் பொடி நிறைந்துள்ள தாமரை மலரைப் போன்ற திரு அடிகளை உடையவள், மந்திர - பஞ்சாட்சர ஷடாச்சர முதலிய ஸ்ரீ வித்யா ரூபமாக திகழ்பவள், வேதாந்த - வேதங்களின் முடிவாக விளங்குபவள், பரம்பரை - மேலான யாவருக்கும் மேலானவள்,

அரி அல்லால் தேவி இல்லை
ஐயன் ஐயறனார்க்கே - என்கிறது தேவாரம்.

அருணகிரியார் "செறிதரும்" எனத் தொடங்கும் காஞ்சித் திருப்புகழில்,

"புனிதசங் கத்துக் கைத்தல நிர்த்தன்
பழையசந் தந்தைப் பெற்றம டப்பெண்" - என்பார்

காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் தாம் பாடி அருளிய ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில்,

மயலான பரை ஆதி இச்சைஞா னக்கிரியை
வந்துதரு மேக சத்தி
மகிழ்சிவன் போககா லத்திற் பவானியாய்
வளர் கோப காலத்திலே
அயிலாரும் வேற்காளி யாய்யுத்த காலத்தில்
அதிபல மகாதுர்க்கையாய்
அகிலந் துதிக்கும்நாள் அறிதுயில்கொள் அரியாம்
அனந்தகல் யாணகுணமே - என்பார்

இவ்வரிகளில் புதைந்திருக்கும் ஒரு மகா ரகசியத்தைப்பார்க்கலாம். தேவி பாகவதத்தின் படி அம்பிகையின் பத்து விரல் நகங்களில் இருந்து ராமர் கிருஷ்ணர் முதலான பத்து அவதாரங்களும் தோன்றின என்பதே. இந்த சாக்த மதக் கொள்கையை நமக்கு நினைவூட்டும் வகையில், தேவியே, நரசிம்மமாய் வந்தாள் என்பதையும் தக்க யாகப் பரணியிலும் பார்க்கலாம். ப்ரம்மனின் மண்டை ஓட்டை அம்பிகை தன் கையில் ஏந்தி இருப்பதை, "நாலு சதுரத்த" எனத்தொடங்கும் தில்லைத் திருப்புகழில் அருணகிரியார்,

"ஆலமல ருற்ற சம்பவி வேரிலி குலக்கொ ழுந்திலி
ஆரணர் தலைக்க லங்கொளி செம்பொன்வாசி
ஆணவ மயக்க முங்கலி காமிய மகற்றி யென்றனை
ஆளுமை பரத்தி சுந்தரி தந்த சேயே"

எனத் துதிப்பார்.

சரிவளை - முன் கையில் வளையல் கூட்டங்களை கொண்டவள், விரிசடை - சடை விரிந்த தவக் கோலம் கொண்டவள், எரி புரை வடிவினள் - மூண்டு எரியும் நெருப்பு போன்ற வடிவம் கொண்டவள், சத தள முகுளித - நூறு இதழ்களைக் கொண்ட தாமரை அரும்பு விட்டது போல் காட்சி கொடுக்கும், தாம - மாலைகளை பூண்டிருக்கும், குச - மார்பை உடையவள், மென் திரு தாளாந்திர அம்பிகை - மென்மையான தாள்களை உடைய தேவி, தரு பதி சுரரொடு - கற்பகத் தருவைக் கொண்ட நகரமாகிய அமராவதியில் வாழும் தேவர்களுடன், சருவிய - மாறு பட்டு போரிட்ட, அசுரர்கள் - அரக்கர்களின், தடமணி முடி பொடி தானாம் படி - அகன்ற ரத்னங்கள் பதித்த கிரீடங்கள் பொடியாகும் படி, செங் கையில் வாள் வாங்கிய சங்கரி - அழகிய கையில் வாளை ஏந்தி இருக்கும் சங்கரி, இரண - பொன் நிறத்தவளாகி, கிரண - ஒளி வீசுபவளாகிய, மடமயில் - மடப்பமுடைய (Delicate) மயிலன்ன சாயலை உடையவள், ம்ருக மத - கஸ்தூரி பூசியதும், புளகித - புளகாங்கிதம் கொண்டதுமான, இள முலை இள நீர் - இள நீரின் குரும்பை போன்ற யவன மார்பை தாங்குவதால், நுடங்கிய - ஒடிந்து விடுவது போல் காட்சி தரும், நூல் போன்ற மருங்கினள் - சிறிய நூல் போன்ற நுண் இடையினை உடையவள், இறுகிய சிறு பிறை - இறுக்கி இருக்கும் பிறைச் சந்திரனைப் போன்ற, எயிறுடை - பற்களை உடைய, எம படர் - எம தூதர்கள், எனதுயிர் கொளவரின் - எனது உயிரை பறித்துப் போக வந்தால், தான் ஏங்குதல் கண்டு - நான் அப்போது அடையும் பெரும் துயரைக் கண்டு, எதிர் - என் எதிரில் தோன்றி, தானேன்று கொளும் குயில் - எனக்கு அபயம் அளித்து ஆட்கொண்டு அருளும் குயில் போன்றவள், இடுபலி - பிச்சை

வாங்குவதற்காக, திரி கொடு - உலகத்தில் உழலும், இரவலர் - நலிந்தவர்கள், இடர் கெட - துன்பங்கள் அகலும் படி, இடு மன - அவர்களுக்கு வேண்டியவற்றை கொடுக்கும் மனமும், கர தல - கைத்தலமும், ஏகாம்பரை - காஞ்சியில் ஏகாம்பர நாதரின் மனைவியுமான காமாட்சி, இந்திரை - மோட்ச லட்சுமி, மோகாங்க சுமங்கலை - கவர்ச்சிகரமான உறுப்புகளை உடைய என்றும் மங்கள ரூபிணி, (தன் படைப்புகளான உயிர்கள் எங்கு எந்த நிலையில் இருந்தாலும் அவைகளுக்கு அந்தந்த வேளையில் உணவு போய் சேர அம்பிகையின் திருவுள்ளம் எண்ணுகிறது. கல்லினுள் தேரை எனும் பாடலே இதற்குச் சான்று. காஞ்சியில் இரு நாழி நெல்லைக் கொண்டு 32 அறங்களை வளர்த்த குறிப்பு இங்கு வருகிறது. சாவா மூவா சிவபெருமானின் பத்தினி அம்பிகை ஆதலின் அவள் சுமங்கலை).

எழுதிய படமென - திரையில் தீட்டப் பட்ட ஓவியம் போல் கருவி கரணங்கள் அடங்கி, இருளறு சுடரடி - இருளை அகற்றி ஞான ஒளி வீசும் தன் திருவடிகள், இணை தொழும் மவுனிகள் - இரண்டையும் தியானிக்கும் மவுன ஞானிகளுக்கு, ஏகாந்த சுகம் தரு - முடிவான பேரின்ப நிலையை அருளுகின்ற, பாச அங்குச சுந்தரி - பாசத்தையும் அங்குசத்தையும் கையில் ஏந்தியுள்ள திவ்ய அழகி, (கருவி கரணங்கள் ஒடுங்கி அத்துவித நிலையில் தன்னை தியானிக்கின்ற அடியார்களுக்குபேரின்ப அநுபூதி நிலையைத் தருபவள். தன்னுடைய கைகளில் உள்ள பாசத்தால் அடியார்களின் ஆணவம் என்னும் களிற்றை பிடித்து அடக்கி, அங்குசத்தால் அதனை அடியோடு மாய்த்து விடுகிறாள் அம்பிகை).

கரணமும் - ஐந்து இந்திரியங்களின் சேஷ்டைகள், மரணமும் - இறப்பு, மலமொடும் - மும் மலங்கள், உடல் படு கடு வினை - சரீரம் அநுபவிக்கும் கொடிய சஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியம் என்ற வினைகள், கெட - (இவை எல்லாம் அடியார்களை அணுகாவண்ணம், நினை - திருவுள்ளம் கொண்டும், காலாந்தரி - மூன்று காலங்களையும் கடந்து அதற்கும் மேற்பட்ட நிலையில் நிற்பவள், கந்தரி - அடியார்களின் இதய குகையில் வீற்றிருப்பவள், நீலாஞ்சனி - நீல நிறத்துடன் விளங்குபவள், நஞ்சுமிழ் - விஷத்தை உமிழ்வதும், கனலெரி - நெருப்பு ஜ்வாலையை கக்குவதுமானதும், கண பண - கூட்டத்துடன் விளங்கும் பணா மகுடங்களை கொண்டதும், குணமணி - சிறந்த ஜாதி ரத்னங்களை, அணி - முடியில் தாங்கும், பணி - சர்ப்பத்தை, கன வளை - பெருமை மிக்க கையில் வளையலாக தரித்திருப்பவள், மரகத - பச்சை நிறத்தவள், காசு - காயாம்பூ நிறமுள்ள, அம்பர - உடையும், கஞ்சுளி - சட்டையும், துசாம்படி கொண்டவள் - வஸ்திரமாக ஏற்றுக் கொண்டவள், கனை கழல் - ஒலி செய்யும் தனது இணையடிகளை, நினையலர் - அன்புடன் தியானிக்காத பாவிகளின், உயிர் அவி - உயிரைப் போக்குகின்ற, பயிரவி - பயிரவி தேவி, கவுரி - பொன் நிறமானவள், கமலை - கமலாம்பிகை, குழை காதார்ந்த - காதில் குழையாக, செழுங்கழுநீர் தோய்ந்த - நீலோற்பல மலரை தரித்திருக்கும், பெருந்திரு - மோட்ச லட்சுமி (பார்வதி), கரை பொழி - உள்ளம் கனிந்து வீசுகின்ற திருமுக கருணா கடாட்சத்தால், உலகெழு கடல் - ஏழு உலகங்களும், ஏழு சமுத்திரங்களும் (ஏழு இடை நிலை தீபம்), நிலைபெற-நிலைத்திருக்கும்படி, வளர் - பரிபாலனம் செய்யும், காவு ஏந்திய - காத்தல் தொழிலை மேற்கொண்டுள்ள, பைங்கிளி - பசுமையான கிளி போன்றவள், மா சாம்பவி - மகா சாம்பவியான பார்வதி தேவி, தந்தவன் - தந்து அருளியவன், அரண் - இந்த உலகத்திற்கு கோட்டை போல் விளங்கும், நெடுவரை - நெடிய மேரு மலை, அடியொடு பொடி பட -

முற்றிலும் தூளாகும் படியும், அலைகடல் கெட - அலைவீசும் சமுத்திரம் வற்றிப் போகும் படியும், அயில் வேல் வாங்கிய - கூரிய வேலாயுதத்தை செலுத்திய, செந்தமிழ் நூலோன் - தீம் தமிழ் நூல்களுக்கெல்லாம் உரிமையானவன், குமரன், குகன், அறுமுகன் - குமரன், குகன், வேலாயுதக் கடவுள், ஒருபதொடு இருபுயன் - பன்னிரு புயங்களை உடையவன், அபிநவன் - என்றும் புதியவன், அழகிய குறமகள் - அழகு மிக்க வள்ளியின், தார் வேய்ந்த - மணமாலை சூடிய, புயன் - தோள்களை உடையவன், பகையா மாந்தர்கள் அந்தகன் - பகைவர்களுக்கு எயன் போன்றவன், அடல்மிகு - வலிமை உள்ளவரும், கட தட - மதம் வாய்ந்த கன்னங்களை உடையவரும், விகடித - விநோத அழகு உடையவருமாகிய, மத களிறு - மஹா கணபதியை, அனவரதமும் - எப்போதும், அகலா மாந்தர்கள் - தியானித்து இருக்கும் மனிதர்களின், சிந்தையில் வாழ்வாம் படி - உள்ளத்தில் தானும் வந்து குடி புகுந்து, செந்திலில் அதிபதி என வரும் - செந்தில் நாயகன் என விளங்கும், பொரு திறல் முருகனை - போரில் வல்ல முருகப் பெருமானை, அருள் பட மொழிபவர் - அருள் கிட்டும் படி துதித்து வணங்குபவர்களை, ஆராய்ந்து வணங்குவர் - ஆராய்ந்து கண்டுபிடித்து வணங்குவார்கள், தேவேந்திர சங்கமே - தேவேந்திரனும் அவனுடைய பரிவாரங்களும்.

(திருப்புகழ், கந்தர் அந்தாதி, திரு எழுக்கூற்றிருக்கை தவிர ஏனைய படைப்புகளில், அருணகிரி பெருந்தகை, முருகனே ஞான சம்பந்தர் என்ற கருத்தினைக் காண முடியவில்லை. ஆனால் இங்கு செந்தமிழ் நூலோன் என்ற சொல் ஞான சம்பந்தரை கூறுவதாக அமைந்துள்ளது.

கணபதியை சிந்திப்பவர்கள் மனதில், கந்தனும் விளங்குவான் என்பதற்கு ஒரு தத்துவப் பொருளும் கூறலாம். சத்தும் சித்தும் சேரும் போது விளைவது ஆனந்தம். சத்து மேலோங்கி வரும் போது கணபதி அதே ஆனந்தம் சித்து வழி வரும் போது முருகன். ஆகையால் முருகனும், கணபதியும் பிரியாதிருப்பதில் வியப்பில்லை.

**பொழிப்புரை :**

பூவுலகத்தில், கோட்டைகளை அமைத்துக் கொண்டு முரட்டுத்தனமாக வாழ்ந்து வந்த, பகைவனாகிய, இரண்யாசுரனின் உடலை, நகங்களின் கூரிய நுனியைக் கொண்டு, எதிர்த்து அழித்து, பெரிய மலை போல் உயர்ந்த நரசிங்க அவதாரத்தை எடுத்தவள், ப்ரம்ம கபாலத்தை கையில் ஏந்தி உள்ளவள், அடியார்களின் அச்சத்தை நீக்குபவள், பகைவர்களுக்கு அச்சத்தைத் தருபவள், உடுக்கை, சிலம்பு இவைகள் ஒலிக்க, சங்கார நிர்த்தனம் புரியும், திருவடிகளை உடையவள், நான்கு வேதங்களினாலும் துதிக்கப்படுபவள், மகரந்தப் பொடி நிறைந்துள்ள தாமரை மலரைப் போன்ற திருவடிகளை உடையவள், பஞ்சாட்சரம் ஷடாச்சரம் முதலிய ஸ்ரீ வித்யா ரூபமாகத்திகழ்பவள், வேதங்களின் முடிவாக விளங்குபவள், மேலான யாவருக்கும் மேலானவள்.

முன் கையில் வளையல் கூட்டங்களைக்கொண்டவள், சடை விரிந்த தவக் கோலம் கொண்டவள், மூண்டு எரியும் நெருப்பு போன்ற வடிவம் கொண்டவள், நூறு இதழ்களைக் கொண்ட தாமரை, அரும்பு விட்டது போல் காட்சி கொடுக்கும், மாலைகளைப் பூண்டிருக்கும், மார்பை உடையவள், மென்மையான தாள்களை உடைய தேவி, கற்பகத் தருவைக் கொண்ட நகரமாகிய அமராவதியில் வாழும் தேவர்களுடன், மாறு பட்டு போரிட்ட, அரக்கர்களின்,

அகன்ற ரத்னங்கள் பதித்த கிரீடங்கள் பொடியாகும் படி, அழகிய கையில் வாளை ஏந்தி இருக்கும் சங்கரி, பொன் நிறத்தவளாகி, ஒளி வீசுபவளாகிய, மடப்பமுடைய (Delicate) மயிலன்ன சாயலை உடையவள், கஸ்தூரி பூசியதும், புளகாங்கிதம் கொண்டதுமான, இள நீரின் குரும்பை போன்ற யவன மார்பைத்தாங்குவதால், ஒடிந்து விடுவது போல் காட்சி தரும், சிறிய நூல் போன்ற நுண் இடையினை உடையவள், இறுக்கி இருக்கும் பிறைச் சந்திரனைப் போன்ற, பற்களை உடைய, எம தூதர்கள், எனது உயிரை பறித்துப் போக வந்தால், நான் அப்போது அடையும் பெரும் துயரைக் கண்டு, என் எதிரில் தோன்றி, எனக்கு அபயம் அளித்து ஆட்கொண்டு அருளும் குயில் போன்றவள், பிச்சை வாங்குவதற்காக, உலகத்தில் உழலும், நலிந்தவர்கள், துன்பங்கள் அகலும் படி, அவர்களுக்கு வேண்டியவற்றை கொடுக்கும் மனமும், கைத்தலமும், காஞ்சியில் ஏகாம்பர நாதரின் மனைவியுமான காமாட்சி, மோட்ச லட்சுமி, கவர்ச்சிகரமான உறுப்புகளை உடைய என்றும் மங்கள ரூபிணி.

திரையில் தீட்டப் பட்ட ஓவியம் போல் கருவி கரணங்கள் அடங்கி, இருளை அகற்றி ஞான ஒளி வீசும் தன் திருவடிகள், இரண்டையும் தியானிக்கும் மவுன ஞானிகளுக்கு, முடிவான பேரின்ப நிலையை அருளுகின்ற, பாசத்தையும், அங்குசத்தையும் கையில் ஏந்தியுள்ள திவ்ய அழகி, ஐந்து இந்திரியங்களின் சேஷ்டைகள், இறப்பு, மும்மலங்கள், சரீரம் அநுபவிக்கும் கொடிய சஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியம் என்ற வினைகள், இவை எல்லாம் அடியார்களை அணுகாவண்ணம், திருவுள்ளம் கொண்டு, மூன்று காலங்களையும் கடந்து அதற்கும் மேற்பட்ட நிலையில் நிற்பவள், அடியார்களின் இதய குகையில் வீற்றிருப்பவள், நீல நிறத்துடன் விளங்குபவள், விஷத்தை உமிழ்வதும், நெருப்பு ஜ்வாலையைக் கக்குவதுமானதும், கூட்டத்துடன் விளங்கும் பணா மகுடங்களைக் கொண்டதும், சிறந்த ஜாதி ரத்னங்களை, முடியில் தாங்கும் சர்ப்பத்தை, பெருமை மிக்க கையில் வளையலாக தரித்திருப்பவள், பச்சை நிறத்தவள், காயாம்பூ நிறமுள்ள உடையும், சட்டையும், வஸ்திரமாக ஏற்றுக் கொண்டவள், ஒலி செய்யும் தனது இணையடிகளை, அன்புடன் தியானிக்காத பாவிகளின், உயிரைப் போக்குகின்ற பயிரவி தேவி, பொன் நிறமானவள், கமலாம்பிகை, காதில் குழையாக, நீலோற்பல மலரை தரித்திருக்கும் மோட்ச லட்சுமி, (பார்வதி), உள்ளம் கனிந்து வீசுகின்ற திருமுக கருணா கடாட்சத்தால், ஏழு உலகங்களும், ஏழு சமுத்திரங்களும் (ஏழு இடை நிலை தீபம்), நிலைத்திருக்கும்படி, பரிபாலனம் செய்யும் காத்தல் தொழிலை மேற்கொண்டுள்ள, பசுமையான கிளி போன்றவள், மகா சாம்பவியான பார்வதி தேவி தந்து அருளியவன், இந்த உலகத்திற்கு கோட்டை போல் விளங்கும், நெடிய மேரு மலை, முற்றிலும் தூளாகும் படியும், அலைவீசும் சமுத்திரம் வற்றிப் போகும் படியும், கூரிய வேலாயுதத்தைச்செலுத்திய, தீம் தமிழ் நூல்களுக்கெல்லாம் உரிமையானவன், குமரன், குகன், வேலாயுதக் கடவுள், பன்னிரு புயங்களை உடையவன், என்றும் புதியவன், அழகு மிக்க வள்ளியின் மணமாலை சூடிய, தோள்களை உடையவன், பகைவர்களுக்கு எமன் போன்றவன், வலிமை உள்ளவரும், மதம் வாய்ந்த கன்னங்களை உடையவரும், விநோத அழகு உடையவருமாகிய, மஹா கணபதியை, அனவரதமும், தியானித்து இருக்கும் மனிதர்களின் உள்ளத்தில் தானும் வந்து குடி புகுந்து, செந்தில் நாயகன் என விளங்கும், போரில் வல்ல முருகப் பெருமானை, அருள் கிட்டும் படி துதித்து வணங்குபவர்களை, ஆராய்ந்து கண்டு பிடித்து வணங்குவார்கள், தேவேந்திரனும் அவனுடைய பரிவாரங்களும்.

# 3. வேல் வகுப்பு

## அறிமுகம்

வேல் வகுப்பு ஔஷதம் போன்றது. ஒரு மருந்து நோய்களைத் தீர்ப்பது போல, இந்த வகுப்பு புறநோயை நீக்கும். பிறவிப் பிணியை போக்கும். வேல் ஞானம் ஆதலால் அதைப் படிப்பவர்களுக்கு ஞானத்தைக் கொடுத்து, பேரின்ப வாழ்வைக் கொடுக்கும். முருகன் வேறு வேல் வேறு அல்ல, கந்தக் கடவுள் பவரோக வைத்தியநாதப் பெருமாள் ஆகையினால் வேலாயுதமும் பிறவியை அழிக்கும் பெரிய மருந்து என்பார் தணிகைமணி அவர்கள். மேலும் இவ்வகுப்பு - ப - வில் ஆரம்பித்து - லே - வில் முடிவதினால், இதை - பலே - வகுப்பு என்பார் அவர்.

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தான

## மூலம்

1. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநி கராகும்

2. பனைக்கமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

3. பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
யிடித்துவழி காணும்

4. பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவருள் நேரும்

5. சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்குநரர் தமக்குமுறும்
இடுக்கண்வினை சாடும்

6. சுடர்பரிதி ஒளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை யடக்குதழல் ஒளிப்பவொளிர்
ஒளிப்பிரபை வீசும்

7. துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும்

8. சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும்

9. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும்

10. தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்

11. தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்

12. சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்

13. திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்

14. திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்

15. சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்

16. **திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை**
**விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயில்**
**நடத்துகுகன் வேலே**

## (பாடல்) சொற்பிரிவு (3)

1. பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்த நகை
கறுத்த குழல் சிவத்த இதழ் மறச்சிறுமி
விழிக்கு நிகராகும்

2. பனைக்கைமுக படக்கரடம் மதத்தவளம்
கசக்கடவுள் பதத்து இடு நிகளத்து முளை
தெறிக்க வரம் ஆகும்

3. பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும் ஒரு
கவிப்புலவன் இசைக்கு உருகி வரைக்குகையை
இடித்து வழிகாணும்

4. பசித்து அலகை முசித்து அழுது முறைப்படுதல்
ஒழித்து அவுணர் உரத்து உதிரம் நிணம் தசைகள்
புசிக்க அருள் நேரும்

5. சுரர்க்கும் முநிவரர்க்கும் மகபதிக்கும் விதி
தனக்கும் அரிதனக்கும் நரர் தமக்கும் உறும்
இடுக்கண் வினை சாடும்

6. சுடர்பரிதி ஒளிப்ப நில ஒழுக்கும் மதி
ஒளிப்ப அலை அடக்கு தழல் ஒளிப்ப ஒளிர்
ஒளிப்பிரபை வீசும்

7. துதிக்கும் அடியவர்க்கு ஒருவர் கெடுக்க இடர்
நினைக்கின் அவர் குலத்தை முதலறக்களையும்
எனக்கு ஓர் துணையாகும்

8. சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்து எறிய உறுக்கி எழும்
அறத்தை நிலை காணும்

9. தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைக்க இறை
கழற்கு நிகராகும்

10. தலத்தில் உள்ள கணத்தொகுதி களிப்பின் உண
அழைப்பதென மலர்கமலம் கரத்தின்முனை
விதிர்க்க வளைவு ஆகும்

11. தனித்து வழி நடக்கும் என திடத்தும் ஒரு
வலத்தும் இருபுறத்தும் அருகு அடுத்து இரவு
பகற் துணையதாகும்

12. சலத்து வரும் அரக்கர் உடல் கொழுத்து வளர்
பெருத்த குடல் சிவத்ததொடை எனச் சிகையில்
விருப்பமொடு சூடும்

13. திரைக்கடலை உடைத்து நிறை புனல் கடிது
குடித்து உடையும் உடைப்பை அடைத்து உதிரம்
நிறைத்து விளையாடும்

14. திசைக்கிரியை முதல் குலிசன் அறுத்த சிறை
முளைத்து என முகட்டின் இடை பறந்து அற
விசைத்து அதிர ஓடும்

15. சினத்து அவுணர் எதிர்த்து ரண களத்தில் வெகு
குறைத்தலைகள் சிரித்து எயிறு கடித்து விழி
விழித்து அலற மோதும்

16. **திருத்தணியில் உதித்து அருளும் ஒருத்தன் மலை**
**விருத்தன் எனது உளத்தில் உறை கருத்தன் மயில்**
**நடத்து குகன் வேலே.**

**பதவுரை :**

பருத்த முலை - பெருத்திருக்கும் தன பாராங்களையும், சிறுத்த இடை - நுண்ணியதாக ஒடுங்கி இருக்கும் இடையையும், வெளுத்த நகை - வெண்மை நிறம் வீசும் பற்களையும், கருத்த குழல் - கருமை நிறம் கொண்ட கூந்தலையும், சிவத்த இதழ் - சிவந்த உதடுகளையும் உடைய, மறச்சிறுமி - வீரம் மிக்க வேடர் குலத் திலகமாகிய வள்ளிப் பிராட்டியின், விழிக்கு நிகராகும் - திருக்கண்களுக்கு ஒப்பாகும் (குகன் வேலே), (குழந்தையின் நோயை முலைப்பால் மூலமாக தாய்மார்கள் குணப்படுத்துவார்கள். உயிர்க் கூட்டங்களின் மலப் பிணியை போக்கும் மருந்தாகிய பாலமுதம் நிரம்பிய தன பாரங்களை உடையவர் வள்ளிப் பிராட்டியார், உயிர்களுக்கெல்லாம் அமுதம் ஊட்ட வேண்டியிருப்பதால், அவருடைய தன பாரங்களை பருத்த முலை என்றார்) விமலனின் திருவடி பெருமையை புகழ்வாரின் வினை தேய, உயிர்கள்

உணர்ந்து உய்ய இடையை சிறுத்த இடை என்கிறார். பிறவித் தளையை வேர் அறுக்கும் மாசற்ற வெண்மை ஒளி வீசும் தகுதியினால் அவரின் பற்களை வெளுத்த நகை என்கிறார். தேவயானைக்கும் இதே தூய நகை உண்டு என்பதை ''முத்தை தரு பத்தித் திரு நகை'' என முதல் திருப்புகழில் குறிப்பிடுகிறார். இறைவனைப் புகழாதார் உள்ளம் எப்படி இருக்கும் எனக் காட்டுகிறது தேவியாரின் கறுத்த குழல். குமரனின் ஞான சொற்களைப் பேசும் செழுமை மிக்க உதடுகளை சிவத்த இதழ் என்கிறார். வள்ளி நாச்சியாருக்கு - பஞ்ச கிருதியங்கள் - என்று கூறப்படும் ஐந்து தொழில்களும் உண்டு என்பதை இவ்வடிகள் ரகசியமாக வெளிப்படுத்துகின்றன. பக்குவமடைந்த நிலையைக்காண்பிக்கும் பருத்த முலையினால் தோற்றமும், கனமான தனபாரங்களை தாங்கும் இடை திதியையும் (காத்தல்). அஞ்ஞானத்தை சுட்டெரித்து வெண்பூதியாக்கும் வெளுத்த நகை சம்ஹாரத்தையும், கறுத்து இருண்டிருக்கும் கூந்தல் திரோபாவத்தையும் (மறைத்தல்). ஞானத்தை அருளும் சிவத்த இதழ் அனுக்ரகத்தையும் காட்டுகின்றன. வேலுக்கும் இவ்வைந்து தொழில்களும் உண்டு என்பதே இந்த ரகசியம். திருச்செந்தூரில் நாழிக்கிணறையும், வயலூரில் கண்ணாடி தடாகத்தையும் தோற்றுவித்ததால் தோற்றமும், கிரவுஞ்ச கிரியில் அகப்பட்ட வீரபாகு முதலிய வீரர்களையும் திருப்பரங்குன்றம் குகையில் பூதத்தால் அடைக்கப்பட்ட நக்கீரார் முதலியவர்களை காப்பாற்றியது காத்தலையும், சூரன் முதலிய அசுரர்களை அழித்தது சம்ஹாரத்தையும், பிரமனை சிறையில் அடைத்தது மறைத்தலையும், அருணகிரியாரின் நாவில் ஆறெழுத்து மந்திரத்தை பொறித்தது அனுக்கிரகத்தையும் காட்டுகிறது. ஆகையினால் வள்ளியின் தொழில்கள் ஐந்தும் வேலாயுதத்திற்கும் உண்டு என தெரிய வருகிறது.

(ஞானசம்பந்தர் மதுரையில் சமணரோடு வாது செய்யும் போது, அனல் வாதத்திற்காகத் தான் இயற்றிய தேவார ஏடுகளில் கயிறு சாத்தி பார்க்கும் போது, திருநள்ளாற்றுப் பதிகமாகிய ''போகமார்ந்த'' எனத் தொடங்கும் பதிகம் கிடைத்தது. அம்பிகையின் கருணை ரூபமாகிய பருமனான தனபாரங்களைக்குறிப்பிடுவதால், அந்த ஏடு, அனலில் வேகாது அமணரை வென்றது. அதனால் அப்பதிகம் - பச்சைப் பதிகம் - எனப்பெயர் பெற்றது. மறுபடி ஒருமுறை சம்பந்தர் திருநள்ளாறு வந்த சமயம் - ''தளிர் இள'' - எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடுகிறார் - அதில், ''நள்ளான் நாமமே ஏரி இட பழுதிலை மேன்மையே'' - என்கிறார். அதாவது சிவபெருமானின் புகழைப் பாடும் இந்தப் பதிகம் நெருப்பில் இட்டாலும் வேகாது என்பதே இதன் கருத்து, ஆதலால் வெப்பு நோய் வராமல் தடுக்க சைவப் பெருமக்கள் இப்பதிகத்தை ஓதி பயன் பெறுகிறார்கள். வேல் வகுப்பிலும், இச்சா சக்தியாகிய வள்ளி நாச்சியாரின் கருணை தன பாரங்களைக் குறித்து ஆரம்பிப்பதால், இப்பதிகத்திற்கும் அதே பலன் உண்டு எனத் தெரிய வருகிறது).

பனைக்கை - பனைமரம் போன்று நீண்டு தொங்கும் துதிக்கையும், முக படம் - முகத்தில் அணிந்த சித்திர வேலைப்பாடு நிறைந்த சீலையும், கரட மதம் - இரண்டு கபால மத நீரையும், தவள - வெண்ணிறத்தையும் உடைய, கசம் - கஜம் - ஐராவதம் என்னும் யானையை, கடவுள் - வாகனமாகக் கொண்ட இந்திரன், பதத்து இடு - கால்களில் சூரபத்மனால் இடப்பட்ட, நிகளத்து - விலங்கின், முளை - ஆணியானது, தெரிக்க அரம் ஆகும் - உடைபட்டு விழ அரம் போல் செயல்படும் (குகன் வேலே) (பால் கடலில் தோன்றியதால் பால் போன்ற

வெண்மை கொண்டது ஐராவதம் என்பதால், அதனை தவள கசம் என்கிறார்). இந்திரன் விலங்கிடப்பட்டான் என்கிறபோது அவனது பரிவார தேவதைகளும் அதே நிலையில் இருந்தார்கள் என்பது சொல்லாமலே உணரப்பெறும். காலில் விலங்கிடப்பட்ட அவர்களது வருத்தத்தைக் கண்ட வேற்படை, முறையே ஆணிகளைக் கழற்றி விலங்கை அவிழ்க்காமல் உக்ரத்தோடு ஒரே மோதலில் தெரித்து தானே விலங்கு கழன்றது என்பதை அழகாக சித்தரித்துள்ளார். பதம் என்பதற்கு இந்திரப் பதவி எனவும் பொருள் கொள்ளலாம். புண்ணியப் பயனால் இந்திரனுக்குக் கிடைத்த தேவேந்திரப் பதவிக்கும் ஆபத்து வந்த போது அவனைக் காப்பாற்றியது வேலாயுதமே. தேவர்களுக்கு ஏற்பட்ட சோதனைக்கு மூல காரணம் தக்கன் வேள்வியில் கலந்து கொண்டது தான், அஞ்ஞானத்தால் ஏற்பட்ட சிவ அபராதத்தை வேற்படை என்னும் ஞானசக்தி நீக்கி விடுதலை அளித்தது என்பதை இங்கு உணர வேண்டும்).

பழுத்த - ஞானம் கனிந்த, முது - பழமை வாய்ந்த, தமிழ்ப்பலகை - மதுரை தமிழ்ச் சங்க பலகையில், இருக்கும் - தலைவனாக அமர்ந்திருக்கும், ஒரு கவிப்புலவன் - ஒப்பற்ற பாக்கள் இயற்றும் அறிவில் சிறந்த நக்கீரனுடைய, இசைக்குருகி - பாட்டின் இனிய பொருள் மிக்க ஒலிக்கு திருவுள்ளம் உருகி, வரைக்குகையை - திருப்பரங்கிரி மலைக்குகையை, இடித்து வழி காணும் - அங்கு கற்கிமுகி எனும் பூதத்தால் அடைக்கப்பட்டிருந்த நக்கீரர் முதலிய புலவர்கள் அனைவரையும், அக்குகையிலிருந்து வெளி வர வழி செய்து கொடுத்தது (குகன் வேலே) (முருகன் வைதாரையும் வாழ வைக்கும் தெய்வம் ஆதலால் அம்மொழியின் முதிர்ச்சியை வளர்ச்சியை அவர் விரும்புகிறார் எனப் பொருள் படும். அதையே அருணகிரியார் பழுத்த தமிழ் என்கிறார். இம்மொழி புதிதாக தோன்றியது அன்று. இறைவன் போல் அதுவும் உள்ளது என்பார். இதனால் தமிழ் மொழியை முது தமிழ் என்கிறார். இவ்வார்த்தையை - பழுத்த அமுது - என்று பிரித்தால், அமுதம் போன்றது சிறந்த சீரான தன்மை கொண்டது எனவும் பொருள் கொள்ளலாம். கல்லையும் உருக வைக்கும் திருமுருகாற்றுப் படை கல் போன்ற மனதையும் உருக்க வல்லது என்பதை, ''கீத இசை கூட்டி வேதமொழி சூட்டு கீரர்'' என ''வீணை இசை'' எனத் தொடங்கும் திருப்புகழில் கூறுகிறார். மேலும் திருமுருகாற்றுப்படையை வேதம் ஓதுவது போல் கூற வேண்டும் என்பதுவும் தெரிய வருகிறது. குமரவேள் ஏவிய வேற்படை வழி காணும் என்பதால் முத்திக்கு வழி காணும், என்றும் பொருள் கொள்ளலாம். மதுரையில் தருமிக்கு பாடி அளித்த 'கொங்கு தேர் வாழ்க்கை' என்கிற பாசுரத்திற்கு தன் கல்விச் செருக்கால் நக்கீரர் குற்றம் கண்டு பிடித்தது மட்டுமல்லாமல் சிவபெருமானையே அவமதித்த காரணத்திற்காக சிறைபட நேர்ந்தது. ஞானாசக்தியாகிய வேற்படை அவருக்கு சிவ ஞானத்தை நல்கி, பூதத்திலிருந்து உடலையும் சிவ துரோகமாகிய பாவத்திலிருந்து, உயிரையும் காப்பாற்றியது என்பது உணரத்தக்கது).

அலகை - பேய்கள், பசித்து - பசி கொண்டு, முசித்து - மெலிந்து, அழுது - அழுது புலம்பி, முறைப்படுதல் - எங்கள் பசி தாங்க முடியவில்லையே என முறையிடுதலை அறவே நீக்கி, அவுணர் - அசுரர்களின், உரத்து உதிரம் - உடலின் இரத்தம் தோய்ந்த, நிணத்தசைகள் - கொழுப்போடு சேர்ந்த மாமிசத்தை, புசிக்க - அப்பேய்கள் உண்ண, அருள் நேரும் - மறக்கருணையால் உடன்படும் (குகன் வேலே) (அவுணர் என்ற சொல்லில் - அ - எனும் எழுத்து தகாது எனும் பொருளைக் குறிக்கும். அதாவது உயிர்கள் பால் கருணை இல்லாது,

அவைகளை கொன்று உண்ணும் கூட்டத்தாரே அவுணர் எனப்படுவர். தூய காய்கறி உணவு உண்பவர்களை நாடாமல், உணவில் ஒழுக்கம் கெட்ட அவுணர்களின் உடலையே உண்ண பேய்கள் விரையும் போலும்.

'கொன்றது கொன்றன, தின்றது தின்றன' - பட்டினத்தார்

அவுணர் செய்த வினையின் வெம்மை, தேவியின் கணங்களின் ஒரு பகுதியான பேய்களின் வயிற்றில் பெரும் பசியாய் நுழைந்து எரி வீச பசி தாங்காமல் அந்தப் பேய்கள் கத்துவதைக் கண்ட வேற்படை, அவைகளின் குறை அகலவும், ஈட்டின வினைகள் அழியவும், உபகாரம் செய்தமையால் அருள் நேரும் வேலே என்கிறார். ஞானா சக்தி மறக்கருணை காட்டுவதையே இவ்வடிகள் குறிக்கின்றன. பேய்களின் முறையீட்டை அகற்றியவன் முருகனே என்று 'தக்கயாகப் பரணி'யும் கூறுகிறது).

சுரர்க்கும் - வானோர்களுக்கும், முநிவர்களும் - தவ சிரேஷ்டர்களுக்கும், மகபதிக்கும் - இந்திரனுக்கும், விதிதனக்கும் - பிரம்மனுக்கும், அரி தனக்கும் - திருமாலுக்கும், நரர் தமக்கும் - உலக மக்களுக்கும், உறும் - நேர்ந்த, இடுக்கண் - துன்பத்திற்கு காரணமான, வினை - தீவினைக் கூட்டங்களை, சாடும் - மோதி அழிக்கும் (குகன் வேலே) (துஷ்டனான சூரபத்மனுக்கு, வைதீக வானவர் மீன் கொண்டு வரவும், அவன் முன்னிலையில் பிரம்மன் பஞ்சாங்கம் வாசிக்கவும் இன்னும் பல அவல நிகழ்ச்சிகளை தக்கன் வேள்வியில் கலந்து கொண்ட பாவத்தினால் வந்தன. இந்த சாபத்தினால் சாகா வரம் பெற்ற தேவர்கள் அனைவரும் துன்பம் அடைந்தனர். அவர்களின் ஓலத்திற்கு மனம் இரங்கி இறைவன் ஆறுமுகம் படைத்த குமரனாய் அவதரித்தான். இறுதிப் போரில் சூரன் இமையோரை விழுங்க பெரும் இருள் வடிவம் எடுக்கிறான். வேற்படை இருளை அகற்ற சூரபத்மன் தீப்போல் தளிரும் புகை போல் தளையும் பொன் போல பூங்கொத்தும் மரகதக் காயும் செந்நிறப்பழமும் அண்டம் அளாவிய கிளைகளை உடையதாய் நிலத்தின் கீழ் பாதாளம் வரை வேர் ஓட்டி, கடலின் நடுவில், மாமரமாய் நிற்கிறான். உயிர் கூட்டம் துடிப்பதைக் கண்ட வேல் தெய்வம், மாமரத்தைப் பிளந்து, அனைவருக்கும் விடுதலை கொடுத்து, வானவரின் பழைய வினைகளையும் நீக்கிற்று. இக்கருத்தை 'கலக வாள்' எனத் தொடங்கும் பழநித் திருப்புகழில்,

'அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமைய யேகுறி வேலா சீலா' என்பார்.

சுடர் பருதி ஒளிப்ப - ஒளியை உடைய செங்கதிரோன் தோற்றுப் போய் ஒளிந்துக் கொள்ளவும், நிலவு ஒழுக்குமதி ஒளிப்ப - குளிர்ந்த கிரணங்களை உடைய வெண்கதிரோனும் ஒளிந்துக்கொள்ளவும், அலை அடக்கு தழல் ஒளிப்ப - கரை கடந்து உலகை அழிக்காத படி சமுத்திரத்தை அடக்கிக் கொண்டிருக்கும் வடவாமுக அக்னி ஒளிந்துக் கொள்ளவும், ஒளிர் - பிரகாசிக்கின்ற, ஒளிர் பிரபை வீசும் - ஒளியை உடைய ஞானாசக்தியை எங்கும் பரவும்படி செய்யும் (வடவாமுக அக்னி மற்ற ஐந்து தழல்களையும் மிஞ்சுவதாக கூறுவர். மற்ற ஐந்து தழல்கள் 1) உகாந்தாக்னி 2) அகத்தியர் உதராக்னி 3) ஆலகால விஷாக்னி, 4) ராம சராக்னி 5) பதிவிரதாக்னி. வேலாயுதத்தின் அளவற்ற வெப்பத்தைக் கண்டு ஆற்றாது ஆதவனும், அமுத சீதள கிரணம் கண்டு ஆற்றாது அம்புலியும், பொறுக்க முடியாத எரிவு கண்டு, மேற்சொன்ன ஆறு தழல்களும் ஒளிந்துக் கொள்ளுகின்றன. இம்மூன்றினையும் காய்ந்து

குளிர்ந்து எரிக்கும் வேல் என்பதைக் குறிப்பிட ஒளிர் ஒளி பிரபை என்கிறார். திருப்போரூர் சன்னதி திருமுறையில் ஒரு மேற்கோள் :

'ஒளியால் கதிர் அவுணர் உடலால் காலன் அடியால்
குளிர் மதியே யாகும் போரூரில் வீரன் கரத்து ஏந்தும் வேல்'

துதிக்கும் - தன்னைப் போற்றி வணங்கும், அடியவர்க்கு - அன்பர்களுக்கு, ஒருவர் - வேறு யாரேனும் ஒருவர், கெடுக்க - அந்த அடியவரை அழிக்க, இடர் நினைக்கின் - ஏதேனும் துன்பம் செய்ய மனதில் எண்ணினாலும், அவர் குலத்தை - அவர் வம்சத்தையே, முதல் அற களையும் - வேருடன் அழித்து களைந்து விடும், எனக்கு ஓர் துணையாகும் - எனக்கு ஒப்பற்ற துணையாக இருந்து உதவி புரியும் (குகன் வேலே) (அடியவர்களுக்கு இடையூறுகள் பல உருவில் வரும். முன்னும் பின்னும் துன்ப இருப்பு அடியவர்களை சுற்றும் படி தீமை புரிபவர்கள் எல்லாரும் உலகில் பாவ வளர்ச்சிக்கு வழி செய்வார்கள். ஆதலால் அன்னவர் பரம்பரையை வேரோடு களைந்தால் அன்றி, சிவ ஞானப்பயிர் செழிக்காது, ஆகையால் ஞானசக்தியாகிய வேல், அத்திருப்பணியை செய்து கொண்டே இருக்கும். வேல் வகுப்பு பாராயணம் செய்யும் போது - எனக்கோர் துணையாகும் - என்கின்ற வரிகளை கூறுகின்ற சமயம் அருணகிரியாரின் திருக்கரங்கள் இரண்டும் அவரின் இதயத்திற்கு நேரே குவிந்திருக்கும் என்பது செவி வழிச் செய்தி. இந்த அடிகளின் 'சினத்தவர் முடிக்கும்' எனத்தொடங்கும் திருத்தணித்திருப்புகழில்,

'சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவ ருயிர்க்கும் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்' என்கிறார்

சொலற்கரிய - அருமை பெருமைகளை அளவிட்டுச் சொல்ல இயலாத, திருப்புகழை - இறைவனது அருள் சம்பந்தப்பட்ட திருப்புகழை, உரைத்தவரை - விருப்புடன் செப்பியவரை, அடுத்த பகை - நெருங்கிவரும் பகை நிலைமையை, அறுத்தெறிய - வேருடன் அறுத்து எறிவதற்கு, உறுக்கி எழும் - உக்ரத்துடன் புறப்படும், அறத்தை நிலை காணும் - தர்மத்தை நிலை பெறச் செய்யும் (குகன் வேலே) சிவபெருமான் பார்வதி தேவியிடம் (தேவி) உன்னுடைய திருக்குமரனின் பெருமையை விவரித்துச் சொல்ல 100 கோடி வருடங்கள் காணாது ! என்று சொல்லும் அளவிற்கு கந்தனின் மகிமை விரிந்திருப்பதினால், சொலற்கரிய திருப்புகழ் என்கிறார். சூக்குமை, வைசந்தி, மத்திமை, வைக்கரி என்னும் நான்கு நல்வாக்குகளின் பகுதியான வேதம் ஆகிய நூல்களும் அளந்து காண இயலா முருகனின் திருப்புகழை, அளந்து கண்டது என்றால் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழின் அருமை விரித்து காண்பது அரிது. கல்லால மரத்தின் அடியில் சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் மெய்ப்பொருளை வாக்கினால் சொல்ல முடியாது என்று கையை மட்டும் காட்டிப் போனார் தட்சிணாமூர்த்தியார். ஆனால், கருணை மிகுதியால் முருகனின் திருப்புகழை, பல பாக்களினால் விவரித்திருக்கிறார் எனில் திருப்புகழின் பெருமை ஓரளவு தான் அளவிட முடியும் - 'பரித்ராணாய' - எனும் சுலோகத்தில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் சொல்லிய மாதிரியே, வேலாயுதமும் அடியவர்களைக் காத்து துஷ்டர்களை அழிக்கும் என்பதையே இவ்வடிகள் உறுதி செய்கின்றன. மேலும் இதே கருத்தை

'கருப்புவிலில்' எனத் தொடங்கும் பழநி மலைத் திருப்புகழில்.

''திருப்புகழை யுரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப்பகைமை
செயித்தருளும் மிசைப்பிரிய'' என்கிறார்.

நமன் - எமன், தருக்கி - இறுமாப்புடன், முருக்கவரின் - அழிக்க வந்தால், எருக்கு - எருக்க மலரையும், மதி - திங்களையும், தரித்த முடி படைத்த - சூடிய ஜடா பாரத்தை உடைய, விறல் படைத்த - வெற்றி அமைந்து, இறை கழற்கு - எங்கும் இருப்பவரான சிவபிரானின் திருவடிக்கு, நிகராகும் - ஒப்பாகும் (குகன் வேலே) (திரு வாசகம் கூறுவது போல், சிவபெருமானின் திருவடியே ஐந்தெழுத்தாகும் - 'நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க' - என்ற அடிகளே இதற்குச் சான்றாகும். வேலாயுதம் சிவபெருமானின் திருவடிக்கு ஒப்பாகும் என்பதால் அதுவே பஞ்சாட்சரம் என ஊகிக்க முடிகிறது. இக்கருத்தை உறுதி செய்யும்படிக்கு 'பருவம்' எனத் தொடங்கும் சிதம்பரத்துத் திருப்புகழில்,

'செருவெங் களத்தில் வந்த அவுணன் தெறித்து மங்க
சிவமஞ் செழுத்தை முந்த விடுவோனே' என்கிறார்.

ஆதாலால், ஐந்தெழுத்தை ஓத இயலாதவர்கள் வேல், வேல் என பாராயணம் செய்வதே அதற்கு நிகராகும். இவ்வடிகளின் கருத்தை பல திருப்புகழ் பாக்களில் குறிப்பிடுகிறார். அவைகளில் சில,

'சினத்தொடும் சமன் உதைபட நிருவிய பரன்' (கறுக்கும்-திருப்பரங்குன்றம் திருப்புகழ்)
'காலன் வந்து ஓலம் ஓலம் எனும் ஆதி' (நாலுமைந்து-திருச்செந்தூர் திருப்புகழ்)
'நமனை உயிர் கொளும் அழலின் இணைகழல்' (குமரகுருபர முருக-சுவாமிமலைத் திருப்புகழ்)
'மறலியின் நாட்ட மற சரணீட்டி' (பாட்டில் உருகிலை - தீர்த்தமலைத் திருப்புகழ்)

தலத்தில் உள - தமது ஆட்சியில் உள்ள, கணத்தொகுதி - சிவகண கூட்டம், களிப்பின் உண - மகிழ்வோடு உண்பதற்கு, அழைப்பதென - அழைப்பது போல், மலர்க்கமல கரத்தின் - மலர்ந்த தாமரை அன்ன திருக்கரத்தில், முனை - நுனியை, விதிர்க் வளைவு ஆகும் - அசைக்க வளையும் (குகன் வேலே) (தன்னை வழிபட்டு சூழும் கணங்களுக்கு, ஆனந்த சேவையும், ஆனந்த அமுதும் அளிக்க, குமரன் தன் திருக்கையின் விரல்களினால் வருக, என அழைக்கும் போதெல்லாம், அப்பரமன் ஏந்தியுள்ள திருக்கரத்து வேலாயுதமும் உடன் வளைந்து காட்டும் காட்சியை அனுபவித்த அருணகிரியார் இவ்வண்ணம் கூறுகிறார் என்றும் எதற்கும் வளையாத வேல், அடியாரை பெருமான் அழைக்கும் தருணத்தில், தானும் வளையும் என்பதே இதன் குறிப்பு. பேய்களுக்கு விருந்தளிக்க அழைத்தல் என்பது பொருந்தாது. பேய்களே சூழ்ந்திருப்பன என பொருள் காண்பன என்பது பொருந்தாத ஒன்றாகும்).

தனித்து - துணையின்றி தன்னந் தனியாய், வழி நடக்கும் - வழியில் நடக்கின்ற, எனது இடத்தும் - எனது இடப்பக்கமும், ஒரு வலத்தும் - வலது புறத்தும், இரு புறத்தும் - முன்னும் பின்னுமான இரண்டு பக்கங்களிலும், அருகு அடுத்து - அண்டையில் நெருங்கி, இரவு பகல் துணையதாகும் - இராக் கலத்திலும் பகல் காலத்திலும் துணையாக இருந்து என்னைக் காப்பாற்றும் (குகன் வேலே) (பரமனைத் தரிசிக்கும் வேட்கையால், இரவென்றும் பகலென்றும் பாராமல், குமரக் கோட்டங்களை எண்ணி எண்ணி வழி நோக்கி தன்னம் தனியாக செல்லும்

எனக்கு பூத பிசாசுகள், கள்வர், இயற்கை சீற்றங்கள் இவை போன்ற பற்பல துன்பங்கள் நேராத படி குகன் வேல் என்னைக் காக்கும் என்கிறார் அருணகிரியார். ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் எல்லாம் என்னைக் கைவிட்டு மறலி ஊர்புகும் மரண யாத்திரையின் போதும், திரன காலத்தில் இரவு பகல் அற்ற இடத்தே செல்லும் போதும் ஞான சக்தியாகிய வேலாயுதம் என்னைக் காக்கும் என்பதும் குறிப்பு).

சலத்து வரும் அரக்கர் உடல் - கோபப்பட்டு வருகின்ற அசுரர்களின் உடம்பில், கொழுத்து வளர் - பல தகாத உணவு வகைகளை உண்டு கொழுப்படைந்து வளர்ந்துள்ள, பெருத்த குடர் - பெருத்திருக்கின்ற குடல்களை, சிவத்த தொடை என - சிவத்த பூமாலை போல, சிகையில் விருப்பமொடு சூடும் - தன் உச்சியில் பிரியத்துடன் தரித்துக் கொள்ளும் (குகன் வேலெ) (எங்குமே, என்றுமே அமைதி காணாது பெரும் சினத்தோடு விளங்கும் அவுணரை சலத்து வரும் என்கிறார். அசுரர்கள் அரக்கு போன்ற சென்னிற மேனியர் ஆதலால் அவர்களை அரக்கர் என்கிறார். அசுரர்கள் தின்பதைத் தவிர மற்ற ஒன்றும் செய்து அறியாதவர்கள், ஆதலால் அவர்களை கொழுத்துவளர் என்கிறார். வேல் தனது ஆற்றலுக்கு இசைய அந்த அரக்கர்களது சிறு குடல்களை நீக்கி நீண்டு வளர்ந்துள்ள பெருங்குடல்களையே மாலைகளாக சூடும் என்பதால் பெருத்த குடர் என்கிறார். அசுரரை அழிப்பது வேலுக்கு உவகை தரும் தொழில். ஆகையினால் விருப்பமொடு சூடும் என்கிறார். இக்கருத்தை மற்றொரு வகுப்பான 'கடைக்கண்ணியல்' வகுப்பில்,

'முதியவுணர் அன்றுபட்ட முதியகுடர் நன்று சுற்று
முதுகழுகு பந்தர் இட்ட வேலினான்'

என்பதையும் காணலாம்)

திரைக்கடலை - அலைகள் வீசும் கடலை, உடைத்து - பிளந்து, உடையும் - உடைப்பு எடுத்து ஓடும் (நீரை), உடைப்பை அடைய அடைத்து - உடைப்பு முழுவதும் பல வகையிலும் சிதறாத படி ஆங்காங்கு அணையிட்டது போல் அடைத்து, நிறை புனர் கடிது குடித்து - சமுத்திரத்தில் நிறைந்துள்ள நீரை விரைவில் உருஞ்சிப் பருகி, உதிரம் நிறைத்து விளையாடும் - வெற்றிடமாய் இருந்த கடல் பரப்பில் அவுணர்களின் இரத்தத்தை நீருக்குப் பதிலாக நிரப்பி விளையாடி நிற்கும் (குகன் வேலே) (இந்த அரிய செயல் குகனின் வேற்படைக்கு ஒரு சிறு விளையாட்டு காரியமாக இருந்தது என்கிறார் அருணை முனிவர்).

திசைக்கிரியை - எட்டு திக்குகளிலும் உள்ள மலைகளை, முதற் குலிசன் - தேவர்களில் முதன்மை வாய்ந்த இந்திரன், அறுத்த சிறை முறைத்ததென - அறுத்துத் தள்ளின இறக்கைகள் மறுபடுயும் முளைத்தது என்று பார்ப்போர்கள் கூறுமாறு, முகட்டினிடை பறக்க - அண்ட உச்சியின் நடுவில் பறந்து கொண்டு, அற விசைத்து - அளவில்லா வேகம் கொண்டு, அதிர ஓடும் - அகில உலகங்கள் நடுங்கும் படி விரைந்து ஓடும் (குகன் வேலே) (பண்டை காலத்தில் மலைகள் அனைத்தும் சிறகளுடன் பறந்து உலகோருக்கு கேடு விளைத்து வந்தன. இதை அறிந்த இந்த்ரன் வஜ்ராயுத்தால் மலைகளின் சிறகுகளை அறுத்து எறிந்தான். அன்று முதல் மலைகளனைத்தும் நிலத்தில் அழுந்தி - பூதரம் எனப் பெயர் பெற்றன. பின்பு முருகனுடைய வேற்படை அண்ட உச்சியில் அதிவேகத்தோடு பறந்தபோது உலகெல்லாம்

கிடுகிடு என அதிர்ந்தன. மீண்டும் மலைகளுக்கு சிறகுகள் முளைத்தனவோ என உலகோர் அஞ்சினர் என்கிறார்).

சினத்தவுணர் - கோபத்தை உடைய அசுரர்கள், எதிர்த்த ரண களத்தில் - போர் செய்ய யுத்த களத்தில், வெகு குறைத்தலைகள் - உடலில் இருந்து அறுக்கப்பட்ட அளவற்ற தலைகள், சிரித்து - நாம் எப்படி எல்லாம் இருந்தோம் இப்போது இந்த நிலைக்கு வந்து விட்டோமே என்று வருந்தி தமக்குக் தாமே சிரித்துக்கொண்டு, எயிறு கடித்து - பற்களை நற நற என் கடித்துக் கொண்டு, விழி விழித்து - கண்களை உருட்டிப் பார்த்து, அலற மோதும் - வாய் விட்டு அலறும் படி அசுரர்களைத் தாக்கும் (குகன் வேலே), திருத்தணியில் - சாந்திநிகேதனம் எனப்படும் தணிகையம்பதியில், உதித்தருளும் ஒருத்தன் - ஞான சூரியனாய் காட்சி நல்கும் ஒப்பற்றவனும், மலைவிருத்தன் - மலைக்கிழவனும், எனது உளத்துரை கருத்தன் - என்னுடைய மனதில் எழுந்தருளி இருக்கும் கடவுளும் ஆகிய, மயில் நடத்து குகன் வேலே - மயிலை வாகனமாக கொண்ட முருகப் பெருமானது வேலாயுதமே (மேற்சொன்ன சிறப்புகளைக் கொண்டதாகும்).

**தொகுப்புரை :**

உலகங்கள் அனைத்திற்கும் ஒளி விளங்க, அமைதி நிலையமான திருத்தணியில் உதயமாகும் ஞான திவாகரன், உலகம் அனைத்தையும் தாங்கும் குறிஞ்சிக் கிழவன், அடியேன் உள்ளத்தில் தங்கி இருக்கும் கடவுள், மயில் எனப்படும் ஆவரண சக்தியை ஏறி நடத்தும் எம்மான், உயிர்களின் உள்ளமாம் குகையில் எப்போதும் உறைகின்ற ஒப்பற்றவன் ஆகிய குகப் பெருமான் திருக்கரத்தில் தாங்கி இருக்கும் ஞான சக்தியாகிய வேலாயுதம், வள்ளிப் பிராட்டியின் திருக்கண்களுக்கு ஒப்பாகும், இந்திரனின் கால் விலங்கின் முளை தெறிக்க அராவும் அரமாகும், குகையை இடித்து வழி தெரியும் படி செய்யும், பேய்களின் பசி அகல உபசரிக்கும், அனைவரையும் துன்பப்படுத்தும் வினைப் பெருக்கங்களை மோதி அழிக்கும். ஒளி எல்லாம் நாண பேரொளி வீசும், அடியவர்களுக்கு இடையூறு செய்பவர்களின் குலத்தையே நாசம் செய்யும், எனக்கு எப்போதும் ஒப்பற்ற துணையாக வந்து உதவும், திருப்புகழ் பாடுவோருக்கு நேரும் பகைகளை அறுத்து எறிய ஆக்ரமித்து புறப்படும். அறத்தை நிலை பெறச் செய்யும், எமன் பற்றவரின், மார்க்கண்டேயரைக் காக்க சிவபிரான், நீட்டிய திருவடி போல், விரைந்து வந்து, அந்த எமனை கண்டித்து அடியாரைக் காக்கும், இறைவனின் திருக்கரங்கள் அசையும் போது, எல்லாம் சிவ கணங்களை அமுதுண்ண அழைப்பது போல் தானும் தனது திருமுடியை வளைத்து காட்டும், தனி வழியில் வேறு துணையின்றி செல்லும் போதெல்லாம், இரவும்,பகலும் துணையாக வந்து அச்சம் அகற்றும், அரக்கர்களின் பெருங்குடல்களை எடுத்து மாலை போல் விருப்பமுடன் சூடிக்கொள்ளும், கடலை உடைத்து, புனலைக் குடித்து, உடைந்த உடைப்பை அடைத்து அதில் அவுணரது குருதி நிறைத்து விளையாடும், சிறகுகளுடன் மலைகள் பறக்கின்றது என கண்டவர்கள் கூறுமளவிற்கு விண்ணில் வேகமுடன் அதிர்ச்சி காட்டி ஓடும், போர்க்களத்தில் எதிர்த்த அவுணர்களின் தலைகளை அறுத்து, பற்களை கடித்து, கண்ணை உருட்டி, வீறிட்டு அலற அவைகளை மோதும் என்றெல்லாம் அறக்கருணை மறக்கருணை இருப்பைப் பாடும் முறையில் வேலாயுதத்தின் பரத்துவத்தை பாடுகிறார் நம் அருணை முனிவர்.

# 4. திருவேளைக்காரன் வகுப்பு

### அறிமுகம்

வள்ளி நாயகியுடன், தமது பொழுதினைப் போக்குபவன் என்று கூறி முருகன் பெருமையை விளக்குவது.

தானதன தத்ததன தானதன தத்ததன
தானதன தத்ததன தானத்தானன

### மூலம்

1. ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன வாரக் காரனும்

2. ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
னாருடனு ணக்கைபரி தீமைக் காரனும்

3. ஆகமம்வி ளைத்தகில லோகமு நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றுமதி வேகக் காரனும்

4. ஆணவஅ ழுக்கடையும் ஆவியை விளக்கியநு
பூதியடை வித்ததொரு பார்வைக் காரனும்

5. ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கஅம
ராவதிபு ரக்குமடல் ஆண்மைக் காரனும்

6. ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பில்அரு
ணாபுரியில் நிற்கும்அடை யாளக் காரனும்

7. ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர் தொடுத்தகவி மாலைக் காரனும்

8. ஆறுமுக வித்தகனும் ஆறிருபு யத்தரசும்
ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும்

9. யானெனதெ னச்சருவும் ஈனசம யத்தெவரும்
யாரும் உணர் தற்கரிய நேர்மைக் காரனும்

10. யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை யோடக் காரனும்

11. ஏரகம் இடைக்கழிசி ராமலைதி ருப்பழநி
யேரணிசெ ருத்தணியில் வாசக் காரனும்

12. ஏழையின் இரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக் காரனும்

13. யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனஅ ழைத்துருகு நேயக் காரனும்

14. ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் காரனும்

15. ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளும் ஆசைக் காரனும்

16. ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்கும்இளை
யோனும்அறி விற்பெரிய மேன்மைக் காரனும்

17. வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியில்உ தித்தமுக மாயக் காரனும்

18. வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானும்அய் னைக்கறுவு கோபக் காரனும்

19. வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம்அ ளிக்கும்உப காரக் காரனும்

20. மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவுள் ஆயக் காரனும்

21. வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும் வாசிக் காரனும்

22. வாளகிரி யைத்தனது தாளிலடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்

23. மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலணு வுக்கணுவு பாயக் காரனும்

24. வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியில் நிற்பதொர்ச காயக் காரனும்

25. மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த்த மிழ்த்ரயவி நோதக் காரனும்

26. வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்

27. வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக் காரனும்

28. மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடு பெற வைத்தருள்உ தாரக் காரனும்

29. மேனையரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும்அ ரக்கர் குல சூறைக் காரனும்

30. வேதியர்வெ றுக்கையும்அ நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்

31. வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு போம்விற் காரனும்

32. **மேவியபு னத்திதணில் ஓவியமெ னத்திகழு**
**மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.**

**(பாடல்) சொற்பிரிவு 4**

1. ஆன பயபத்தி வழிபாடு பெறு முத்தியது
வாக நிகழ் பத்தசன வாரக் காரனும்

2. ஆர மதுரித்த கனி காரணம் முதல் தமைய
னாருடன் உணக்கை பரி தீமைக் காரனும்

3. ஆகமம் விளைத்த அகில லோகமும் நொடிப்பளவில்
ஆசையொடு சுற்று அதி வேகக் காரனும்

4. ஆணவம் அழுக்கடையும் ஆவியை விளக்கி
அநுபூதி அடைவித்த ஒரு பார்வைக் காரனும்

5. ஆடலை வுபட்ட அமரர் நாடு அது பிழைக்க
அமராவதி புரக்கும் அடல் ஆண்மைக் காரனும்

6. ஆடகம் விசித்ரம் கனம் கோபுரம் முகப்பில்
அருணாபுரியில் நிற்கும் அடையாளக் காரனும்

7. ஆயிரம் முகத்து நதி பாலனும் அகத்தடிமை
ஆனவர் கொடுத்த கவி மாலைக் காரனும்

8. ஆறுமுக வித்தகனும் ஆறிரு புயத்தரசும்
ஆதிமுடி அற்றதிரு நாமக் காரனும்

9. யான் எனது எனச் சருவும் ஈன சமயத்தவரும்
யாரும் உணர்தற் கரிய நேர்மைக் காரனும்

10. யாதும் நிலையற்றலையும் ஏழுபிறவிக் கடலை
ஏற விடு நற்கருணை யோடக் காரனும்

11. ஏரகம் இடைக்கழி சிராமலை திருப்பழநி
ஏர் அணி செருத்தணியில் வாசக் காரனும்

12. ஏழையின் இரட்டை வினை யாயதொரு உடற்சிறை
இராமல் விடு வித்தருள் நியாயக் காரனும்

13. யாமளை மணக்குமுக சாமளை மணிக்குயிலை
யாய் என அழைத்து உருகும் நேயக் காரனும்

14. ஏதம் அற நிச்சய மனோலய விளக்கொளியும்
யாகமு நிவர்க்குரிய காவற் காரனும்

15. ஈரிரு மருப்புடைய சோனை மதம் வெற்பிவரும்
யானை அளவில் விற்றுவளும் ஆசைக் காரனும்

16. ஏடு அவிழ் கடப்பமலர் கூதள முடிக்கும் இளை
யோனும் அறிவிற் பெரிய மேன்மைக் காரனும்

17. வானவர் பொருட்டு மகவானது பொருட்டுமலர்
வாவியில் உதித்த முக மாயக் காரனும்

18. வாரணபதிக்கு உதவும் நாரணனுக்கு மரு
மானும் அயனைக் கறுவு கோபக் காரனும்

19. வாழி என நித்தம் மறவாது பரவிற்சரண
வாரிசம் அளிக்கும் உப காரக் காரனும்

20. மாடமதில் சுற்றிய த்ரிகூடகிரியில் கதிர்செய்
மாநகரியில் கடவுள் ஆயக் காரனும்

21. வாள் எயிறு உற்ற பகுவாய் தொறும் நெருப்பு உமிழும்
வாசுகி எடுத்து உதறும் வாசிக் காரனும்

22. வாள கிரியை தனது தாளில் இடியப் பொருது
வாகை புனை குக்குட பதாகைக் காரனும்

23. மாசில் உயிர்க்கு உயிரும் மாசில் உணர்வுக் குணர்வும்
வானில் அணுவுக்கு அணுவும் உபாயக் காரனும்

24. வாதனை தவிர்த்த குருநாதனும் வெளிப்பட
மகா அடவியில் நிற்பதொர் சகாயக் காரனும்

25. மீனவனும் மிக்க புலவோர் உறை பொற்பலகை
மீது அமர் தமிழ்த்ரயம் விநோதக் காரனும்

26. வேரி மது மத்தமதி தாதகி கடுக்கை புனை
வேணியர் துதிப்பது ஒரு கேள்விக் காரனும்

27. வேலை துகள்பட்டு மலை சூரன் உடல் பட்டு உருவ
வேலை உற விட்ட தனி வேலைக் காரனும்

28. மீன் உலவு கிர்த்திகை குமாரனை நினைக்குமவர்
வீடு பெற வைத்து அருள் உதாரக் காரனும்

29. மேனை அரிவைக் குரிய பேரனும் மதித்த திறல்
வீரனும் அரக்கர் குல சூறைக் காரனும்

30. வேதியர் வெ றுக்கையும் அநாதி பரவஸ்துவும்
விசாகனும் விகற்பம் வெகு ரூபக் காரனும்

31. வேடுவர் புனத்தில் உருமாறி முநிவர் சொற்படி
வியாகுல மனத்தினொடு போம் விற்காரனும்

32. **மேவிய புனத்து இதனில் ஓவியம் எனத்திகழும்**
**மேதகு குறத்தி திருவேளைக் காரனே.**

**பதவுரை :**

பயபத்தி - பயத்துடனும் பக்தியுடனும், ஆன - தம்மால் முடிந்தவரை, வழிபாடு - இறைவனைத் தொழுது வழிபாடு செய்வதே, பெறு முத்தி என - தாம் அடைய வேண்டிய முத்திப் பேறு என்று நினைத்து, அதுவாக நினை - அந்த வழிபாட்டையே தொடர்ந்து செய்யும், பத்த சன - பத்தர் கூட்டங்களின் மேல், வாரக் காரனும் - அன்பைச் செலுத்துபவன் (குறத்தி திருவேளைக்காரனே)

தீவிரமான பக்தி நிலையை அடைந்த அடியவர்கள் மோட்சப் பேற்றை விட கடவுளை வழிபாடு செய்வதையே விரும்புவார்கள். திருநாவுக்கரசரின் 'குனித்த புருவமும்' எனத்தொடங்கும் தேவாரப் பாடலில், ஈசனின் தரிசனம் கிடைத்தால் இம் மானிடப் பிறவியே விசேடம் என்கிறார். கந்த புராணத்தில் வீரபாகுவும் கந்தப்பெருமானிடம் கேட்ட வரமும் இதுவேயாகும். பயபக்தி என்பதை ஆசார பூஜை என்பார். அன்பு என்பது பக்தி. பயம் என்பது ஆசாரம்)

ஆர - நிரம்பிய, மதுரித்த - இனிமை பொருந்திய, கனி காரணம் - மாதுளம் கனியை பெற வேண்டிய காரணத்தினால், முதல் - முன்பு ஒரு காலத்தில், தமையனாருடன் - மூத்தவராகிய

விநாயகப் பெருமானுடன், உணக்கை - சிவனார் ஏற்படுத்திய போட்டியில் ஏற்பட்ட, பரி - வருத்தத்தையும், தீமைக்காரனும் - கோபத்தையும் பெற்றவன் (குறத்தி திருவேளைக்காரனே).

(தனது தந்தையார் போட்டியில் சரியான நீதி வழங்கவில்லை என்று முருகப்பெருமான் வருத்தமும் கோபமும் கொண்டார் என்பதை 'புடவிக்கணி' எனத் தொடங்கும் பழநித் திருப்புகழில்

''உயர்செம்பொன் கிரியைத் தனிவலம் வரஅர னந்தப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே

பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரவில்லை என'' - அழகாக சித்தரிக்கிறார்.)

ஆகமம் விளைத்த - தர்ம சாஸ்திரங்கள் நிறைந்துள்ள, அகில லோகமும் - எல்லா உலகங்களையும், நொடிப்பளவில் - ஒரு நொடிப்பொழுதில், ஆசையோடு சுற்றும் - விருப்பத்தோடு வலம் வந்த, அதி வேகக் காரனும் - மிகுந்த வேகத்தை உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(முருகப் பெருமான் சுற்றி வந்த வேகத்தைக் கண்டு, கணபதியும் பிளறினார் என்று ஒரு திருப்புகழில் குறிப்பிடுகிறார். மயில் சுத்த மாயை. ஆதலால் அது ஒரு நொடிப் பொழுதில் உலகமெலாம் சுற்றி வர முடிந்தது.

ஆணவ அழுக்கடையும் - ஆணவ இருளில் மூடி இருக்கும், ஆவியை விளக்கி - என்னுடைய ஆன்மாவை ஞான ஒளி பெறச் செய்து (ஒரு பாத்திரத்தில் சேர்ந்துள்ள அழுக்கை நீக்குவது போல்) அநுபூதி அடைவித்த - ஞான அநுபவத்தை எனக்குப் புகட்டிய, ஒரு பார்வைக் காரனும் - ஒப்பற்ற அருள் நோக்கை உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

பலவித தீட்சைகளில் நயன தீட்சை மிகவும் ஒப்பற்றதாகும். அருணகிரியார் தனக்கு குமரப் பெருமான் இந்த தீட்சைஅளித்ததை பல பாக்களில் கூறியுள்ளார்.

1. தழைந்த சிவசுடர் தனையென மனதினில்
அழுந்த வுரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமு மிருமலர் சரணமு மறவேனே

2. பரகதி பெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே

3. விழி அருள் தந்த பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே

ஆடலைவு பட்ட - தடுமாற்றமும் அலைச்சலும் அடைந்த, அமரர் நாடது பிழைக்க - தேவ லோகம் மீண்டும் புத்துயிர் பெறும்படி, அமராவதி புரக்கும் - அமராவதி நகரைக் காத்தருளிய, அடல் ஆண்மைக் காரனும் - வலிமையும், ஆண்மையும் உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(சூரபத்மாவினால் தேவலோகம் தீக்கிரையாகப்பட்ட போது, பிரம்மா, விஷ்ணு ருத்திரன் எனும் மும்மூர்த்திகளாலும், அமராவதியை காக்க முடியவில்லை. அந்த அண்டர்பதியில் தேவர்களை

குடி ஏறச் செய்தவன் 'எனது முருகன் தான்' என்று அளவற்ற பெருமையுடன் அவனை ஆண்மைக்காரன் என்கிறார்.

ஆடக - பொன்னால் செய்யப் பட்டதும், விசித்ர - அற்புதமான அழகுடையதும், கன - பெருமை மிக்கதுமான, கோபுர முகப்பில் - கோபுர வாயிலில், அருணாபுரியில் - திருவண்ணாமலையில் விளங்கும், அடையாளக் காரனும் - என்னுடைய பிரத்யக்ஷ மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே)

(தான் உலக வாழ்க்கையில் சலிப்புற்று, அன்று வல்லாள மகாராஜனின் கோபுரத்திலிருந்து வீழ்ந்த போது, தன்னை காத்து தனக்கு உபதேசம் செய்தருளிய மூர்த்தி இவன் தான், என்று அடையாளம் காட்டுகிறார்.

அருணகிரியார், கந்தர் அலங்காரத்தில்,

"அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டு கொண்டேன்" - என்பார்)

ஆயிர முகத்து நதி பாலனும் - ஆயிரம் பிரிவுகளை உடைய கங்கா நதியின் பாலகனும், அகத்தடிமையானவர் - உள்ளத்துள்ளே மெய்யன்பு பூண்ட அடியார்கள், தொடுத்த கவி மாலைக்காரனும் - இயற்றிய சொல் மாலைகளை அன்புடன் புனைந்திருப்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

கங்கா நதியின் சரவணப்பொய்கையில் அவதரித்தவன் முருகன். ஆகையினால், அவனுக்கு காங்கேயன் எனும் நாமம் ஏற்பட்டது. ஒரு நாள் வாழ்ந்து, வாடிப் போகும் மலர் மாலைகளை விட, முருகப் பெருமானுக்கு உகந்தது, சொல் மாலைகளே என்பதை பல பாக்களில், கூறியுள்ளார் அருணகிரியார். கந்தர் அநுபூதியை 'மாத்ருகா புஷ்ப மாலை' என்பார்.

"மல்லேபுரி பன்னிரு வாகுவில் என்
சொல்லே புனையும் சுடர் வேலவனே" என்பார்.)

ஆறுமுக வித்தகனும் - ஆறுமுகம் படைத்த ஞான சொரூபனும், ஆறிருபு யத்தரசும் - பன்னிரு திருத்தோள்களை உடைய மன்னனும், ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும் - அந்தமும் ஆதியும் இல்லாத பெரும் புகழை உடையவனும். (குறத்தி திருவேளைக்காரனே)

(ஒரு பொருளுக்கு ஆரம்பம் இருந்தால் முடிவும் கட்டாயம் இருக்கும். பெம்மான் முருகன் பிறவான் இறவான் ஆதலால் அவனுக்கு ஆதியும் அந்தமும் கிடையாது. அவனுடைய மகிமைக்கும் ஆதியும் அந்தமும் கிடையாது.)

யான் எனது எனச்சருவும் - நான், என்னுடையது எனும் அகங்காரம் மமகாரத்துடன் மற்றவர்களுடன் சண்டை போடும், ஈனசம யத்தெவரும் - இழிவான புறச்சமயத்தைச் சேர்ந்தவர்கள் எவராலும், யாரும் உணர் தற்கரிய - எந்த வகையிலும் அறிய முடியாத, நேர்மைக் காரனும் - நுணுக்கமான சத்தியப் பொருளாய் இருப்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(அகங்காரமும் மமகாரமும் ஒழிந்தால் தான், சத்தியப் பொருளைக் காணலாம். யான், தான் எனும் சொல் இரண்டும் கெட்டாலன்றி யாவருக்கும் தோன்றாது சத்தியம் - என்பார் (கந்தர் அலங்காரத்தில்)

''எனதாம் தனதாம் அவை போயற
மலமாங்கடு மோகவி காரமு''

இவை நீங்கிட - என்பார் 'வரிசேர்ந்திடு' எனத் தொடங்கும் திருவேங்கடத் திருப்புகழில்

யாதுநிலை அற்று அலையும் - எப்போதும் ஒரு நிலையில் இல்லாது சதா வீசி வீசி அடங்கும், ஏழுபிறவிக் கடலை - ஊர்வன, நடப்பன, நீரில் வாழ்வன, பறப்பன, மனிதர், தேவர், பேய்க் கணங்கள் எனும் பிறப்புகளைக் கொண்டுவரும் பவ சாகரத்தை, ஏறவிடு நற்கருணை யோடக் காரனும் - தப்ப வைத்து கரை ஏறச் செய்யும் நன்மை தரும் தன் பாதங்களான புணையைக், கருணையுடன் கொடுக்கும் ஓடக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(முருகன் நம்மை முத்தி வீட்டிற்கு அழைத்துச் செல்லும் படகோட்டி என்பதை 'அனித்தமான' எனத் தொடங்கும் திருவானைக்காத் திருப்புகழிலும், 'சுவர்க்க லோக மீகாம' (மீகாம - மாலுமி - Pilot) என்பார்

ஏரகம் - சுவாமி மலை, இடைக்கழி - திருவிடைக்கழி, சிராமலை - திருச்சிராமலை எனும் திருச்சிராப்பள்ளி அல்லது சென்னி மலை, திருப்பழநி - பழநி மலை, யேரணிசெ ருத்தணியில் வாசக் காரனும் - அழகான திருத்தணி போன்ற திருப்பதிகளில் வாசம் செய்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

ஏழையின் இரட்டைவினை யாயது - இந்த அடிமை முற்பிறவியில் செய்த நல்வினை தீ வினையால் ஏற்பட்ட, ஓர் உடற்சிறையிராமல் விடுவித்தருள் நியாயக் காரனும் - இந்த சரீரமாகிய சிறைச் சாலை நீங்கும்படி எனக்கு விடுதலை கொடுத்த நீதிமானும் (குறத்தி திருவேளைக்காரனே)

இந்த வரிகளில் அருணகிரியாரின் வாழ்க்கைக் குறிப்பு அடங்கி உள்ளது. (பேய்கள் சூழ சுடுகாட்டில் எரிதனில் இடும் வாழ்வை உன் அடியேனாகிய நான் பெறுவது நீதியா? என முறையிடுகிறார் ஓசை முனி.

முருகப் பெருமான் குருவாய் வந்து, ஞான உபதேசம் செய்ததால், ஸ்தூல சரீரம் நீங்கி கிளி ரூபம் பெற்றார். இதை அநுபூதியில், 'கூகா என என் கிளை கூடி அழப் போகா வகை மெய்ப் பொருள் பேசியவா' எனக்குறிப்பிடுகிறார். தனக்கு கிளி ரூபம் தந்து தனக்கு நியாயத்தை வழங்கிய நீதிமானே என குமரப் பெருமானை புகழ்கிறார் அருணை முனிவர்)

யாமளை- கரு நீல உருவினள், மணக்குமுக சாமளை - தெய்வீக மணம் வீசும் நீல நிறத்தவள், மணிக்குயிலை - (ஆகிய) அழகான குயில் போன்ற பார்வதி தேவியை, ஆய் யென அழைத்துருகு நேயக் காரனும் - எனது அன்னையே என அன்புடன் உருகி அழைக்கும் நேசம் உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

ஏதமற - குற்றம் அனைத்தும் நீங்க, நிச்சய - சந்தேகம் இல்லாமல் உறுதி பெறும் படி, மனோலய விளக்கொளியும் - மனம் ஒடுங்கும் நிலையைத் தருகின்ற ஞான ஒளி வீசும்

விளக்கு போன்றவனும், யாக முனிவர்க்குரிய காவற் காரனும் - வேள்விகளைச் செய்யும் யாக முனிவர்களைப் பாதுகாக்கும் யாக ரக்ஷக மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே)

(எது மெய்ப் பொருள் என விளங்காமல் தடுமாறுதல், நிர்விகல்ப சமாதி எனப்படும். சமாதி மனோலயத்தில் அனைத்தும் தெளிவடையும். இந்நிலையைக் கொடுப்பவன் குமரக் கடவுளே. வேத யாகங்களை செய்வதற்கு ஏற்படும் இடையூறுகளை நீக்குபவன் முருகன் என்பதை - அந்தண் மறை வேள்வி காவற்கார - என்பார் 'முந்து தமிழ்' எனத்தொடங்கும் திருச்செந்தூர் திருப்புகழில்)

ஈரிரும ருப்புடைய - நான்கு தந்தங்களை உடைய, சோனைமத - பெரு மழை போல் பெருகி வரும் மதநீர் கொட்டுகின்ற, வெற்பில் வரும் - மலை போன்ற ஐராவதத்தில் பவனி வரும் யானை அளவில் - தேவயானையுடன், துவளும் ஆசைக் காரனும் - நெகிழ்ச்சி உற்று சேருகின்ற அன்பைச் செலுத்துகின்றவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

ஏடு அவிழ் கடப்பமலர் கூதள முடிக்கும் இளையோனும் - இதழ்கள் விரிந்த கடப்ப மாலைகளையும், கூதாள மலர் மாலைகளையும் தரித்திருக்கும் குமாரனும், அறிவில் பெரிய மேன்மைக் காரனும் - சிறந்த ஞான அறிவாளியாக விளங்குபவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(வயதில் முருகன் எப்போதும் இளையவன். அவனே ஞான பண்டித நாதன். ஞானாச் சாரியனும் அவனே.)

வானவர் பொருட்டு - தேவர்களின் பொருட்டும், மகவானது பொருட்டு - இந்திரனுக்காகவும், மலர் வாவியில் உதித்த - சரவணப் பொய்கையில் அவதாரம் செய்த, முகமாயக் காரனும் - அற்புதமான அழகு படைத்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(பல யுகங்களாக சூரபத்மனின் கொடுங்கோலால் அவதிப்பட்ட தேவர்களையும், இந்திரனையும் காப்பாற்றுவதற்காக ஐந்து முகச் சிவ பெருமான் ஆறு முகத்தோடு சரவணப் பொய்கையில் தோன்றினார். இந்த அற்புதத் தோற்றத்தை ''கைத்தருண ஜோதி'' எனத் தொடங்கும் சிதம்பரத் திருப்புகழில்,

''கைத்தருண ஜோதி'' எனத்தொடங்கும் சிதம்பரத் திருப்புகழில்,

> ''சித்ரமுக மாறு முத்துமணி மார்பு
> திக்கினினி லாதப் பெருமாள்காண்'' என்பார்

வள்ளிப் பிராட்டிக்கும் இந்த அற்புத அழகு உண்டு என ஜெக மாயை எனத்தொடங்கும் சுவாமிமலைத் திருப்புகழில்,

> ''முக மாயமிட்ட குறமாது'' - என்பார்

வாரணபதிக்கு உதவு - ஐராவதத்தின் தலைவனாகிய தேவேந்திரனுக்கு பற்பல உதவிகளைச் செய்த, நாரணன் உவக்கு மருமானும் - நாராயண மூர்த்தி மகிழ்ச்சி அடையும் மருமகனும், அயனைக்கறுவு கோபக் காரனும் - பிரணவப் பொருள் தெரியாத குற்றத்திற்காக பிரம்மனை கோபித்த கோபக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே)

பல சமயங்களில் இந்திரனுக்கு இன்னல்கள் ஏற்பட்ட போது, திருமால் அவனுக்கு உதவிகள் புரிந்துள்ளார். விருத்தாசுரனை வெல்ல முடியாமல் இந்திரன் தவித்த போது, ததீகி முனிவரின் முதுகெலும்பை வஜ்ராயுதமாக்கி ஏவச் சொன்னவர் திருமாலே. இந்திரனுக்காக நரகாசுரனையும் முரனையும் கொன்றவரும் திருமாலே. ஒரு சமயம், அசுரர்களின் கொடுமை தாங்காமல் உதவி கேட்ட போது, இந்திரனுக்கு தன் மார்பகத்தில் பூஜித்து வந்த ஈஸ்வரன், தேவி முருகவேள் மூவரும் கூடிய மூர்த்தத்தை கொடுத்து உதவினார். இதனால் இந்திரன் வெற்றி பெற்றான். இம் மூர்த்தமே பிற்காலத்தில் திருவாரூரில் தியாகேசராக விளங்குகிறார் (வீதி விடங்கர்).

வாரணபதி என்னும் சொல்லுக்கு வேறு ஒரு பொருளும் காணலாம். யானைகளுக்கு தலைவனான கஜேந்திரனுக்கு உதவிய நிகழ்ச்சியையும் கூறலாம்.)

வாழியென நித்த மறவாது பரவிற் - தேவரீர் வாழ்ந்து வாழி வாழி என தினமும் மறவாமல் வாழ்த்து கூறி பாடினால், சரண வாரிசம் அளிக்கும் உப காரக் காரனும் - தன் திருவடித் தாமரைகளை தன் அடியார்களுக்கு அடைக்கலமாகக் கொடுக்கும் கொடையாளியும் (குறத்தி திருவேளைக்காரனே)

மாடமதில் சுற்றிய த்ரிகூடகிரியில் - மாட மாளிகைகளும் மதில்களும் மிக்க திருக்குற்றால நன்னகரிலும், கதிர்செய் மாநகரியில் கடவுள் ஆயக் காரனும் - கதிர் காமம் எனும் பெரிய நகரத்திலும் தேவர்கள் சூழ விளங்கி வீற்றிருப்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(ஆயம் என்றால் பழந்தமிழில் சுங்க வரி எனப் பொருள்படும். தன்னை நோக்கி வரும் அடியார்களின் அரும் பகைகளையும் மும்மலங்களையும் சுங்கவரியாக வசூலித்து அவர்களை சிவலோகத்திற்கு கொண்டு விடுபவர் இந்த ஆயக்காரர்). இக்கருத்தை கந்தர் அந்தாதியில், "திறவு ஆ அனகபுரி வாசல் நீக்க" - எனப் பாடுவார்.

வாள் எயிறு அது உற்ற - வாள் போல் பிரகாசித்து கூர்மை கொண்ட பற்களை உடைய, பகு வாய்தொறு நெருப்புமிழும் - திறந்துள்ள வாய்களில் நெருப்பு ஜ்வாலையை கக்கும், வாசுகி எடுத்து உதறும் வாசிக் காரனும் - வாசுகி எனும் சர்ப்பராஜனை தனது மூக்கால் பிடித்து உதறுகின்ற வாசிக் குதிரையான மயிலை வாகனமாக உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

வாளகிரியைத் தனது தாளில் இடியப் பொருது - சக்ர வாள கிரியைத் தனது கால்களினால் மோதித் தள்ளி, வாகை புனை குக்குட பதாகைக் காரனும் - வெற்றி மாலை சூடும் சேவலை தனது கொடியாக உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

மாசு இல் உயிர்க்கு உயிரும் - குற்றமற்ற ஜீவாத்மாக்களுக்குள் உயிர்ப்பு சக்தியாக இருப்பவரும், மாசு இல் உணர்வுக்கு உணர்வும் - கெடுதல் அற்ற உள்ளத்துள் உள் ஒளியாக இருப்பவரும், வானில் அணுவுக்கு அணு உபாயக் காரனும் - ஆகாயத்தில் காணப்படும் அணுக்களுக்குள் சிறிய அணுவாய் இருக்கும் பெரிய தந்திரக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(முருகன் அணுவுக்குள் அணுவாய் இருப்பதை வேதத்தில் - அணோர் அணியான் எனும் வாக்கால் உணரலாம்)

வாதனை தவிர்த்த குருநாதனும் - எனது பிறவி வேதனையைத் தீர்த்து உலக வாசனையே இல்லாதபடி செய்த ஆச்சார்ய மூர்த்தியும், வெளிப்பட மகா அடவியல் நிற்பதொர் சகாயக் காரனும் -பெரிய காட்டில் தோன்றி எனக்கு பெரிய உதவியைச் செய்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(அருணகிரியார் தனக்கு பிறவி பிணி ஒழிந்து போனது என்கிற செய்தியைப் பல இடங்களில் விளம்பியுள்ளார். 'விட்டது பாசவினை விலங்கே' என்பார் கந்தர் அலங்காரத்தில் அவர் கதிர்காமத்திற்கு செல்லும் போது காட்டில், நடுநிசியில் வழி தெரியாமல் தவித்த போது முருகன் வழிகாட்டியாக வந்து உதவினார் என்பது அருட்கவி சாதுராம் சுவாமிகள் அருளிய அருட்புகழ் மூலம் தெரிய வருகிறது)

மீனவனு - மீனைக் கொடியாக கொண்ட பாண்டிய வம்சத்தில், உக்ர பாண்டியனாக உதித்தவனும், மிக்க புலவோரும் உறை பொற்பலகை - அறிவில் மிக்க சங்கப் புலவர்கள் வீற்றிருக்கும் அழகிய சங்கப் பலகையின், மீதமர் தமிழ் த்ரய விநோதக் காரனும் - மீது அமர்ந்திருக்கும் முத்தமிழில் வல்லமை, ஒப்பில்லாத திறமை உடைய விசித்திரமானவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(முருகப் பெருமான் ருத்ர ஜன்மனாக வந்து சங்கத்தாரின் கலகம் தீர்த்த திருவிளையாடல் குறிப்பு இங்கு வருகிறது. இது பற்றி,

'சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர் செப் பியிடப் பரிவாலே

சநகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யசநற்
குமரர்க் குமநுக் க்ரகமெய்ப் பலகைச்
சதவுத் துநவப் புலவர்க்கும்விபத் தியில்ஞான

படலத் துறுலக் கணலக் யதமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத்தியினைப்
பழுதற் றுணர்வித தருள் வித்தக' - என்பார் 'கடலை சிறை' எனத் தொடங்கும் பழநி மலைத் திருப்புகழில்)

வேரி - நறு மணம் வீசும், மது - தேன் நிரம்பி இருக்கும், மத்த - ஊமத்தம் பூ, மதி - சந்திரன், தாதகி - (தா + தகி) குற்றங்களை தகிப்பதால் தாதகி எனப் பெயருடைய அகத்தி, கடுக்கை - கொன்றை (இவைகளை), புனை வேணியர் - தரித்துள்ள சடையை உடைய சிவபெருமான், துதிப்பதொரு கேள்விக் காரனும் - வணங்குகின்ற கல்வி சிரேஷ்டனும் (குறத்தி திருவேளைக்காரனே)

வேலை துகள்பட்டு - சமுத்திரம் தூள் படவும், மலை சூரன் உடல் பட்டு உருவ - தனக்குக் காவலாக இருந்த ஏழு மலைகளுடன் சூரன் உடல், கிரவுஞ்ச மலை இவைகளை பொடிந்து



போகும் படி ஊடுருவி, வேலை உற விட்ட தனி வேலைக் காரனும் - சமுத்திரத்தின் உள்ளே வேலாயுதத்தை செலுத்திய ஒப்பற்ற தொழில் செய்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

மீன் உலவு கிர்த்திகைகு மாரனு - நக்ஷத்திர ரூபத்தில் விளங்கும் கிருத்திகை மாதர்களின் வளர்ப்புப் புதல்வனும், நினைக்குமவர் - தன்னைத் தியானிப்பவர்கள், வீடு பெற வைத்து அருள் உதாரக் காரனும் - மோட்சத்தை அடையும்படி செய்து அருள் புரியும் கருணா மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே)

('முத்தி விதரணவு தாரக் கார' என்பார் விட்ட புழுகு எனத் தொடங்கும் திருப்புகழில்)

மேனையரி வைக்குரிய பேரனு - இமராஜனின் மனைவி, மேனை, எனும் மாதின் பேரனாக வந்தவனும், மதித்ததிறல் வீரனும் - அனைவராலும் போற்றப்படும் வலிமை மிக்க வீரனும், அரக்கர் குல சூறைக் காரனும் - இராக்கத குலத்தினரைச் சூராவளிக் காற்றுப் போல் அழித்தவனும். (குறத்தி திருவேளைக்காரனே)

வேதியர் வெ றுக்கையும் - அந்தணர்களின் பெரும் செல்வமும், அநாதிபர வஸ்துவும் - அநாதியான பரம் பொருளும், விசாகனும் - விசாக நக்ஷத்திரத்திற்கு உரியவனும், விகற்ப வெகு ரூபக் காரனும் - பலவித உருவங்களை எடுத்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

(திருமுருகாற்றுப்படையில் அந்தணர் வெறுக்கை என்பதை இங்கு வேதியர் வெறுக்கை என்கிறார். வள்ளி புனத்தில் வள்ளிப் பிராட்டியாருக்காக, அரச குமாரனாக, வேடனாக, விருத்தனாகப் பல வேடங்கள் பூண்டதை - ரூப வெகு விகற்ப என்கிறார். 'பார நறு' எனத் தொடங்கும் திருப்புகழில்,

'நாரத னன்றுச காய மொழிந்திட
நாயகி பைம்புன மது தேடி
நாண மழிந்துரு மாறிய வஞ்சக' என்பார்.

வேடுவர் புனத்தில் உரு மாறி - வேடுவரின் மலைக் காட்டில் தனது உருவத்தை மறைத்து வேறு உருவம் தரித்து

முனி சொற்படி - நாரத முனிவர் சொன்ன படி

வியாகுல மனத்தினொடு போம்விற் காரனும் - தான் முன்பு கொடுத்த வரத்தின் படி வந்து வேடர்களிடம் வளர்ந்த வள்ளியம்மையை, ஆட்கொள்ளுவதற்காக கவலை பொருந்திய மனத்துடன் ஞானமாகிய வில்லைத் தரித்துக் கொண்டு வருபவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

மேவிய புனத்து - மலைச் சாரத்தில் உள்ள தினைப் புனத்தில், இத்தணில் - பரண் மேலே, ஓவியம் எனத்திகழும் - வரையப் பட்ட சித்திரம் போல அழகாக விளங்கும், மேதகு குறத்தி - மேன்மையான வள்ளிபிராட்டியுடன், திருவேளைக் காரனே - பல வித திரு விளையாடல்கள் செய்து அவளுடன் பொழுதைப் போக்கியவன்தான் இதுகாறும் சொன்ன பெருமை மிக்கவன். வேடர் செழுந்தினை எனத் தொடங்கும் திருப்புகழில்,

'மேனித எர்ந்துரு காப்பரி தாபமு டன்புன மேற்றிரு
வேளைபு குந்தப ராக்ரம மதுபாடி
நாடறி யும்படி கூப்பிடு நாவலர்' - என்று கூறிய அருணகிரி நாதர்,

இந்த வேளைக்காரன் வகுப்பு பாடி அந்த பணியைத் தானே நிறைவேற்றிக் கொடுத்தார். ஒவியமெனத் திகழும் என்கிற வார்த்தைகள் ஒவியத்தில் அந்தம் என்கிற அடிகளை நினைவு படுத்துகின்றன. சுற்றம், சூழ்நிலைகளை மறந்து ஏகச் சித்த தியானத்துடன் சித்திரம் போல் திகழ்ந்த வள்ளிப் பிராட்டியின் பக்குவ காலத்தை அறிந்து ஆட்கொண்டதை இங்கு அழகாக சித்தரிக்கிறார். பக்குவம் வரும் போது ஜீவாத்மாக்களை முருகப் பெருமான் தானே வலிய வந்து ஆட்கொள்ளுவான் என்பதை 'சேரிக்குவடு' எனத் தொடங்கும் கந்தர் அந்தாதியிலும் கூறுவார்.

**பொழிப்புரை :**

பயத்துடனும் பக்தியுடனும், தம்மால் முடிந்தவரை, இறைவனைத் தொழுது வழிபாடு செய்வதே, தாம் அடைய வேண்டிய முத்திப் பேறு என்று நினைத்து, அந்த வழிபாட்டையே தொடர்ந்து செய்யும், பக்தர் கூட்டங்களின் மேல் (குறத்தி திருவேளைக்காரனே), நிரம்பிய, இனிமை பொருந்திய, மாதுளம் கனியை பெற வேண்டிய காரணத்தினால், முன்பு ஒரு காலத்தில், மூத்தவராகிய விநாயகப் பெருமானுடன், சிவனார் ஏற்படுத்திய போட்டியில் ஏற்பட்ட, வருத்தத்தையும், கோபத்தையும் பெற்றவன் (குறத்தி திருவேளைக்காரனே), தர்ம சாஸ்திரங்கள் நிறைந்துள்ள, எல்லா உலகங்களையும், ஒரு நொடிப்பொழுதில், விருப்பத்தோடு வலம் வந்த, மிகுந்த வேகத்தை உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே), ஆணவ இருளில் மூடி இருக்கும், என்னுடைய ஆன்மாவை ஞான ஒளி பெறச் செய்து (ஒரு பாத்திரத்தில் சேர்ந்துள்ள அழுக்கை நீக்குவது போல்) ஞான அநுபவத்தை எனக்கு புகட்டிய, ஒப்பற்ற அருள் நோக்கை உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

தடுமாற்றமும் அலைச்சலும் அடைந்த, தேவலோகம் மீண்டும் புத்துயிர் பெறும்படி, அமராவதி நகரைக் காத்தருளிய, வலிமையும், ஆண்மையும் உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே), பொன்னால் செய்யப் பட்டதும், அற்புதமான அழுகுடையதும், பெருமை மிக்கதுமான, கோபுர வாயிலில், திருவண்ணாமலையில் விளங்கும், என்னுடைய பிரத்யக்ஷ மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே), ஆயிரம் பிரிவுகளை உடைய கங்கா நதியின் பாலகனும், உள்ளத்துள்ளே மெய்யன்பு பூண்ட அடியார்கள், இயற்றிய சொல் மாலைகளை அன்புடன் புனைந்திருப்பனும் (குறத்தி திருவேளைக்காரனே), ஆறுமுகம் படைத்த ஞான சொரூபனும், பன்னிரு திருத்தோள்களை உடைய மன்னனும், அந்தமும் ஆதியும் இல்லாத பெரும் புகழை உடையவனும். (குறத்தி திருவேளைக்காரனே)

நான், என்னுடையது எனும் அகங்காரம் மமகாரத்துடன் மற்றவர்களுடன் சண்டை போடும், இழிவான புறச்சமயத்தைச் சேர்ந்தவர்கள் எவராலும், எந்த வகையிலும் அறிய முடியாத, நுணுக்கமான சத்தியப் பொருளாய் இருப்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே), எப்போதும் ஒரு நிலையில் இல்லாது சதா வீசி வீசி அடங்கும், ஊர்வன, நடப்பன, நீரில் வாழ்வன, பறப்பன, மனிதர், தேவர், பேய்க் கணங்கள் எனும் பிறப்புகளைக் கொண்டுவரும்

பவ சாகரத்தை, தப்ப வைத்து கரை ஏறச் செய்யும் நன்மை தரும் தன் பாதங்களான புணையைக் கருணையுடன் கொடுக்கும் ஒடக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே), சுவாமி மலை, திருவிடைக்கழி, திருச்சிராமலை எனும் திருச்சிராப்பள்ளி அல்லது சென்னி மலை, பழநி மலை, அழகான திருத்தணி போன்ற திருப்பதிகளில் வாசம் செய்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

இந்த அடிமை முற்பிறவியில் செய்த நல்வினை தீ வினையால் ஏற்பட்ட, இந்த சரீரமாகிய சிறைச் சாலை நீங்கும்படி எனக்கு விடுதலை கொடுத்த நீதிமானும் (குறத்தி திருவேளைக்காரனே), கரு நீல உருவினள், தெய்வீக மணம் வீசும் நீல நிறத்தவள், (ஆகிய) அழகான குயில் போன்ற பார்வதி தேவியை, எனது அன்னையே என அன்புடன் உருகி அழைக்கும் நேசம் உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே), குற்றம் அனைத்தும் நீங்க, சந்தேகம் இல்லாமல் உறுதி பெறும் படி, மனம் ஒடுங்கும் நிலையைத் தருகின்ற ஞான ஒளி வீசும் விளக்கு போன்றவனும், வேள்விகளைச் செய்யும் யாக முனிவர்களைப் பாதுகாக்கும் யாக ரக்ஷக மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே), நான்கு தந்தங்களை உடைய, பெரு மழை போல் பெருகி வரும் மதநீர் கொட்டுகின்ற, மலை போன்ற ஐராவதத்தில் பவனி வரும், தேவயானையுடன், நெகிழ்ச்சி உற்று சேருகின்ற அன்பைச் செலுத்துகின்றவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

இதழ்கள் விரிந்த கடப்ப மாலைகளையும், கூதாள மலர் மாலைகளையும் தரித்திருக்கும் குமாரனும், சிறந்த ஞான அறிவாளியாக விளங்குபவனும் (குறத்தி திருவேளைக்காரனே), தேவர்களின் பொருட்டும், இந்திரனுக்காகவும், சரவணப் பொய்கையில் அவதாரம் செய்த, அற்புதமான அழகு படைத்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே), ஐராவதத்தின் தலைவனாகிய தேவேந்திரனுக்கு பற்பல உதவிகளைச் செய்த, நாராயண மூர்த்தி மகிழ்ச்சி அடையும் மருமகனும், பிரணவப் பொருள் தெரியாத குற்றத்திற்காக பிரம்மனை கோபித்த 'கோபக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே), தேவரீர் வாழ்ந்து வாழி வாழி என தினமும் மறவாமல் வாழ்த்து கூறி பாடினால், தன் திருவடித் தாமரைகளை தன் அடியார்களுக்கு அடைக்கலமாகக் கொடுக்கும் கொடையாளியும் (குறத்தி திருவேளைக்காரனே)

மாட மாளிகைகளும் மதில்களும் மிக்க திருக்குற்றால நன்னகரிலும், கதிர் காமம் எனும் பெரிய நகரத்திலும் தேவர்கள் சூழ விளங்கி வீற்றிருப்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே), வாள் போல் பிரகாசித்து கூர்மை கொண்ட பற்களை உடைய, திறந்துள்ள வாய்களில் நெருப்பு ஜ்வாலையை கக்கும், வாசுகி எனும் சர்ப்பராஜனை தனது மூக்கால் பிடித்து உதறுகின்ற வாசிக் குதிரையான மயிலை வாகனமாக உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே), சக்ர வாள கிரியைத் தனது கால்களினால் மோதித்தள்ளி, வெற்றி மாலை சூடும் சேவலைத்தனது கொடியாக உடையவனும் (குறத்தி திருவேளைக்காரனே), குற்றமற்ற ஜீவாத்மாக்களுடன் உயிர்ப்பு சக்தியாக இருப்பவரும், கெடுதல் அற்ற உள்ளத்துள் உள் ஒளியாக இருப்பவரும், ஆகாயத்தில் காணப்படும் அணுக்களுக்குள் சிறிய அணுவாய் இருக்கும் பெரிய தந்திரக்காரனும் (குறத்தி திருவேளைக்காரனே), எனது பிறவி வேதனையைத் தீர்த்து உலக வாசனையே இல்லாதபடி செய்த ஆச்சார்ய மூர்த்தியும், பெரிய காட்டில் தோன்றி எனக்கு பெரிய உதவியைச்

செய்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே), மீனைக் கொடியாக கொண்ட பாண்டிய வம்சத்தில் உக்ர பாண்டியனாக உதித்தவனும், அறிவில் மிக்க சங்கப் புலவர்கள் வீற்றிருக்கும் அழகிய சங்கப் பலகையின், மீது அமர்ந்திருக்கும் முத்தமிழில் வல்லமை, ஒப்பில்லாத திறமை உடைய விசித்திரமானவனும் (குறத்தி திருவேளைக்காரனே)

நறு மணம் வீசும், தேன் நிரம்பி இருக்கும், ஊமத்தம் பூ, சந்திரன், குற்றங்களை தகிப்பதால் தாதகி எனப் பெயருடைய அகத்தி, கொன்றை (இவைகளை), தரித்துள்ள சடையை உடைய சிவபெருமான், வணங்குகின்ற கல்வி சிரேஷ்டனும் (குறத்தி திருவேளைக்காரனே), சமுத்திரம் தூள் படவும், தனக்குக் காவலாக இருந்த ஏழு மலைகளுடன் சூரன் உடல், கிரவுஞ்ச மலை இவைகளைப்பொடிந்து போகும் படி ஊடுருவி, சமுத்திரத்தின் உள்ளே வேலாயுதத்தைச் செலுத்திய ஒப்பற்ற தொழில் செய்பவனும் (குறத்தி திருவேளைக்காரனே). நக்ஷத்திர ரூபத்தில் விளங்கும் கிருத்திகை மாதர்களின் வளர்ப்புப் புதல்வனும், தன்னைத் தியானிப்பவர்கள், மோட்சத்தை அடையும்படி செய்து அருள் புரியும் கருணா மூர்த்தியும் (குறத்தி திருவேளைக்காரனே), இமராஜனின் மனைவி, மேனை, எனும் மாதின் பேரனாக வந்தவனும், அனைவராலும் போற்றப்படும் வலிமை மிக்க வீரனும், இராக்கத குலத்தினரை சூராவளிக் காற்றுப் போல் அழித்தவனும். (குறத்தி திருவேளைக்காரனே), அந்தணர்களின் பெரும் செல்வமும், அநாதியான பரம் பொருளும், விசாக நக்ஷத்திரத்திற்கு உரியவனும், பலவித உருவங்களை எடுத்தவனும் (குறத்தி திருவேளைக்காரனே), வேடுவரின் மலைக் காட்டில் தனது உருவத்தை மறைத்து வேறு உருவம் தரித்து, நாரத முனிவர் சொன்ன படி, தான் முன்பு கொடுத்த வரத்தின் படி வந்து வேடர்களிடம் வளர்ந்த வள்ளியம்மையை ஆட்கொள்ளுவதற்காக கவலை பொருந்திய மனத்துடன் ஞானமாகிய வில்லைத் தரித்துக் கொண்டு வருபவனும் (குறத்தி திருவேளைக்காரனே), மலைச் சாரத்தில் உள்ள தினைப் புனத்தில், பரண் மேலே, வரையப் பட்ட சித்திரம் போல அழகாக விளங்கும், மேன்மையான வள்ளிபிராட்டியுடன், பல வித திரு விளையாடல்கள் செய்து அவளுடன் பொழுதைப் போக்கியவன்தான் இதுகாறும் சொன்ன பெருமை மிக்கவன்.





# 5. பெருத்த வசன வகுப்பு

## அறிமுகம்

முருகப்பெருமான் தமக்கு உபதேசித்த மௌன உபதேசத்தின் சிறப்பைக் கூறுவது.

தனத்த தனதன தனத்த தனதன

வடமொழியில் மஹாவாக்யம் என்கிற சொல்லின் நேர் தமிழ் மொழி பெயர்ப்பு தான் பெருத்த வசனம் என்கிற சொல்லாகும். ஆதிசங்கரர் தாம் இயற்றிய ஸுப்ரமண்ய புஜங்கத்தில் முருகப்பெருமானை மஹாவாக்ய கூடம் என்கிறார். அதாவது மஹாவாக்யங்களின் ரகசியப் பொருள் சண்முகனே எனத் துதிக்கிறார். இப்படிப்பட்ட ரகசியப் பொருள் மானிட வடிவம் தாங்கி அருணகிரியாருக்குத் தன் சொரூபத்தையே உபதேசமாக அருளிச் செய்தது தான் பெருத்த வசனம்.

மஹா வாக்யங்கள் யாவன :

| | | |
|---|---|---|
| ருக் வேதத்திற்கு | - | பிரக்ஞானம் பிரமம் |
| யஜுர் வேதத்திற்கு | - | அஹம் பிரமாஸ்மி |
| ஸாம வேதத்திற்கு | - | தத்வமசி |
| அதர்வண வேதத்திற்கு | - | அயம் ஆத்மா பிரம்மா |

ஆதி சங்கரரும் தான் ஸ்தாபித்த நான்கு மடங்களுக்கும் இந்த ஒப்பற்ற வாக்கியத்தையே உபதேச மொழியாக விதித்திருக்கிறார். 'முருகன் ஓசை முநிக்கு'

'சும்மா இரு சொல்லற என்றலுமே' இந்த பெருத்த வசனம் மூலம் நான்மறைகளின் உட்பொருள் அனைத்தும் விளங்கி விட்டன. இதை - மறை சதுர் விதம் தெரிந்து - என்று பாடுகிறார். வேத ரகசியத்தைப் பற்பல திருப்புகழ்ப் பாக்களில் விவரித்திருக்கிறார். ஜீவன் சிவ சொரூபம் ஆவதே அகம் பிரம்மா அஸ்மி என்கிற மஹா வாக்கியத்தின் பிரத்யக்ஷ நிலை இதை 'நீ வேறனாதிருக்க நான் வேறனாதிருக்க' என்றும் பாடுகிறார். தத்வமஸி என்பதைத் தமிழ் நூல்களில் தொம்பதம் எனக் குறிப்பிடுவார்கள். சிவப்பெருமானுக்கு இந்தப் பொருளையே முருகன் உபதேசித்தார் என்பதை,

'செண்ப கத்துச் சம்பு வுக்கு

தொம்ப தத்துப் பண்பு உரைத்து' - என 'பொன்றலை' எனத்தொடங்கும் திருச்செங்கோட்டுத் திருப்புகழில் கூறுகிறார். தனக்கும் இந்த அரிய உபதேசம் கிட்டியதை இவ்வகுப்பில் கூறுகிறார். தாம் பெற்ற மஹா வாக்கிய உபதேசம் மூலமாகத் தனக்கு நேர்ந்த அனுபவங்களை விரித்துச் சொல்வதே பெருத்த வசன வகுப்பு ஆகும். இவ்வகுப்பை மஹா வாக்கிய உபநிடதம் என அழைக்கலாம்.

## மூலம்

1. அருக்கன் உலவிய சகத்ர யமுமிசை
யதிற்கொள் சுவையென அனைத்து நிறைவதும்

2. அவஸ்தை பலவையு மடக்கி யகிலமும்
அவிழ்ச்சி பெறஇனி திருக்கு மவுனமும்

3. அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும்
அரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்

4. அழுக்கு மலவிருள் முழுக்கின் உழல்வதை
யடக்கி யவநெறி கடக்க விடுவதும்

5. எருக்கும் இதழியு முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத்தி கழ்வதும்

6. இரட்டை வினைகொடு திரட்டு மலவுடல்
இணக்கம் அறவொடு கணக்கை யருள்வதும்

7. இருக்கு முதலிய சமஸ்த கலைகளும்
இதற்கி தெதிரென இணைக்க அரியதும்

8. இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை யருள்வதும்

9. நெருக்கு வனவுப நிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை யுடையதும்

10. நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
நிறைத்த நெறிமுறை கரக்கும் உருவமும்

11. நினைப்பு நினைவது நினைப்ப வனும்அறு
நிலத்தில் நிலைபெற நிறுத்த வுரியதும்

12. நிலைத்த அடியவர் மலைத்தல் அதுகெட
நிவிர்த்தி யுறஅநு பவிக்கு நிதியமும்

13. உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
உளத்தொ டுரைசெயல் ஒளித்து விடுவதும்

14. ஒளிக்கும் ஒளியென வெளிக்கும் வெளியென
உயிர்க்கும் உயிரென நிகழ்ச்சி தருவதும்

15. உரத்த தனிமயில் உகைத்து நிசிசரர்
ஒளிக்க அமர்பொரு சமர்த்தன் அணிதழை

**16. உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே.**

## (பாடல்) சொற்பிரிவு 5

1. அருக்கன் உலவிய சகத்ரயமும் இசை
அதில் கொள் சுவை என அனைத்தும் நிறைவதும்

2. அவஸ்தை பலவையும் அடக்கி அகிலமும்
அவிழ்ச்சி பெற இனிஇருக்கும் மவுனமும்

3. அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும்
அரற்றுவன பொருள் விகற்பம் மொழிவதும்

4. அழுக்கு மல இருள் முழுக்கின் உழல்வதை
அடக்கி அவநெறி கடக்க விடுவதும்

5. எருக்கும் இதழியும் முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத் திகழ்வதும்

6. இரட்டை வினைகொடு திரட்டு மலவுடல்
இணக்கம் அற ஒரு கணக்கை அருள்வதும்

7. இருக்கு முதலிய சமஸ்த கலைகளும்
இதற்கு இது எதிரென இணைக்க அரியதும்

8. இறக்க எனது எதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை அருள்வதும்

9. நெருக்குவன உபநிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை உடையதும்

10. நெருப்பு நிலம் வெளி மருத்து வனம் என
நிறைத்த நெறிமுறை கரக்கும் உருவமும்

11. நினைப்பு நினைவதும் நினைப்பவனும் அறு
நிலத்தில் நிலைபெற நிறுத்த உரியதும்

12. நிலைத்த அடியவர் மலைத்தல் அதுகெட
நிவிர்த்தி உற அநுபவிக்கும் நிதியமும்

13. உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
உளத்தொடு உரை செயல் ஒளித்து விடுவதும்

14. ஒளிக்கும் ஒளியென வெளிக்கும் வெளியென
உயிர்க்கும் உயிர் என நிகழ்ச்சி தருவதும்

15. உரத்த தனிமயில் உகைத்து நிசிசரர்
ஒளிக்க அமர்பொரு சமர்த்தன் அணிதழை

16. **உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே.**

**பதவுரை :**

அருக்கன் உலவிய - சூரியன் சஞ்சாரம் செய்கின்ற, சகத்ரயமும் - பூர், புவ, சுவா எனும் மூவுலகங்களிலும், இசை - சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள, அதிற்கொள் சுவையென - அவ்வுலகங்களில் விளங்குகின்ற எல்லா இன்ப நுகர்ச்சிகளும் இதுவே எனும்படி, அனைத்து நிறைவதும் - எல்லா பொருட்களிலும் ஒன்று கூடியது போல நிறைந்து உள்ளதும் அறுமுகன் அருளிய பெருத்த வசனமே

(எல்லா இன்ப அநுபவங்களும் ஒரே சொல்லின் மூலம் கிடைத்த அதிசயத்தைப்போக்கும் வரவு எனத்தொடங்கும் கந்தர் அலங்காரத்தில், ''மநோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே ஆக்கு மறுமுக வாசொல் லொணா திந்த ஆநந்தமே'' - என்பார். இந்த பேரின்ப அநுபவத்தைச் சுயமாக அனுபவிக்க வேண்டுமே தவிர பிறருக்கு வாக்கால் எடுத்துச் சொல்ல முடியாது. கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து கொண்டு தக்ஷிணாமூர்த்தியார் வாய் பேசாமல் மோன முத்திரை காட்டிப் போந்தார். ஆனால் அந்த நான்கு ஜனகாதி முனிவர்களுக்கும் இருந்த மனப் பக்குவம் நமக்கு இல்லையே என்கிற ஆதுலத்துடன் கருணையே வடிவமான அருணகிரியார் தொடர்ந்து விவரிக்கின்றார்.)

அவஸ்தைப் பலவையும் - வேதனைகள் துன்பங்கள் அனைத்தையும், அடக்கி பிராரப்த வினைகளைத் தவிர மீதியை அழித்து, அகிலமும் - மனம் வாக்கு காயம் இவைகளின் செய்கைகளை, அவிழ்ச்சி பெற - அற்றுப் போகும் படி செய்து, இனி திருக்கு மவுனமும் - நிஷ்களமான ஆனந்த நிலையான மவுன நிலையை அருளுவது. (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

அவஸ்தை என்பதற்குப் பிறிதொரு பொருளும் காணலாம். முருகப்பெருமான் அருளிய உபதேச மகிமையினால் விழிப்பு, கனவு ஆழ்தூக்கம் எனும் மூன்று நிலைகளைக் கடந்தும் ஆன்மா சுயம் பிரகாசமாய் விளங்கி துரிய நிலை கிட்டியது என்கிறார். இதுவே எல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லையாகும்.

உருவில்லாத பாழில் வெட்ட வெளியில் ஆடு நாத - நிர்த்தத்தைக் காண நம்மையும் அழைக்கிறார் கருணைக்கு அருணகிரி. ஒரு தாய் தன் பச்சிளம் குழந்தைக்கு மருந்து ஊட்ட அந்த மருந்தை முதலில் தானே குடித்துப் பார்த்து பின் தன்னுடைய பால் மூலம் சேய்க்குக் கொடுப்பது போல, அருணகிரிக்கு மௌன சுகத்தை உணர்விப்பதற்குத் தானே அந்த அநுபூதி நிலையில் இருந்து விளங்கினான் முருகன். "மனகுண சலன மலினமில் துரியஅு தீதசு காநு பூதி மவுனநி ரக்ஷர மந்தி ரம்பொ ருந்திமார்பிற் றிகழ்ந்தன" என்பார் புயவகுப்பில்.

அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும் - மூடத்தனமானதும், சண்டைக்குக் காரணமானதும், போலியானதுமான புறச்சமயவாதிகள், ஆறு சமயத்தினரும், அரற்று வனபொருள் விகற்பம் ஒழிவதும் - ஆரவாரம் செய்யும் தத்துவப் பொருளின் மாறுபாடுகளை மெய்ப் பொருளுக்கு மாறுபட்ட கருத்துக்களை எடுத்துக் கூறி விளக்கி அந்த சமயக் கொள்கைகளை நிராகரிப்பதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(புற சமய கூச்சல்களினால் மெய்ப்பொருளைக் காண முடியாது. இக்கருத்தைப் பல இடங்களில் கூறியுள்ளார் அருணகிரியார். 'கத்திக்கொடு துறை திறத்து அற்ற அசேதனம் தன் துறை என்று அறியார் திறம் நீங்கி செந்தூர் கருது' என்பார் கந்தர் அந்தாதியில் 'கொந்து காவென மொழிதர வரு சமய விரோத தந்ரவாதிகள் பெற அரியது' என்பார் கொந்துவார் எனத் தொடங்கும் திருத்தணித் திருப்புகழில்) அழுக்கு மலவிருள் முழுக்கின் உழல்வதை - ஆன்மா, ஆணவம், மாயை, கன்மம் எனும் மும் மல இருளில் முழ்கி அலைவதை, அடக்கி யவநெறி கடக்க விடுவதும் - ஒழித்து தீய நெறி தாண்ட உதவுவது (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(முருகப் பெருமான் சிவ ஒளி பரப்பி அடியார்களின் மல இருளை விரட்டி விடுகிறார். "இரு நோய் மலத்தை சிவ ஒளியால் மிரட்டி" - என்பார். இது பிறப்பை நீக்கி, சிவ கதிக்கு வழிகாட்டும்.

"கருவில் பிறவாதபடி உருவில் பிரமோத அடிகளை
ஏத்திடு இராக வகை அதின்மீறி
கருணைப்பிரகாச உனது அருள் உற்றிட ஆசுஇல் சிவ
கதி பெற்றிடு" - என்பது அநுபவ வாக்கு (சொருப பிரகாச எனத்தொடங்கும் திருமயிலைத் திருப்புகழ்).

எவருக்கும் இதழியு முடிக்கும் இறை - எருக்க மலரையும் கொன்றை மலரையும் சென்னியில் சூடும் பெருமான், குரு - எனது ஆசான் இவனே என சொல்லவும், எமக்கும் இறையவன் என - இதை பாடும் எனக்கும் குல தெய்வமாகத், திகழ்வதும் - விளங்குவதற்குக் காரணமாக உபதேச மொழிகளை இருவருக்கும் புகன்றது. (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

எருக்க மலரில் அருக்கனின் ஆற்றல் மறைந்து விளங்குகிறது. சூரியனின் அந்தர் ஆத்மாவாகத் திகழ்கிறது எருக்க மலர். ஆதலால் அம் மலரை சிவனார் தனது முடியில் சூடி இருக்கிறார். சூரிய உபாசனையைக் கூறும் காயத்ரி மந்திரத்தில் வரும் - பர்க - எனும் பதம் சிவனுடைய நாமங்களில் ஒன்று. இதழி கொன்றை பஞ்சாட்சரத்தை நினைவூட்டுவதால் இதுவும் சிவபெருமானுக்கு உகந்தது. முருகன் தந்தைக்கு உபதேசம் செய்தது மௌன

உபதேசமாகும். அதைப் பெற்றவுடன் ஈசர்க்கு நிற்விகல்ப சமாதி கூடினது என்பதை, மதுராந்தகத்துத் திருப்புகழில்

"சயிலாங்க னைக்கு ருகியி டப்பக்
கங்கொ டுத்தகம்பர் வெகுசாரி
சதிதாண்ட வத்தர் சடையி டத்துக்
கங்கைவைத்த நம்பர் உரைமாளச்
செயல்மாண்டு சித்த மவிழ நித்தத்
த்வம்பெ றப்ப கர்ந்த வுபதேசஞ்"

அந்த உபதேசம் தனக்கும் கிடைத்த பெருமையைப் பூரிப்புடன் சொல்லிக் கொள்கிறார் அருணகிரியார். கந்தப் பெருமான் உபதேசம் செய்தது மூவருக்கே எனப் பகருவார் ஞானியார் அடிகள்.

வேலா சரணம் சரணம் என்மேல் வெகுளாமல் இனி
மேலாயினும் கடைக் கண் பார் பருப்பத வேந்தன் மகள்
பாலா குறுமுனியாருக்கும் திருப்புகழ் பண்ணவருக்கும்
ஆலாலம் உண்டவருக்கும் உபதேசித்த ஆண்டவனே.

இரட்டை வினைகொடு திரட்டு - நல்வினை தீவினை இரண்டினாலும் அடித்தளமாக தைத்து தீட்டப்பட்டும், மலவுடல் - அக புற அழுக்களினால் மூடப்பட்டதும் ஆன என் உடம்பின், இணக்கம்அற - தொடர்பு அடியோடு நீங்குவதற்கு, ஒரு கணக்கை யருள்வதும் - ஒரு தந்திரத்தைச் சொல்லிக் கொடுத்ததும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

வினைப் போகமே தேகம் கண்டாய் வினைதான் ஒழிந்தால் தினைப் போதளவு நில்லாது கண்டாய் என்பார் பட்டினத்து அடிகள் நமது உடம்பினைப் பற்றி, பிராரப்த வினையின் விளைவே நமது சரீரம். ஆனால் நுகரும் போதே ஆகாமிய வினைகள் நம்மை தொற்றிக் கொள்ளும். இதுவே அடுத்த பிறவியின் பிராரப்தமாக உருவெடுக்கிறது. இந்த தொடர் சங்கிலியை உடைப்பதற்கு முருகன் ஒரு தந்திரத்தை சொல்லித் தந்திருக்கிறார். நீ செய்வதை எல்லாம் சிவார்ப்பணமாக செய்தால் வினைப்பயன் கிடையாது என்பதே இந்தக் கணக்கு. இப்படிச் செய்வதன் மூலம் மறுபிறவி ஒழிந்தது என்பதை திருவேளைக்காரன் வகுப்பில்

"ஏழையின் இரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக்காரனும்" என்கிறார்.

நியாயக்காரன் என்றால் நீதிபதி. அவர் ஒரு கைதியின் நல்நடத்தைக்காக விடுதலை செய்வது போல் இது. கந்தர் அந்தாதியிலும் மேலும் ஒரு கணக்கை விளக்குகிறார். என் இரு திங்களும் மாசுணமாக்கும் பதாம் புயன் - கருவடைந்து பத்துற்ற திங்கள் நாம் துன்பப்படுவதை நீக்க 10 எனும் எண் 0 ஆக வேண்டும். முருகன் தனது திருப்பாதமாகிய ரப்பரினால் 1 எனும் எழுத்தை அழித்து நான் கருவில் இருக்கும் நாட்களைச் சூன்யமாக்கி விட்டான் என்கிறார்.

இருக்கு முதலிய சமஸ்த கலைகளும் - வேதங்கள் முதலிய சகல சாஸ்திரங்களும், இதற்கி தெதிரென இணைக்க அரியதும் - சண்முகன் அருளிய உபதேசத்திற்கு நிகராகும் என்று ஒப்பிட்டுச் சொல்ல முடியாததும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(நூலறிவிற்கு அப்பாற் பட்டது அனுபவ ஞானம் என்பதை பல இடங்களில் சுட்டிக் காண்பிக்கிறார் அருணகிரியார்)

''சருவிய சாத்திரத் திரளான
சடுதிக ழாஸ்பதத் தமையாத
அருமறை யாற்பெறற் கரிதாய
அனிதய வார்த்தையைப் பெறுவேனோ''

(ஆஸ்பதம் - ஆதாரம் அனிதய = அ + இதயம் = இதயத்திற்கு நெருக்கமானது)

அருணகிரியாருக்கு ஞான உபதேசம் கிட்டியவுடன் சகல சாஸ்திர ஞானமும் வரப்பெற்றது என்பதை அவரே விளக்கிறார்.

''அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதின் வாழ்வித்த வேதியனும்''

இறக்க - எனது காலம் முடிந்து ஜீவன் உடல் கூட்டை விட்டுச் செல்லும் பொழுது, எனதெதிர் நடக்கும் யமபடர் - என்னை யமபுரத்திற்கு செல்லக் கூட்டி வந்திருக்கும் எம தூதர்களை, கடக்க விடுவதொர் இயற்கை யருள்வதும் - அடக்கித் திரும்பிச் செல்வதற்கான ஒரு ஒப்பற்ற மன வலிமையை அருள்வதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(நாம் இப்பிறவியில் அனுபவிக்க வேண்டிய பிராரப்தங்களை துய்த்தவுடன் செய்த வினைக்கு ஏற்ப மறு உலகத்தில் புகுத்த எமபடர் வருவர். ஆனால் முருகனின் உபதேசம் பெற்றவர்களுக்கு - ''அந்தகா வந்து பார்'' என்று சவால் விடும் மன திடத்தைக் கொடுப்பது அந்த உபதேசம். அதை - அஞ்சா நெஞ்சாக்கம் தர வல்ல பெருமாளே - என்பார். முருகப் பெருமானின் கடைக்கண் இயல்பையும் அவனது ஞான வேலையும் மயிலையும் நினைந்திருந்தாலே போதுமே, 'எம படர் தொடர்ந்து அழைக்கில் அவருடன் எதிர்ந்துள் உட்க இடி என முழங்கி வெற்றி பேசலாம் - வாருமே பெருத்த பாருளீர் என நம்மை அழைக்கிறார் அருணை முனிவர் அருணகிரியார்.

நெருக்குவன - நிறைவான பொருளை எடுத்துச் சொல்லும், உபநிடத்தின் இறுதிகள் - வேதாந்தமாகிய உபநிடத்தின் ஞான அத்தியாயத்தின் முடிந்த முடிவாய் எடுத்துச்சொல்லும், நிரப்பு கடையினில் இருப்பை யுடையதும் - பூரண பக்குவ நிலையில் தான் இருப்பிடமாக கொண்டு திகழ்வது (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(இந்த நிலையை பல திருப்புகழ் பாக்களில்

''வேத நன் முடியிலும் மருவிய குருநாதா'' (கொந்துவார் எனத்தொடங்கும் திருத்தணித் திருப்புகழ்)

ஆரணமுரைக்கு மோனகவி டத்தில் ஆருமுய நிற்கு முருகோனே (ஏடுமல எனத்தொடங்கும் திருப்புகழ்)

வேதாந்தப ரமசுக வீடாம்பொருள் (கமலரு எனத்தொடங்கும் காஞ்சித்திருப்புகழ்) என்பார்.

வேதங்களின் முடிவு வேதாந்தமாகிய உபநிஷத்துகள். இந்த சாஸ்திரங்களின் சாரமே நான்கு வேத வாக்கியங்கள். அருணகிரியாருக்கு முருகன் உபதேசம் செய்த பெருத்த வசனத்தின் மூலம் இந்த மகா வாக்கியங்களின் உட்பொருள் விளங்கி நிற்கும். இந்த அநுபவத்தை மற்றொரு திருப்புகழில் - 'மறை புகலும் அனுபவ வடிவினை அளவறு அகில வெளியையும் ஒளியையும் அறி சிவ தத்துவ பிரசித்திதனை முத்தி சிவக்கடலை' - (விகட பரிமள எனத்தொடங்கும் வயலூர்த் திருப்புகழில் விவரிக்கிறார்).

நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென - தீ, மண், ஆகாயம், காற்று, நீர் என்று கூறப்படும் பஞ்ச பூதங்களின், நிறைத்த நெறிமுறை கரக்கும் உருவமும் - சேர்க்கையால் வகுக்கப் பட்ட (பஞ்சீ கரணம்) ஒரு தத்துவ விதிமுறைக்கு அகப்படாமல் அவற்றிற்கு அப்பால்பட்ட ஒரு வடிவமான வஸ்த்துவைத் தரிசிக்கச் செய்வதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

(ஐம்பூதங்களும் முருகப் பெருமானின் சங்கல்பத்தால் மாயையிலிருந்து தோன்றுவன. ஆனால், அவைகளின் எல்லைக்கு அப்பாற்பட்டது அவனது அருள் நிலை. ''ஐந்து வித பூதமும் கரணம் நான்கும் அந்தி பகல் யாதும் அறியாத'' ஒரு வீட்டை அருளுவது பெருத்த வசனமே. தனக்கு அந்த பேறு கிட்டியதை பல பாக்களில் சொல்லி இருக்கிறார். பஞ்சபூதமும் அற்று ..... இருக்கும் அக் காட்சியதே - ஞான அநுபவத்தால் கிடைக்கும் பரம சுக வீட்டை ஐம்பூதங்களால் குலைக்க இயலாது.

பருதி காயில் வாடாது வடவை மூளில் வேகாது
பவனிம் வீசில் வீழாது சலியாது
பரவை சூழி லாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடு ஏது புகல்வாயே - (சுருதி யூடு எனத்தொடங்கும் திருப்புகழ்) இந்த வீடு அருணகிரியாருக்குக் கிடைத்தது.

நினைப்பு - அறிவு, நினைவது - அறியப்படுகின்ற பொருள், நினைப்பவனும் - அறிபவன் (எனும் திரிபுடிகளும்), அறி - அற்றுப்போன, நிலத்தில் - இடத்தில், நிலைபெற - ஸ்திரமாக, நிறுத்த வுரியதும் - நிற்கும்படிச் செய்ய வல்லதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(ஒரு பொருளைக் காணும் போது அதைப் பற்றிய அறிவு, அதாவது அப்பொருள் எத்தன்மையது, என்ன நிறம், மெல்லியதா, பருமன் உடையதா, உயரமா, குட்டையா என்றெல்லாம் குறிக்கும் அறிவுக்குச் சுட்டறிவு என்று பெயர். விடாமல் அந்தப் பொருளையே ஆழ் நிலையில் தியானிக்கும் போது அங்கு தியானிக்கப்படும் பொருளும் காண்கின்ற தானும் ஆகிய பேதம் நீங்கி ஒரே அத்விதீய ஞானம் தோன்றும் இக்கருத்தை அருணகிரியார், தவநெறி எனத்துவங்கும் திருப்புகழில் - ''அவன், இவன், உவன், அது, இது, உது எனும் ஆறு அற்று'' - என்பார். இக்கருத்தையே, பட்டினத்தாரும், பரமேட்டி, சுட்டிருந்த ஞானத்தைச் சொல் - என்கிறார். ஞாத்திரு, ஞானம், ஞேயம் கடந்த இந்த அறிவை அடைவது கடினம். இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே என்பார் கந்தர் அலங்காரத்தில். முருகனுடைய உபதேச மகிமையால் அருணகிரியாருக்கு இந்த நிலை சுலபமாகக் கிடைத்தது. இந்த அநுபவத்தை - சொல்லொணாது இந்த ஆனந்தமே - என்கிறார் கந்தர் அலங்காரத்தில்

நிலைத்த அடியவர் - முத்தி நெறி அடையாத மூர்க்கரை விட்டு பத்தி நெறியில் ஸ்திரமாக நிற்கும் உன் அடியவர்கள், மலைத்தல் அதுகெட - வாசனா மலத்தில் செக மாயையில் அகப்பட்டு பிரமித்து நிற்கும் அந்த பிரபஞ்ச மாயையை அகற்றி, நிவிர்த்தி யுற அநுபவிக்கு நிதியமும் - அந்த உலக பசு பாச தொந்தம் ஆகிய விலங்கினின்றும் விடுதலை ஆனந்தம் அடைய பேரானந்த அநுபவத்தை நல்குவதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

(நாம் வாழ்வது மாயா காரியமான உலகம். பெருங்காயம் தைத்த டப்பா, அதை எடுத்த பிறகும், மணப்பது போல், சில ஞானிகளுக்கும் ஒரு சமயம் பூர்வ வாசனையால் பிரபஞ்சப் பற்று ஏற்படலாம். அடியவர்களைக் கைவிடாத ஆறுமுகன், அப்போது மாயைத் தளைகளின்றும் விடுவிக்க வருவான். சீர்சிறக்கு மேனி எனத்துவங்கும் சோலைமலைத் திருப்புகழில்

"வாடை பற்று வேளை அடா அடா வென
நீமயக்க மேது சொலாய் சொலாய்யென
வாரம் வைத்த பாத மிதோ இதோ என அருள்வாயே" என்பார்.

உருக்கு திருவருள் - நெஞ்சை நெகிழ வைக்கும் உனது திருவருள் பிரகாசத்தில், திளைத்து மகிழ்தர - ஒன்றி மூழ்கி அனுபவித்து பேரின்ப நிலையில் நிற்க, உளத்தொ டுரைசெயல் ஒளித்து விடுவதும் - மனம், வாக்கு, காயம் ஆகிய இம் மூன்றின் வியாபாரங்களை அற்றுப் போகும் படி செய்வதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

அந்தக்கரணங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கும் வரை, ஐம்புலன்கள் அடங்காது. கரணங்கள் அடங்க சிவோகம் தியானம் பழக வேண்டும். அப்போது தோன்றும் சிவானந்த காட்சியில் ஜீவபோதம் அழிந்து விடும்.

பூதங்கள் அற்று பொறி அற்று சார் ஐம்புலன்கள் அற்று
பேதம் குணம் அற்று பேராசை தான் அற்று பின்முன் அற்று
காதல் கரணங்களும் அற்ற ஆனந்தக் காட்சியிலே
ஏதம் களைந்திடுவேன் கச்சி ஏகம்பனே (பட்டினத்தார்)

வான் கெட்டு மாருதம் மாய்ந்து அழல் நீர் மண் கெடினும்
தான் கெட்டுடலின்றிச் சலிப்ப தன்மையனுக்கு அறியாத
ஊன் கெட்டு உயிர் கெட்டு உணர்வும் கெட்டு என் உள்ளமும் போய்
நான் கெட்டவா பாடித்தெள்ளேணங் கொட்டாமோ (திருவாசகம்)

இந்த சுகாநுபூதி அருணகிரியாருக்கு முருகனுடைய உபதேச மகிமையால் கிட்டியது. (கரண மாய்த்தெனை மரண மாற்றிய கருணை வார்த்தை இருந்தவாறு என) - பெருத்த வசனமே இந்த கருணை வார்த்தையாகும்.

ஒளிக்கும் ஒளியென - உலகிற்கு ஒளி தரும் சூரியன், சந்திரன், அக்னி, தாரகைகள் முதலியவற்றுக்கெல்லாம் மூல ஒளியாய்த் திகழ்வதும், வெளிக்கும் வெளியென - வெட்ட வெளியைத் தாண்டிய பரவொளியாய் திகழ்வதும், உயிர்க்கும் உயிரென நிகழ்ச்சி தருவதும் - சராசரங்களில் சேதனம், அசேதனம் சகலத்திலும் உயிராய்த் திகழ்வதும் ஆகிய நிலைகளில் ஞானிகளால் உணரப்படுவதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே).

(நாம் காணும் ஜோதிகளுக்கு ஒளி வீசும் சக்தி நல்குவது பிரம்மப் பொருளே. நதத்ர சூரியோ பாதி 'நச சந்திர மஸ' - என்று வேதம் கோஷிக்கிறது. இந்த பிரம்ம ஒளியே உருவம் தாங்கிப் பிரமண்யனாய் அவதரித்துள்ளான்.

''அருவமும் உருவம் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்ட
ஒரு திரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய'' (கந்த புராணம்)

ஆறு ஆறையும் கடந்த நிலையைப் பெருவெளி என்பார். எல்லா தத்துவங்களும் ஒடுங்கிப் போன இதை, வெளியில் விளைந்த வெறும் பாழ் - என்பார் கந்தர் அலங்காரத்தில்- இங்கு சுத்த மாயை மட்டும் விளங்குகிறது. மயிலாடு சுத்த வெளியாகிய இங்கு, ஒரு பூதரும் அறியா தனி வீடு ஒன்றை - முருகன் தனக்கு அமைத்து கொடுத்ததை விவரிக்கிறார். உயிர்கள் அனைத்தும் மாயையின் சம்பந்தத்தினால் ஜடமாகி இருக்கின்றன. சூத்திரதாரி பொம்மையை ஆட்டுவது போல் இறைவன் உயிருக்குயிராய் இருந்து சராசரங்களை நடத்துகிறான். - 'ஆட்டுவித்தால் ஆடாதாரே' - என்கிறது அப்பர் தேவாரம்.

உரத்த தனிமயில் உகைத்து - வலிய நிகரில்லாத மயிலைச் செலுத்தி, நிசிசரர் ஒளிக்க - அசுரர்கள் பயந்து ஓடும் வண்ணம், அமர்பொரு சமர்த்தன் - போர் புரியும் திறமை கொண்டவனும்

(விந்து வடிவான மயிலைக் கண்டு இருள் வடிவான அசுரர்கள், ஆதவனுக்கு முன் மறைந்து போகும் இருட்டைப் போல், மறைந்து போகிறார்கள்)

அணிதழை உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன் - அழகிய தழைகளைப் போர்த்துக் கொண்டிருக்கும் வள்ளிப் பிராட்டியைத் திருமணம் செய்து கொண்ட சண்முகனும், ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே - ஒப்பற்ற தெய்வமுமாகியவன் எனக்கு உபதேசித்து அருளிய மகிமை மிக்க உபதேச மொழியே.

தற்காலத்தில் மணமகளை நிச்சயதார்த்தம் செய்ய பட்டுச் சேலைகள் வாங்கித் தருவது போல், வள்ளிப் பிராட்டியை நிச்சயம் செய்ய கையுறையாக முருகன் தழைகொய்து கொண்டு போனதை 'தொல்லை முதல்' எனத்தொடங்கும் கொல்லிமலை ராஜகம்பீர வளநாட்டு மலைத் திருப்புகழில் ''கொய்து தழையே கொண்டு செல்லும் மழவா'' என்பார். ஐம்புல வேடரில் அயர்ந்தனை - என்ற சிவஞான போத செய்யுள் போன்று வள்ளியாகிய ஜீவாத்மா தன் உண்மைச் சொரூபத்தை மறந்து, வேட்டுவத் தொழிலில் ஈடுப்பட்டிருந்தாள். முருகன் தானே அங்கு சென்று - குணமதாக்கிச் சிறந்த வடிவு காட்டியக் குமரன் இவனே மறை மொழியை நிறைவாக எனக்கு உபதேசித்து நிரதிசய ஆனந்த பேற்றை நல்கினான் என்று முடிக்கிறார்.

## பொழிப்புரை :

சூரியன் சஞ்சாரம் செய்கின்ற, பூர், புவ, சுவ எனும் மூவுலகங்களிலும், இசை - சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள, எல்லா இன்ப நுகர்ச்சிகளும் இதுவே எனும்படி, எல்லா பொருட்களிலும் ஒன்று கூடியது போல நிறைந்து உள்ளதும், வேதனைகள் துன்பங்கள் அனைத்தையும், பிராரப்த



வினைகளைத் தவிர மீதியை அழித்து, மனம் வாக்கு காயம் இவைகளின் செய்கைகளை, அற்றுப் போகும் படி செய்து, நிஷ்களமான ஆனந்த நிலையான மவுன நிலையை அருளுவதும், மூடத்தனமானதும், சண்டைக்குக் காரணமானதும், போலியானதுமான புறச்சமயவாதிகள், ஆறு சமயத்தினரும், ஆரவாரம் செய்யும் தத்துவப் பொருளின் மாறுபாடுகளை, மெய்ப் பொருளுக்கு மாறுபட்ட கருத்துக்களை எடுத்துக் கூறி விளக்கி அந்த சமயக் கொள்கைகளை நிராகரிப்பதும், ஆன்மா, ஆணவம், மாயை, கன்மம் எனும் மும் மல இருளில் மூழ்கி அலைவதை, ஒழித்து தீய நெறி தாண்ட உதவுவதும், எருக்க மலரையும் கொன்றை மலரையும் சென்னியில் சூடும் பெருமான் எனது ஆசான் இவனே எனச்சொல்லவும், இதை பாடும் எனக்கும் குல தெய்வமாகத், விளங்குவதற்குக் காரணமாக உபதேச மொழிகளை இருவருக்கும் புகன்றதும் நல்வினை, தீவினை இரண்டினாலும் அடித்தளமாகத் தைத்து தீட்டப்பட்டும், அக, புற அழுக்குகளினால் மூடப்பட்டதும் ஆன என் உடம்பின், தொடர்பு அடியோடு நீங்குவதற்கு, ஒரு தந்திரத்தைச் சொல்லிக் கொடுத்ததும், வேதங்கள் முதலிய சகல சாஸ்திரங்களும், சண்முகன் அருளிய உபதேசத்திற்கு நிகராகும் என்று ஒப்பிட்டுச் சொல்ல முடியாததும், எனது காலம் முடிந்து ஜீவன் உடல் கூட்டை விட்டுச் செல்லும் பொழுது, என்னை யமபுரத்திற்குக் கூட்டி செல்ல வந்திருக்கும் எம தூதர்களை, அடக்கித் திரும்பிச் செல்வதற்கான ஒரு ஒப்பற்ற மன வலிமையை அருள்வதும், நிறைவான பொருளை எடுத்துச் சொல்லும், வேதாந்தமாகிய உபநிடத்தின் ஞான அத்தியாயத்தின் முடிந்த முடிவாய் எடுத்துச்சொல்லும், பூரண பக்குவ நிலையில் தான் இருப்பிடமாக கொண்டு திகழ்வதும், தீ, மண், ஆகாயம், காற்று, நீர் என்று கூறப்படும் பஞ்ச பூதங்களின், சேர்க்கையால் வகுக்கப் பட்ட (பஞ்சீ கரணம்) ஒரு தத்துவ விதிமுறைக்கு அகப்படாமல் அவற்றிற்கு அப்பால்பட்ட ஒரு வடிவமான வஸ்த்துவைத் தரிசிக்கச் செய்வதும், அறிவு, அறியப்படுகின்ற பொருள், அறிபவன் (எனும் திரிபுடிகளும்), அற்றுப்போன, இடத்தில், ஸ்திரமாக, நிற்கும்படிச் செய்ய வல்லதும், முத்தி நெறி அடையாத மூர்க்கரை விட்டுப் பத்தி நெறியில் ஸ்திரமாக நிற்கும் உன் அடியவர்கள், வாசனா மலத்தில் செக மாயையில் அகப்பட்டு, பிரமித்து நிற்கும் அந்த பிரபஞ்ச மாயையை அகற்றி, அந்த உலக பசு பாச தொந்தம் ஆகிய விலங்கினின்றும் விடுதலை ஆனந்தம் அடைய பேரானந்த அநுபவத்தை நல்குவதும், நெஞ்சை நெகிழ வைக்கும் உனது திருவருள் பிரகாசத்தில், ஒன்றி மூழ்கி அனுபவித்து பேரின்ப நிலையில் நிற்க, மனம், வாக்கு, காயம் ஆகிய இம் மூன்றின் வியாபாரங்களை அற்றுப் போகும் படி செய்வதும், உலகிற்கு ஒளி தரும் சூரியன், சந்திரன், அக்னி, தாரகைகள் முதலியவற்றுக்கெல்லாம் மூல ஒளியாய்த் திகழ்வதும், வெட்ட வெளியைத் தாண்டிய பரவொளியாய்த் திகழ்வதும், சராசரங்களில் சேதனம், அசேதனம் சகலத்திலும் உயிராய்த் திகழ்வதும் ஆகிய நிலைகளில் ஞானிகளால் உணரப்படுவதும், வலிய நிகரில்லாத மயிலைச் செலுத்தி, அசுரர்கள் பயந்து ஓடும் வண்ணம், போர் புரியும் திறமை கொண்டவனும், அழகிய தழைகளைப் போர்த்துக் கொண்டிருக்கும் வள்ளிப் பிராட்டியைத் திருமணம் செய்து கொண்ட சண்முகனும், ஒப்பற்ற தெய்வமுமாகியவன் எனக்கு உபதேசித்து அருளிய மகிமை மிக்க உபதேச மொழியே பெருத்தவசனம் ஆகும்.

❧

# 6. பூத வேதாள வகுப்பு

## அறிமுகம்

முருக பெருமான் சூரனோடு போர் புரிந்த யுத்த கள வர்ணனையும் அங்கு நிரம்பி இருந்த பூத வேதாள கணங்களின் செயல்களையும் வர்ணிக்கும் வகுப்பு இது. இவைகள் பயங்கரமாக புருவங்களை உடையதாயும் அருவெருக்கத்தக்க செயல்களை கொண்டவைகளாக இருந்த போதிலும் போர்களத்தில் முருகப் பெருமானுடைய திருப்புகழை முழக்கும் குணத்தைக் கொண்டிருந்தன என்பதை, - கள முழுவதும் வாழிய திருப்புகழை முழக்குவன - அடி மூலம் தெரிய வருகின்றது.

பாமபன் அடிகள் அருளிய பஞ்சாமிர்த வண்ணத்திலும், - பேய் எனும் குணுக்குகள் நிணம் உண்டு அரன் மகன் புரம் ஜெயம் எனும் சொலே கள மிசை எழுமாறே என வருவன கவனிக்கப்பாலது. இவ் வகுப்பைப் பற்றி வண்ணச்சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் தாம் அருளிய புலவர் புராணத்தில் கூறுவதாவது, சோழ தேசத்தில் வேளாள மரபில் தோன்றிய சங்கரன் என்கிற சிறந்த அடியவர் எப்போதும் பூ வேதாள வகுப்பைப் பாராயணம் செய்வது வழக்கமாக கொண்டிருந்தார். அவர் செந்திலாண்டவனைத் தரிசிக்க திருச்செந்தூருக்குக் கால்நடையாக பிரயாணம் செய்து கொண்டிருந்த போது வழி தடுமாறி இடர்பட நேர்ந்த சமயம் முருகப்பெருமான் ஒரு அந்தணச் சிறுவனாக அவர் முன் தோன்றிச் செந்திலம்பதி வரை வழி காட்டி மறைந்தனர் எனும் குறிப்பு கவனத்தில் கொள்ளத்தக்கது.

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தத்ததன தானதன தத்தனா தத்ததன
தத்ததன தானதன தத்தனா தத்ததன
தந்தத் தந்தனத் தான தாந்தன
தந்தத் தந்தனத் தான தாந்தன
தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தத்தன
தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தானதன தந்ததன
தனதனன தந்தனந் தந்தான தத்ததன
தனதனன தந்தனந் தந்தான தத்ததன
தனதனன தானதன தத்ததன தத்ததன
தனதனன தானதன தத்ததன தத்ததன

தனதன தத்த தனத்தன தத்த தானன
தனதன தத்த தனத்தன தத்த தானன
தானனா தான தனாதன தந்தன
தானனா தான தனாதன தந்தன

**மூலம்**

(பார்வதி தேவி வர்ணனை)

1. அருண கணபண புயக சுடிகையின்
அகில புவனமும் உதவு மலைமகள்

2. அமலை யாரியை யந்தரி சுந்தரி
யிமய மாமயில் அம்பைத்ரி யம்பகி

3. அச்சுதச கோதரிய னைத்துவே தத்தலைவி
யற்புத ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி

4. அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி

5. அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ரத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி

(முருகவேள் வர்ணனை)

6. ஆயி திரு மைந்தன்முகம் ஆயிரம்வி ளங்கியதொர்
ஆறுதர வந்தருளும் ஆறுமுக புண்டரிகன்

7. அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீர னுக்குதவி

8. அரசறிய வாமனமு நிக்கொருத மிழ்த்ரயமும்
அபரிமித மாகவிவ ரித்தகட வுட்புலவன்

9. அநுபவ சித்த பவக்கட லிற்பு காதெனை
வினவியெ டுத்தருள் வைத்த கழற்க்கு பாகரன்

10. ஆசிலா சார தபோதன ரின்புறும்
வாசகா தீத மனோலய பஞ்சரன்

11. அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித

12. அமிர்த பூதரி அண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி

13. அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி
தக்கஅம ராவதிபு ரக்கும்ஆ னைக்கிறைவன்

14. ஐம்பத் தொன்றில்எட் டாறில் மூன்றினில்
ஐந்திற் றங்கும்அப் பாலை வான்பொருள்

15. அப்படி பத்தி பழுத்த மனத்தினர்
அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்

16. ஆறுநிலை யென்றுமுத லாகிய பரங்கிரியும்
ஆவின னெடுங்குடியும் ஆரண முடிந்திடமும்

17. அருணையும் இலஞ்சியுஞ் செந்தூர் திருப்பழநி
அடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்

18. அநவரத நீலமலர் முத்தெறிசு னைப்புனலில்
அருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்புமெனும்

19. அலகில் திருப்பதி யிற்பயில் கற்ப காடவி
அநுபவன் அத்தன்நி ருத்தன் அரத்த ஆடையன்

20. ஆறுமா மாதர் பயோதர பந்தியில்
ஆரவே பாலமு தாருநெ டுந்தகை

21. வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்

22. மதுக ராரவ மந்திர சிந்துர
மணம றாத கடம்பு புனைந்தவன்

23. மடடொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்ககடச மூகமமை தொட்டிறா லெட்டுவரை

24. மன்றற் பைம்புனத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்

25. மத்தமு டித்தருள் அத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்

26. மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரையு டன்சுழல வாசுகிவி டம்பொழிய

27. மகரசலி லங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்

28. மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவன்
உருகுமடி யாரிருவி னைத்தொகைய றுக்குமவன்

29. மறவர்பொ ருப்பில் ஒருத்திபொ ருட்ட நாளிள
வடிவமு ழுக்க நரைத்தவி ருத்த வேதியன்

30. மாதரா ரூபன் நிராகுல சிந்தையன்
ஆதிகூ தாள மதாணிய லங்க்ருதன்

31. வரத விதரண விரத அநுபவ
மவுன குருபரன் நிபுண குணதரன்

32. வனஜ ஜாதனை யன்றுமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்

33. மட்டிலிரு நாலுதிசை கட்டுநெ மிக்கிரியும்
உத்தரகு ணாதிகுட தக்ஷிணா திக்கிரியும்

34. மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காஙகெயன்

35. மத்தம லத்ரய மித்தைத விர்த்தருள்
சுத்தப வித்ரநி வர்த்திய ளிப்பவன்

36. வாரணமு கன்தனது தாதையை வலஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவ ருங்குமரன்

37. மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேத ஷ்ட்சமய
வழியுமன முங்கடந் தெங்கேனு நிற்குமவன்

38. மதுரமொழி யால்உலக னைத்தையும் உணர்த்துமவன்
வட அனல் நேர்கொடிய குக்குடம் உயர்த்தகுகன்

39. மரகத பக்ஷ குலத்துர கத்தி வாகரர்
வடிவையு ருக்கி வடித்த திருக்கை வேல்கொடு

40. வாரிகோ கோஎன வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில்

(சூர சம்ஹார போர் களத்தில் பூத வேதாள வர்ணணை).

41. உருவம் இருளெழ எயிறு நிலவெழ
உலகு வெருவர அசைய வரவன

42. உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி நோதவி தம்புரி பந்திய

43. ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
உச்சிவெடி யாதுநிண மெத்தவே தப்புவன

44. உங்குக் கிங்குவிட் டாழி நான்கினும்
ஒன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன

45. யுத்தக ளத்தினில் ரத்நம ணிக்குவை
ஒட்டமொ டொற்றைஇ ரட்டைபி டிப்பன

46. யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும் பழைய டாகினிக ளும்புகழ

47. உவணநிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையில்
உறவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன

48. உமிழ்குருதி யாறடைப டக்குறட டுக்கியதில்
உபவனமொர் ஏழையுமு றித்தருகொ ழுக்குவன

49. உடுபட லத்தை மறைத்த குறைக்கு வாலுடல்
உதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன

50. ஓடைமால் வாரண யூகம் அடங்கலும்
ஓரொர்பேய் நீள்கடை வாயி லடங்குவ

51. உடலி னிசிசரர் மவுலி ஒலியலும்
உதடு மலைவன பதடி முலையின

52. உததி யேழும் டங்கவு றிஞ்சியும்
உதர வாரழல் நின்றுகொ ளுந்துவ

53. உக்கிரஇ ராவணன்ன டுத்தமே ருக்கிரியும்
ஒற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன

54. ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன

55. ஒக்கமி டற்றில் இறக்கு குறைத்தலை
விக்கி வெளுக்க வெளுக்க விழிப்பன

56. யோகுபுரி யுங்குகையும் யோகபர ரும்பொருவ
ஓடைமத தந்திவயி றுடினிது றங்குவன

57. உசிதபிசி தங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன

58. உதிரநிண வாள்பெருக வொட்டுவன வெட்டுவன
உடலினடு வூடுருவ முட்டுவன தட்டுவன

59. ஒழுகுபி ணத்துநி ணத்தின் அளற்றி லேபழு
ஒடியவு ழக்கிவ ழுக்கி யுருட்டி வீழ்வன

60. ஊசலார் வார்குழை யோலை யிடும்படி
ஓதுசா மீகர நேமி பிடுங்குவ

61. கரணம் இடுவன குணலை யிடுவன
கழையை நடுவன பவுரி வருவன

62. ககன கூடமு டைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ

63. கைச்சதியி னாமுறைவி தித்தவா முற்கடித
சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக

64. கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி

65. கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிசை யொற்றிய றுப்பன

66. காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ

67. கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மொத்துவன

68. கடிபயிர வாதிகள்ப்ரி யப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின்

69. கடகம டுத்த இடக்கை வலக்கை வாளின
கருதிய லக்ஷிய லக்ஷண முற்று மோதுவ

70. காலமா றாத வராளசி கண்டிகை
பாலசீ காமர மானவி பஞ்சிகை

71. கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி யிசைவன

72. கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனத னாசிவி தம்படு பஞ்சமி

73. கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தடைவில்
உச்சமது சாதிகமெ டுத்துமேல் எட்டுவன

74. கஞ்சக் கஞ்சநற் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழை யேந்துவ

75. கற்றவு டுக்கையி டக்கைக ளப்பறை
மத்தளி கொட்டிய முற்றும் டிப்பன

76. காரெனமு ழங்குர லேறுதுடி சந்த்ரவளை
வீரமுர சுந்திமில்த டாரிகுட பஞ்சமுகி

77. கரடிபறை யங்கனந் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றொன்றோடு கிட்டுவன

78. கசரதப தாகினிய ரக்கர்துணி பட்டுவிழ
களமுழுதும் வாழிய திருப்புகழ்மு ழக்குவன

79. கடியகு ணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய

80. காதநூ றாயிர கோடி வளைந்தன
பூதவே தாளம் அநேகவி தங்களே.

(பாடல்) சொற்பிரிவு 6

(பார்வதி தேவி வர்ணனை)

1. அருணம் கணம் பணம் புயகம் சுடிகையின்
அகில புவனமும் உதவும் மலைமகள்

2. அமலை ஆரியை அந்தரி சுந்தரி
இமய மா மயில் அம்பை த்ரியம்பகி

3. அச்சுத சகோதரி அனைத்து வேதத்தலைவி
அற்புத புராதனி வரப்ரகாச ப்ரக்ருதி

4. அம்பொன் குண்டலப் பேதை சாம்பவி
விம்பம் கிஞ்சுகம் பூவை பூங்கொடி

5. அக்ஷரம் லக்ஷ ஜபத்தர் க்ரமத்திடு
சக்ர தலத்தி த்ரியக்ஷி சடக்ஷரி

(முருகவேள் வர்ணனை)

6. ஆயி திருமைந்தன் முகம் ஆயிரம் விளங்கியது ஓர்
ஆறு தர வந்தருளும் ஆறுமுக புண்டரிகன்

7. அருவரை திறந்து வன் சங்க் ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென்று அங்கீரனுக்கு உதவி

8. அரசறிய வாமன முநிக்கு ஒரு தமிழ்த்திரயமும்
அபரிமிதமாக விவரித்த கடவுட்புலவன்

9. அநுபவசித்த பவக்கடலில் புகாது என்னை
வினவி எடுத்து அருள்வைத்த கழல் க்ருபாகரன்

10. ஆசு இல் ஆசாரம் தபோதனர் இன்புறும்
வாசக அதீத மனோலய பஞ்சரன்

11. அகரு ம்ருகமதம் களபம் பரிமளம்
விகடம் முகபடம் கடின புளகித

12. அமிர்த பூதரி அண்டர் செழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி

13. அக்கம் ஒரு கோடி பெறும் வஜ்ரபாணி குமரி
தக்க அமராவதி புரக்கும் ஆனைக்கு இறைவன்

14. ஐம்பத்தொன்றில் எட்டு ஆறில் மூன்றினில்
ஐந்தில் தங்கும் அப்பாலை வான்பொருள்

15. அப்படி பத்தி பழுத்த மனத்தினர்
அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப் புயன்

16. ஆறு நிலை என்று முதலாகிய பரங்கிரியும்
ஆவின நெடுங்குடியும் ஆரணம் முடிந்திடமும்

17. அருணையும் இலஞ்சியும் செந்தூர் திருப்பழநி
அடியார் மன பங்கயம் செங்கோடி இடைக்கழியும்

18. அநவரதம் நீலமலர் முத்து எறி சுனைப் புனலில்
அருவி குதிபாய் தரு செருத்தணி என் வெற்பு எனும்

19. அலகில் திருப்பதியில் பயில் கற்பகாடவி
அநுபவன் அத்தன் நிருத்தன் அரத்த ஆடையன்

20. ஆறு மா மாதர் பயோதர பந்தியில்
ஆரவே பாலமுதம் ஆரும் நெடுந்தகை

21. வருணம் சரவணம் மடுவில் வரும் ஒரு
மதலை மறை கமழ் குதலை மொழியினன்

22. மதுகரா அரவம் மந்திரம் சிந்துரம்
மணம் அறாத கடம்பு புனைந்தவன்

23. மட்டு ஒழுகு சாரம் மதுரித்த தேனைப் பருக
மர்க்கட சமூகம் அமை தொட்டு இறால் எட்டு வரை

24. மன்றல் பைம்புனத்தாள் பதாம்புயம்
வந்திக்கும் தனிக் காம வாஞ்சையன்

25. மத்தம் முடித்தருளும் அத்தர் ப்ரியப்பட
நித்தம் மறைப்பொருளைத் தெளிவித்தவன்

26. மாதிரமும் மந்தரமும் நீரும் நிலனும்
கனக மால்வரையுடன் சுழல வாசுகி விடம் பொழிய

27. மகர சலினம் கடைந்து இந்திராதியர்க்கு அமுது
பகிர்தரு முகுந்தன் மன் பஞ்சாயுதக் கடவுள்

28. மருகன் மறவாதவர் நினைப்பவை முடிக்கும் அவன்
உருகும்அடியார் இருவினைத்தொகை அறுக்கும் அவன்

29. மறவர் பொருப்பில் ஒருத்தி பொருட்டு நாளில்
இளவடிவம் முழுக்க நரைத்த விருத்த வேதியன்

30. மாதரா ரூபன் நிராகுல சிந்தையன்
ஆதி கூதாள மதாணி அலங்க்ருதன்

31. வரத விதரண விரத அநுபவ
மவுன குருபரன் நிபுண குணதரன்

32. வனஜ ஜாதனை அன்று முனிநது அற
வலிய பார விலங்கிடு புங்கவன்

33. மட்டுஇல் இருநாலு திசை கட்டு நேமிக்கிரியும்
உத்தரம் குணாதிகுட தக்ஷிணாதிக் கிரியும்

34. மங்கத் துங்க விட்டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்

35. மத்தம் மலத்ரயம் மித்தை தவிர்த்தருள்
சுத்த பவித்ர நிவர்த்தி அளிப்பவன்

36. வாரண முகன் தனது தாதையை வலஞ்சுழல
வாகைமயில் கொண்டு உலகு சூழ் நொடி வருங்குமரன்

37. மயம் உறு ப்ரபஞ்சமும் சங்கேத ஷட்சமய
வழியும் மனமும் கடந்து எங்கேனும் நிற்கும் அவன்

38. மதுரமொழியால் உலகனைத்தையும் உணர்த்தும் அவன்
வட அனலம் நேர் கொடிய குக்குடம் உயர்த்த குகன்

39. மரகத பக்ஷ குலம் துரகம் திவாகரர்
வடிவை உருக்கி வடித்த திருக்கை வேல்கொடு

40. வாரி கோ கோ என வாய்விட வந்து எதிர்
சூரன் மாசேனையை மோது களந்தனில்

(சூர சம்ஹார போர் களத்தில் பூத வேதாள வர்ணணை).

41. உருவம் இருளெழ எயிறு நிலவெழ
உலகு வெருவர அசைய வருவன

42. உடைய நாயகி கண்டு மகிழ்ந்திட
நடை விநோத விதம்புரி பந்தய

43. ஒக்கலை விடாது அழுத அரற்று பாலர்க்கு மிக
உச்சிவெடியாது நிணம் மெத்த வேது அப்புவன

44. உங்குக்கு இங்கு விட்டு ஆழி நான்கினும்
ஒன்றுக்கொன்று அடி பாய்தல் காண்பன

45. யுத்த களத்தினில் ரத்ன மணிக்குவை
ஒட்டமொடு ஒற்றை இரட்டை பிடிப்பன

46. யோகினிகளும் பெரியசாகினிகளும் புதிய
மோகினிகளும் பழைய டாகினிகளும் புகழ

47. உவணம் நிரை கொண்டிடும் செங்காவணத்து இடையில்
உறவு கொள வந்து தம் பெண் காறை கட்டுவன

48. உமிழ் குருதி அறு அடை படக் குறடு அடுக்கி அதில்
உபவனம் ஓர் ஏழையும் முறித்து அருகு ஒழுக்குவன

49. உடு படலத்தை மறைத்த குறைக்குவால் உடல்
உதிர சமுத்திரம் முற்று நிலைப்படாதன

50. ஓடை மால் வாரணம் யூகம் அடங்கலும்
ஓரோர் பேய் நீள் கடை வாயில் அடங்குவ

51. உடல் இல் நிசிசர்ர் மவுலி ஒலியலும்
உதடும் அலைவன பதடி முலையின

52. உததி ஏழும் அடங்க உறிஞ்சியும்
உதரம் ஆர் அழல் நின்று கொளுந்துவ

53. உக்கிர இராவணன் எடுத்த மேருக்கிரியும்
ஒற்றி இரு தோள்கொடு பறித்திடாது அப்புவன

54. ஒன்றி திண்குரல் கூகை பாம் பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன

55. ஒக்க மிடற்றில் இறக்கு குறைத்தலை
விக்கி வெளுக்க வெளுக்க விழிப்பன

56. யோகம் புரியும் குகையும் யோகபரரும் பொருவ
ஓடை மதம் தந்தி வயிறூடு இனிது உறங்குவன

57. உசிதம் பிசிதம் கொணர்ந்து இங்கு ஏற விற்றும் என
மதமலை எலும்பு கொண்டு அங்காடி கட்டுவன

58. உதிர நிண வாள் பெருக ஒட்டுவன வெட்டுவன
உடலின் ஊடுருவும்படி முட்டுவன தட்டுவன

59. ஒழுகு பிணத்து நிணத்தின் அளற்றிலே பழு
ஒடிய உழக்கி வழுக்கி உருட்டி வீழ்வன

60. ஊசல் ஆர் வார் குழை ஓலை இடும்படி
ஓது சாமீகரம் நேமி பிடுங்குவன

61. கரணம் இடுவன குணலை இடுவன
கழையை நடுவன பவுரி வருவன

62. ககன கூடம் உடைந்து விழும்படி
கதறி வாய் அனல் கண்கனல் சிந்துவ

63. கைச்சதியின் ஆம்முறை விதித்த ஆம் உற்கடிதம்
கச்சபுடம் சாசபுடம் சட்பிதா புத்திரிகம்

64. கண்ட சம்பத் இப்பேதமாம் பல
கஞ்சப் பஞ்சகத் தாளம் ஆம்படி

65. கற்சரி உற்சவம் தர்ப்பண லசஷண
சச்சரி மட்டு இசை ஒற்றி அறுப்பன

66. காய் எரிய பங்கியொடு சேகரம் மிகுந்து அசைவ
காது படு சங்க வளமாலிகை புனைந்து இசைவ

67. கருணையது இகந்து வந்து ஒண் கோகு உலம் பெரிய
கருமுடி யொடும் படும் கங்காளம் மொத்துவன

68. கடி பயிரவாதிகள் ப்ரியப்படு கதிக்கு இசைய
நடைநவிலும் பாவனை உதிக்கும் நடவித்தையின

69. கடகம் அடுத்த இடக்கை வலக்கை வாளின
கருதிய லட்சிய லட்சணம் முற்றும் ஓதுவ

70. காலம் மாறாத வராள சிகண்டிகை
பால சீகாமரம் மான விபஞ்சிகை

71. கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி இசைவன

72. கனகவராடி அரும் பட மஞ்சரி
தன தனாசி விதம்படு பஞ்சமி

73. கைச்சுலவு கோல்முறை விதித்த ராகத்தின் அடைவில்
உச்சமது சாதிகம் எடுத்து மேலே எட்டுவன

74. கஞ்சம் கஞ்சம் நல் தேசி ராஞ்சி
குறிஞ்சிப்பண் குறித்து யாழை ஏந்துவ

75. கற்ற உடுக்கை இடக்கை களப்பறை
மத்தளி கொட்டுஇயம் முற்றும் அடிப்பன

76. கார் என முழங்கு குரல் ஏறு துடி சந்த்ரவளை
வீரமுரசு திமில் தடாரி குட பஞ்சமுகி

77. கரடிபறை அங்கு ஆனந்தம் கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தம் நின்று ஒன்றோடு கிட்டுவன

78. கஜம் ரதம் பதாகினி அரக்கர் துணி பட்டுவிழ
களம் முழுதும் வாழிய திருப்புகழ் முழக்குவன

79. கடிய குணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய

80. **காதம் நூறாயிரம் கோடி வளைந்தன**
**பூத வேதாளம் அநேக விதங்களே.**

**பதவுரை :**

அருண - சிவந்த நிறத்தையும், கணபண - அநேக படங்களையும் கொண்டுள்ள, புயக சுடிகையின் - சர்ப்ப ராஜனான ஆதிசேடனின் முடியின் உச்சியில் தங்கி இருக்கும், அகில புவனமும் உதவு மலைமகள் - எல்லா உலகங்களையும் பெற்றெடுத்த பார்வதி (இதைப் போன்ற ஆதிசேடனின் வர்ணனையை வேல் விருத்தத்திலும் காணலாம். தழல் விழிக் கொடுவரிப் பருவுடற் பக்றலைத் தமனியச் சுடிகை - சிவபிரானின் இல்லறத் துணைவியான பார்வதி தேவி எல்லா உலகங்களையும் ஈன்று அருளுகிறாள். இக்கருத்தை "களிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி கடலுடை உலகினை ஈன்ற தாய் உமை". (பரிமள எனத்தொடங்கும் திருவானைக்காத் திருப்புகழ்) (உலகடையப் பெற்ற உந்தி அந்தணி)

அமலை - பரிசுத்தமானவள், ஆரியை - பெருமை மிக்கவள், அந்தரி - சூக்கும ஆகாய வடிவி, சுந்தரி - அழகி, இமய மாமயில் - ஹிமாசலத்தில் வளர்ந்த மயில் அன்ன வனப்பையும் மென்மையையும் பெற்றவள், அம்பை - அம்பிகை, த்ரியம்பகி - முக்கண்ணி (மாயைக்குஅப்பாற்பட்டவள் அம்பிகை. ஆதலால் அவள் தூய்மையின் சொரூபம். அவள்

தூய வடிவி (அமலை), 36 தத்துவங்களுக்கும் மேலான நிலையே பராகாசம், இங்கு ஜோதி வடிவமாய் விளங்குபவள் அவளே சிவ குடும்பத்தினருக்கே மூன்று கண்கள் உண்டு - முக்கண்ணி).

அச்சுத சகோதரி - திருமாலின் தங்கை, அனைத்துவே தத்தலைவி - எல்லா வேதங்களுக்கும் தலைவியானவள், அற்புத ராதனி - ஆச்சரியமான முறையில் பழமைக்கும் பழமையானவள் வரப்ரகாச ப்ரக்ருதி - சுயம் ஜோதி வீசும் மோட்ச வீட்டை வரமாகக் கொடுக்கும் இயற்கை உதார குணம் மிக்கவள். (அம்பிகையின் கருணைத் திறம் அழகாக விவரிக்கப் பட்டுள்ளது)

அம்பொற் குண்டலப் பேதை - அழகிய பொன் குண்டலங்கள் அணிந்துள்ள பெண், சாம்பவி - மங்கள வடிவினள், விம்பக் கிஞ்சுகம் - ஒளி வீசும் கிளி, பூவை - நாகண வாய் பறவை போன்றவள், பூங்கொடி - அழகிய கொடி போன்றவள். ஸ்ரீ வித்தையில் புகழ் பெற்ற சாம்பவி முத்திரையைத் தேவேந்திர சங்க வகுப்பிலும், இங்கும் கையாளப்பட்டுள்ளது. மலையில் காணப்படும் அழகிய கொடி போன்றவள்.

அக்ஷர - பஞ்சாட்சரம் போன்ற உயரிய மூலமந்திரங்களை, லக்ஷ ஜபத்தர் - லட்சக் கணக்கில் உரு ஏற்றும் அடியார்கள், க்ரமத்திடு சக்ர தலத்தி - தந்திர நூல் முறைப்படி வகிக்கும் முக்கோண, அறுகோண, நவகோண முதலிய எந்திர தகடுகளிலும் மேருவிலும் விளங்குபவள், த்ரியக்ஷி - சூரிய சந்திர அக்னி ஆகியவைகளை நேத்திரங்களாக கொண்டவள், சடக்ஷரி - சாமுண்டாயை விச்சே என்கிற ஆறு எழுத்து மந்திரத்திற்கு உரியவள்.

ஆயி - தாயான தேவியின், திரு மைந்தன் - அருள் விளங்கும் புதல்வன், முகம் ஆயிரம் விளங்கியது - ஆயிரக் கணக்கான கிளைகளுடன் பெருகி வரும், ஓர் ஆறுதர - ஒப்பற்ற கங்கை தனது மடியில் சுமந்து வந்து தந்தவன், வந்தருளும் - குமார மூர்த்தியாய் அவதரித்து உலகிற்கு அருள் வழங்கின, ஆறுமுக புண்டரிகன் - தாமரை போன்ற ஆறு திருமுகங்களை உடையவன். (சிவத்தை சேர்வதற்கு ஜீவன்களுக்கு பக்குவம் வந்து விட்டதா என முதலில் ஆய்ந்து பார்த்துப் பின் தாய் போல் அருள் செய்வதால் அவள் ஆயி என அழைக்கப் படுகிறாள். 'பராசக்தியை, தாய் போல் பரிந்த தேன்' என்பார் ஒரு பாட்டில் கங்கை நதியின் கிளைகள் ஆயிரக்கணக்காகப் படர்ந்து அடியார்களுக்கு உடல் குளிர்ச்சி, உயிர் குளிர்ச்சி அளிக்கின்றன. அடியார் கண்ணும் கருத்தும் அகலாமல் நிறைகின்ற கங்கை நாயகி என்றும் ஆனந்த அருள் வெள்ளமே. அதே போல் ஆறுமுகனும் உலகெங்கும் காணப்படும் சமயங்கள் தோறும் அந்தந்தத் தெய்வமாய் நின்று அருள் புரிகிறான் என்பது கௌமார்களின் கோட்பாடு. 'உலகெங்கும் மேவிய தேவாலயம்'

அருவரை திறந்து - பெரிய பரங்குன்ற மலையை இடித்து வழி கண்டு, வன் சங்க்ராம கற்கி முகி அபயமிட - வலிய போரில் வல்ல கற்கிமுகி என்ற பூதம் சரண் சரண் என்று பெருங்குரல் எழுப்ப, அஞ்சலென் றங்கீர னுக்குதவி - அழகிய பாடல்களில் திறமை படைத்த நக்கீரனுக்கு அடைக்கலம் கொடுத்து குகையிலிருந்து வெளிவர உதவி செய்து,

அரசறிய - நாட்டை ஆள்பவர்களும், வசிப்பவர்களும் அறியும்படி பகிரங்கமாய், வாமன முனிக்கு - குறுகிய உருவம் உடைய அகத்திய முனிவருக்கு, ஒரு தமிழ்த்ரயமும் - ஒப்பற்ற

தமிழ் மொழியின் இயல், இசை, நாடகம் எனும் அங்கங்களின் இலக்கணத்தை, அபரிமிதமாக விவரித்த கடவுட்புலவன் - சிறந்த விஸ்தாரமான முறையில் விளக்கம் செய்த தெய்வீகப் புலவன் (நக்கீரனுக்கு தமிழ் இலக்கண ரகசியங்களை முருகனே கற்றுத் தந்ததாக ஒரு பாட்டில் கூறுகிறார். - 'வள வாய்மை சொற்ப்ரபந்தமுள கீரனுக்கு உகந்து மலர்வாய் இலக்கணங்கள் இயல் போதி' (கடிமா எனத்தொடங்கும் சுவாமிமலைத் திருப்புகழ்) வங்கிய சூடாமணி பாண்டியன் காலத்தில் சிவபெருமான் பாடலுக்கே குற்றம் கண்டு பிடித்ததினால் சங்கப் பலகையால் பொற்றாமரைத் தடாகத்தில் தள்ளப் பட்ட நக்கீரனுக்கு அகத்தியர் தமிழ் இலக்கண அரும் பொருளை உபதேசித்தார் என்ற வரலாறும் உண்டு.

சிவபெருமான் கட்டளைப்படி தென் திசைக்கு வந்த அகத்தியருக்கு முருகன் தமிழ் இலக்கணங்களை உபதேசித்ததை வேறு திருப்புகழ் பாடல்களிலும் அருணகிரியார் சொல்லியிருக்கிறார். "இயலும் இசைகளும் நடனமும் வகை வகை சத்யப்படிக்கு இனிது அகஸ்தியருக்கு உணர்த்தி அருள் தம்பிரானே".

அநுபவ சித்த - என்னுடைய பூர்வ வினைகளை துய்த்தல் பொருட்டு, சந்தேகமில்லாமல் உறுதியாய் ஏற்படும், பவக்கடலில் புகாது எனை - பிறவிப் பெருங்கடலில் நான் மீண்டும் விழுந்து விடாதபடி, வினவி எடுத்து அருள் வைத்த கழல் க்ரு பாகரன் ஆறுதல் மொழிகள் கூறி எனைத் தூக்கி அருள் பாலித்த புணையாகிய திருவடிகளை உடைய கருணாமூர்த்தி.

(சுவர்க்க லோக மீகாமன் ஆகிய முருகன் அருணகிரியரை ஏழு பிறவிக் கடலை கடக்க உதவிய கருணை ஓடக்காரன். பிறவி அலை ஆற்றினில் புகாமல் இருப்பதற்கு முருக பாத காட்சியே தெப்பம், கையில் பிடிக்கும் துடுப்பு, உறுதி குருவாக்கியப் பொருள்)

ஆசில் ஆசார தபோதனர் - குற்றங்களை நீக்கி தூய்மையான நடை, உடை பாவனைகளை உடைய தவசிகள், இன்புறும் வாசக அதீத மனோலய பஞ்சரன் - உணர்ந்து மகிழும் சொல்லுக்கு அடங்காத மனம் அடங்கின இருப்பிடத்தில் வசிப்பவன். (மனகுண சலன மலினமில் துரிய அதீத சுகானுபூதி மௌன நிரக்ஷர மந்திரம் பொருந்தி இருப்பவன் முருகப்பெருமான். மௌன பரமசுக பெரும் பதம் சித்திக்க தவ ஒழுக்கம் மிக மிக அவசியம்.

அகரு ம்ருக மத களப - அகில் கஸ்தூரி கலவைச் சாந்து இவைகளின், பரிமள - நறு மணம் வீசுவதும், விகட முகபட - அழகானதும் யானையின் முகத்தில் இடுகிற வேலைபாடுகள் நிறைந்த சீலை போல் தோன்றும் ரவிக்கையை அணிந்ததும், கடின புளகித - உறுதி வாய்ந்து பூரிப்பை அடைந்ததுமான

அமிர்த பூதரி - அமிர்தம் போன்று பால் நிறைந்த மலை போன்ற தனபாரம் உடையவள் (திரு முத்தி மாது தேவ சேனை ஆதலால் உயிர்களுக்கு அமிர்தம் போன்ற பாலை ஊட்டுகிறாள்) அண்டர் செழுங்கொடி - தேவர்கள் இடத்தில் வளர்ந்த கொடி போன்றவள், குமுத வாய் மயில் - குமுத மலர் போன்ற அழகிய திரு வாயும் மயில் போன்ற நளின அழகும் உடைய, குஞ்சரி - பெண் யானை (மான் தரு கான மயில் வள்ளி நாச்சியார். மயில் போன்ற பெண் யானை தேவ சேனை என்னே பொருத்தம்), மஞ்சரி - பூஞ் செடியின் கொத்து போன்றவள்.

அக்கம் ஒரு கோடி பெறு வஜ்ரபாணிக் குமரி - உடல் முழுதும் கண்கள் பெற்றுள்ளவனும் வஜ்ராயுதம் தரித்துள்ளவனும் ஆகிய இந்திரன் அகலிகையை களவினால் புணர்ந்தமையால், கௌதமரால், உடல் முழுவதும் பெண் குறிகள் பெற சாபம் அடைந்து வெட்கத்துடன் ஒளிந்து வாழ தேவ குருவால் ஏவப்பட்டு சீர்காழிக்கு அருகில் கண்ணார் கோயில் சிவனை வழிபட்டு அக்குறிகள் கண்களாக மாறின.

தக்க அமராவதி புரக்கும் ஆனைக்கிறைவன் - சிறந்த பொன்னுலகத்தோர் வணங்கும் தேவயானையின் கணவன் (தாங்கள் இனிமேல் அசுரர்களின் துன்பமில்லாமல் வாழ தேவயானையை முருகனுக்கு திருமணம் செய்வித்த தேவர்கள் நன்றி மறவாமல் அந்த நாயகியைத் தினமும் போற்றுகின்றனர். "சுரர் வாழப் பிறந்த சுந்தரி தேவயானை".

ஐம்பத் தொன்றில் - மாத்ருகா மந்திரங்கள் ஐம்பத்தொன்றிலும், எட் டு ஆறில் மூன்றினில் ஐந்தில் தங்கும் - அஷ்டாக்ஷரம், ஷடாக்ஷரம், மூன்று எழுத்து, பஞ்சாக்ஷரம் இவற்றில் தங்கும், அப்பாலை வான்பொருள் - எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பரம் பொருள் (எட்டு, ஓம், ஆம், ஔம் சிவாய நம பரவசம் கெட்டு எட்டகரம் நித்தம் பரவும் அன்பருக்கு) என்பது 96 தத்துவங்களுக்கும் மேற்பட்ட நிலை. - வழியும் மனமும் கடந்து எங்கேனும் நிற்கும் அவன் - என்பார்.

சித்தி அளிக்கும் குருநாதா. இந்த அஷ்டாக்ஷரத்தை முருகன் அருணகிரியாருக்கு உபதேசித்தான். எட்டாம் எழுத்தை ஏழையேற்கு பகர்ந்த முத்தா. ஷடாக்ஷரம் - சரவணபவ, குமாராய நம. முதலாவது வள்ளி தேவயானையால் சரவண தீர்த்தத்தின் கரையில் அநுஷ்டிக்கப் பட்டது. தேவர்கள் ஜெபிப்பது இரண்டாமவது. மூன்று சிவாய என்னும் முத்தி பஞ்சாக்ஷரம் வருவது போல் மூவர் தேவாரத்தின் நடுவில் ஐந்தாம் திருமறையில் நடுவில் 51-ம் பதிகத்தில் ஆறாவது திருப் பாட்டில் இந்த மூன்றெழுத்து.

விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது சிவாய என்று
எண்ணினார்க்கு இடமாம் எழில் வானகம்
பண்ணினார் அவர் பாலைத் துறையரே.

சிவாய எனும் நாமம் ஒரு காலும் நினையாத திமிராகரனை என்பார். நமசிவாய ஐந்து எழுத்து ஸ்தூல பஞ்சாக்ஷரம். சிவாய நம ஐந்து எழுத்து சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் அதுவே எல்லாம் கடந்த நிலையாகும்.

அப்படி - மேலான சிறந்த வழியில் சென்று, பத்தி பழுத்த மனத்தினர் - பக்தியினால் பக்குவமடைந்த அடியார்கள், அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன் - வழிபாட்டு முறைகளில் மலர் வழிபாட்டை சிலாகித்து மகிழும் வெட்சி மாலை அணிந்த அழகிய தோள்களை உடையவன்.

(அன்பர்கள் தாம் வாழ முருகனுக்கு மாலை சாத்தி ஆறிரு தடந் தோள் வாழ்க என்று ஏத்துகிறார்கள். மாலை கரம் கொள்ளும் அன்பர் வந்த அன்போடு வாழ அவர்கள் கொண்டு வந்த மாலைகளை ஏற்றுக் கொண்டு அருள் புரிகிறான். "தமிழ், பனிரொடு பரிமளர் மிக்க கடப்ப மாலையும் அணிவோனே".

ஆறுநிலை யென்று - ஆதார தலங்களான பரங்கிரி, செந்தூர், ஆவினங்குடி, ஏரகம், குன்றுதோறாடல், சோலைமலை எனும் ஆறு திருப்பதிகளுள், முதலாகிய பரங்கிரியும் - முதல் தலமான திருப்பரங் குன்றம், ஆவின னெடுங்குடியும் - திரு ஆவினன் குடியாகிய பெரிய பதியும், ஆரண முடிந்திடமும் - வேதங்களின் முடிவாகிய உபநிடத்துக்கள் (நெறி பல கொண்ட வேத நான் முடியிலும் மருவிய குருநாதா)

அருணையும் இலஞ்சியுஞ் செந்தூர் திருப்பழநி - திருவண்ணா மலை, இலஞ்சி, திருச்செந்தூர், பழநி மலை,

அடியர்மன பங்கயம் - அடியவர்களின் இதய தாமரை (தலங்களிலும், மலைகளிலும் வாசம் செய்யும் முருகன் மிகவும் மிருதுவான அடியார்களின் மனமாகிய (பக்தியால் நெகிழ்து போன) தாமரையில் வீற்றிருக்கிறார். இதை - "அடியவர் சிந்தை வாரிஜ நடுவிலும், கசிவார் இதயத்து அமிர்தே, தகர தந்த சிகரத்து ஒன்றி தடநற் கஞ்சத்து உறைவோனே". பலவாக விவரித்துள்ளார்). செங்கோடிடைக் கழியும் - நாகாசலம், திருவிடைக்கழி.

அநவரத நீலமலர் - எப்பொழுதும் நீலோற்பல மலர்கள் பூப்பதும், முத்தெறி சுனைப்புனலில் - முத்துக்கள் சிதறும் தடாகங்களில், அருவி குதிபாய் தரு செருத்தணியென் வெற்புமெனும் - நீர்வீழ்ச்சிகள் வேகமாய் விழுகின்ற திருத்தணி எனப்படும்

அலகில் திருப்பதியில் - எண்ணற்ற திருத்தலங்களில், கற்ப காடவி - தேவலோகத்தில் உள்ள கற்பக தோப்பில், பயில் - பொருந்தி விளங்கும், அநுபவன் - களிப்புடன் வீற்றிருப்பவன், அத்தன் - பெரியோன், நிருத்தன் - யுத்த களத்தில் குடை, துதி முதலிய கூத்துக்களையும் அடியார்களுக்காக அருள் நடனமும் புரிபவன் (கொண்ட நடனம் பதம் செந்திலிலும் எந்தன் முன் கொஞ்சி நடனம் கொளும் கந்த வேளே) "நாரணனும் வேதன் முன்பு தெரியாத ஞான நடனம்" அரத்த ஆடையன் - செந்நிற ஆடையில் விருப்பம் உள்ளவன்

ஆறுமா மாதர் - சிறந்த பெண்களாகிய ஆறு கிருத்திகை மாதர்களின், பயோதர பந்தியில் - தன பாரத் தொகுதியில், ஆரவே பால் அமுது ஆரு நெடுந்தகை - வயிறு முழுக்க பாலாகிய அமுதத்தை உண்ட பெரும் தன்மையைக் கொண்டவன். (முருகனுக்கு பால் கொடுப்பதே பெரும் பாக்கியம் எனக் கருதி பாலைக் கொடுத்ததால் கார்த்திகை விரத மகிமையும் இதை போல் அந்த விரதத்தை அநுஷ்டிப்பவர்களுக்கு குக சாயுச்யம் எய்த வைப்பதும் முருகனாகிய நெடும் தகையின் பேரருளே.)

வருண - நீர் நிறைந்த, சரவண மடுவில் வரும் - சரவண பொய்கையில் அவதரித்த (சரத்தே உதித்தாய்) ஒரு மதலை - ஒப்பற்ற குழந்தை, மறைகமழ் குதலை மொழியினன் - வேத உண்மைகளை வெளிப்படுத்தும் இளம் பிராய சொற்களை உடையவன். (முருகன் வேத மந்திர ரூபன். அவனுடைய பாதச் சிலம்புகள் வேத சந்தங்களை வெளிப்படுத்துகின்றன. அவனுடைய திருவாயினின்று வேத ரகசியங்கள் வெளி வருகின்றன. - "துகிர் இதழில் மொழி வேத மணம் வீச" என்பார். வேத மூர்த்தி முருகன் சப்த முனிவர்களும் வேதம் ஓதுவித்ததை, - இருக்கு மந்திரம் ஏழு வகை முனி பெற உரைத்த சம்ப்ரம் சரவணபவ - என்பார்).

மதுகரம் - வண்டுகளின், அரவம் - ரீங்காரங்கள் நிரம்பியதும், மந்திர - பாணி மந்திரம் ஓதி சமர்பிக்கப் பட்டதும், சிந்துர - சிவந்த நிறம் உடையதும், மணம் ஆராத கடம்பு புனைந்தவன் - நறுமணம் நீங்காத கடப்ப மாலைகளை அணிந்தவன், அன்புடன் ஆசார பூஜை என சொல்லிய படி ஆண்டவனுக்கு முறையாக வைதீக வழிபாடுகள் செய்வார்கள், ஆவாகனம். அர்க்கியம், அபிஷேகம், மாலைகள் சாத்துதல், அர்ச்சனை, துாப தீப நெய்வேத்தியம் அனைத்திற்கும் மந்திரங்கள் உண்டு. பல மாலைகள் முருகனுக்கு உகந்தவை. அவற்றுள் கடப்ப மாலை மிகவும் விசேஷமானது. அருணகிரியாருக்கு திருப்புகழ் பாட பணித்த போது "நீப பக்குவ மலர்த் தொடையையும்" வைத்து திருப்புகழ் பாடு என கட்டளை இடப்பட்டது கவனிக்கப்பாலது)

மட்டொழுகு சாரம் - வெளியிலட வெடித்ததால் சாரும், இரசமும், மதுரித்த தேனைப் பருக - இனிப்பு நிறைந்த தேனைப் பருகுவதற்காக, மர்ககட சமூகம் - மந்திக் கூட்டங்கள் (மிகவும் உயரத்தில் கட்டியிருக்கும் தேனைக் குடிப்பதற்காக), அமை தொட்டு - மூங்கில் மரத்தின் உச்சியில் ஏறி (அந்த மூங்கிலையே எட்டிப் பிடிக்கும் கழியாகக் கொண்டு), இறால் எட்டுவரை - தேன் கூட்டைப் பிடிக்கும் வள்ளி மலையில் (குரங்குகளும் மூங்கில் மரங்களும் நிறைந்தது வள்ளி மலை என்பதை திருப்புகழ் கந்தர் அந்தாதி அடிகளில் காணலாம். - குரங்குலாவும் குன்று, வரைத் தேன் பெருகு உந்திமிர்)

மன்றல் பைம்புனத் தாள் - மணம் வீசும் பசுமையான தினைப்புனத்தில் வாழும் வள்ளியின் (மன்றல் - கல்யாணம், வள்ளி மலைக்கு கல்யாண கிரி எனும் பெயரும் உண்டு), பதாம் புயம் வந்திக்கும் - தாமரைப் போன்ற திருவடிகளைப் பணியும், தனிக் காம வாஞ்சையன் - அளவற்ற ஆசை கொண்டவன். (ஜீவான்மாக்களை ஆட்கொள்ளுவதில் தீவிர விருப்பம் கொண்டவன் என்பதையே வள்ளி கல்யாண நிகழ்வுகள் குறிக்கும்)

மத்த முடித்தருள் - ஊமத்த மலரை அணிந்திருக்கும் (அணி மத்தர் சடைப் பரமர்), அத்தர் ப்ரியப்பட - தந்தை சிவ பெருமான் களிப்படையும் படி, நித்தம் மறைப்பொருளைத் தெளிவித்தவன் - என்றும் அழியாத நிரந்தரமான வேத உண்மைகளை சந்தேகம் நீங்கும்படி உபதேசித்தவன். (புரத்ரயம் எரித்த பெருமானும் பரவ அருளிய மௌன மந்த்ரம்)

மாதிரமு மந்தரமும் - பாற்கடலை கடைந்த போது திக்குகளும், மத்தாக நிறுவப்பட்ட மந்திர மலையும், நீருநிலனும் - பூமியும், பூமியில் உள்ள குளங்களும், கனக மால் வரையுடன் சுழல - பொன் கிரியாகிய மேருவுடன் சுழற்சி அடையவும், வாசுகி விடம் பொழிய - மத்தக் கயிறாக கட்டப் பட்ட வாசுகி எனும் பாம்பு விஷத்தைக் கக்க,

மகரசலி லங்கடைந்து - மகர மீன்கள் வாழும் கடலைக் கடைந்து, இந்த்ராதியர்க்கு அமுது பகிர்தரு - இந்திரன் முதலான தேவர்களுக்கு அமிர்தத்தைப் பங்கிட்டுக் கொடுத்த, முகுந்தன் - திருமால் (அமுதாக்கி அநேகர் பெரும் பசி தீர்த்தருள் மாயன்) மன்பஞ்சாயு தக்கடவுள் - ஸ்திரமான சங்கு, சக்ரம், வில், வாள், கதை ஆகிய ஐந்து ஆயுதங்களைத் தரித்திருக்கும் தெய்வமான திருமாலின், (தண்டம் தனு திகிரி) சங்கு கட்கம் கொண்ட தானவாந்தகன் மாயவனின்

மருகன் - மருமகன், மறவாதவர் நினைப்பவை முடிக்குமவன் - தன்னை எப்போதும் தியானிப்பவர்களின் இச்சைகளை நிறைவேற்றி அருள்பவன், உருகும் அடியார் இரு வினைத்தொகை அறுக்குமவன் - நெஞ்சம் நெகிழ்ந்து தன்னை வணங்கும் பக்தர்களின் நல்வினை, தீவினை எனும் சங்கிலியை நீக்குபவன் (வினைப் பகை செகுப்பவன்) (அடியார்கள் இரு வினை சூறாவளியில் சிக்கி (திமிர்தமிடும் கடல் அதென அனுதினம் உனை ஓதும் அமலை அடியவர் கொடிய வினை கொடு அபயமிடு குரல் அறியாயோ என்று கதற அறுமுகன் வெளிப்பட்டு இருவினைக் கூட்டத்தை ஒழித்து நிரதிசய ஆனந்தத்தை அருளுகிறான்).

மறவர்பொ ருப்பில் - வேடர்களின் வாசஸ்தலமான வள்ளி மலையின், ஒருத்தி பொருட்டு - ஒப்பற்ற பக்தியை உடைய வள்ளியை ஆட்கொள்ளுவதற்காக, அந் நாளின் - முன் நாளில், இள வடிவம் முழுக்க நரைத்த விருத்த வேதியன் - என்றும் இளையோனாய் இருந்தும் தன் மேனி முழுவதும் முதுமையும் நரையும் காணப்படும் அந்நதணனாய்

மாதரா ரூபன் - அழகு சொட்டும் திரு உருவத்தினாய், (அந்த கிழட்டு கோலத்திலும் ஒரு தெய்வீக அழகு மிளிர்ந்ததை பாம்பன் அடிகள் அழகாக சித்தரிக்கிறார், தேன் உறைந்திடு கானகம் தனில் மான் இளம் சுதையாள் இரும் சடைத்தேன் உடம்பு தள்ளாட வந்த சன்னியாச சுந்தர ரூப - என்பார்), நிராகுல சிந்தையன் - கவலையற்ற மனத்தினன், (ஒருவனுக்கு மகிழ்ச்சியோ துன்பமோ இருந்தால் தானே மனக்கவலை இருக்கும். முருகனுக்கு இரண்டும் கிடையாது. உல்லாச நிராகுல யோக இத சல்லாப விநோதன் இவன் தானே) ஆதி - முன்னை பழம் பொருளுக்கும் முன்னைப் பரம் பொருள், கூதாள மதாணி அலங்க்ருதன் - கூதாள மலரால் புனையப்பட்ட பதக்கம் போன்ற ஆபரணத்தை மார்பில் அணிந்தவன்.

வரத விதரண விரத அநுபவ - வேண்டிய போது அடியார் வேண்டிய பேகாமது வேண்ட வெறாது உதவுவதையே தன்னுடைய விரதமாகக் கொண்டவன், மவுன குருபரன் - மோன முத்திரையைக் காட்டி சிவனாருக்கும் குறுமுனிக்கும் அருணை முனிக்கும் ஞானோபதேசம் செய்தவன், (நிர் வசன பிரசங்க குருநாதா - இந்த மவுன உபதேசம் கிட்டியவுடன் சிவ பெருமானுக்கு நிஷ்டை கை கூடியது. - சடை இடத்து சங்கை வைத்த நம்பர் உரை மாள செயல் மாண்டு சித்தம் அவிழ - கிடைத்த அதே நிலை அருணகிரியாருக்கும் கிடைத்தது (உரை அவிழ உணர்வு அவிழ உளம் அவிழ உயிர் அவிழ உளபடியை உணரும் அவர் அநுபூதி ஆனதுவும்) நிபுண குணதரன் - திறமையும் நற்குணமும் படைத்தவன்.

வனஜ ஜாதனை அன்று - திருமாலின் உந்தித் தாமரையில் உதித்த பிரம்மனைக் கேள்வி கேட்ட போது, முனிந்து அற - பொருள் தெரியாததால் மிகவும் சினந்து (நாலு முகன் ஆதி அரி ஓம் என ஆதரம் உரையாத பிரம்மாவை விழ மோதி), வலிய பார விலங்கிடு புங்கவன் - திண்மையான கனத்த சங்கிலியால் அவனை சிறையிலிட்ட சிறப்பு மிக்கவன் (பிரம்மனைக் கோபித்து தண்டித்ததால் அவனுடைய மனதில் இருந்த அகம்பாவ இருள் நீங்கியது. ஆகையால் முருகனை புங்கவன் என்கிறார்).

மட்டு இல் இரு நாலுதிசை - எல்லையற்று பரந்து இருக்கும் எட்டு திசைகளும் (திக்க திக்கொடு: படி - கந்தர் அந்தாதி).

கட்டு நேமிக் கிரியும் - கட்டுப்படும் படி சுற்றி இருக்கும் சக்ரவாள கிரியும், உத்தர குணாதி குட தக்ஷிணா திக்கிரியும் - வடக்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு முதலிய எல்லா திசைகளிலும் உள்ள மலைகளும்.

மங்க - தன் கீர்த்தியும் ஒளியும் குறைப்பட்டு நலியவும், துங்க விட்டேறு வாங்கிய - பரிசுத்தமான வேலை ஏவிய (வேலம் புத்தூர் விட்டேறு அருளி - திருவாசகம்), செங்கைப் பங்கயச் சோதி காங்கேயன் -தாமரை அன்ன திருக்கரங்கள் பொருந்திய பிரகாச மூர்த்தி (நிர்த்த ஜெகச் ஜோதி பெருமாள்).

மத்த மலத்ரய மித்தை - அறிவை மயங்க வைக்கும் மும்மலங்கள் கூடிய இப் பொய் வாழ்க்கையை, தவிர்த்தருள் - நீக்கி அருள் செய்து (பிரபஞ்சம் எனும் சேற்றைக் கழிய வழி விட்டவா), சுத்த பவித்ர நிவர்த்தி அளிப்பவன் - மாசற்ற தூய விடுதலை அளித்து நித்ய சுகாநந்தத்தை அளிப்பவன் (இயல்பாகவே சுத்தப் படிகம் போன்ற மாசற்ற ஜீவன்களுக்கு வெளியில் இருந்து ஆனந்தம் வர வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் கோடிக்கணக்கான பிறவிகளில் சேர்த்து வைத்துள்ள மலத் தொகுதின் பளுவில் சிரமப் பட்டுக் கொண்டு வாழ்கிறது. நடப்பவனுக்கு பளு குறைந்தவுடன் மகிழ்ச்சி ஏற்படுவது போல் முருகன் ஆன்மாக்களின் மும்மலச் சுமையை நீக்கியவுடன் தன் இயல்பான பரிசுத்தத்தையும், சொரூபத்தையும் ஆன்மா உணருகிறது. (முருகனே முத்தி முதல்வனே பத்தர் அருகனே).

வாரண முகன் தனது தாதையை வலஞ் சுழல - ஆனைமுகன் பழத்திற்காக தனது தந்தையை பிரதட்சணம் செய்த போது, வாகைமயில் கொண்டு உலகு சூழ் நொடி வரும் குமரன் - வெற்றி மயில் ஏறி ஒரே நொடியில் சராசரங்களை சுற்றி வந்தவன்.

மயமுறு ப்ரபஞ்சமும் - எல்லாம் அடங்கி இருக்கும் இந்த சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தையும், சங்கேத ஷ்ட்சமய வழியும் - பல ரகசிய குறிப்புகள் கொண்ட ஆறு மதங்களின் மார்க்கத்தையும், மனமுங் கடந்து - உள்ளத்தால் எண்ணப்படும் எல்லைகளுக்கு அப்பாற்பட்ட (போதத்திற் காணவொணாதது), எங்கேனு நிற்குமவன் - விவரிக்க முடியாத நிலையில் இருப்பவன் (மோனக இடத்தில் ஆரும் உய்ய நிற்கும் முருகோனே).

மதுர மொழியால் - தனது இனிய உபதேசத்தால், உலகு அனைத்தையும் உணர்த்துமவன் - உலகில் உள்ள எல்லா தத்துவங்களுக்கும் விளக்கம் கொடுப்பவன், வட அனல் நேர்கொடிய குக்குடம் உயர்த்த குகன் - வடவாமுக அக்னியைப் போல் வெப்பமும் வீரமும் உடைய சேவலைத் தன் கொடியாக கொண்டு விளங்கும் குகப் பெருமான் (மீனிற் புணரியை விழுங்கும் அவுணக் கருங்கடல் விடிய கருங்குல் சாடும் தீ நிறக் குடுமி வெம் சேவல்).

மரகத பக்ஷ குலத் துரக - பசுமை ஒளி பக்கத்தில் வீசும் உயர்ந்த ஜாதிக் குதிரைகளைத் தன் தேர் பரிகளாக கொண்ட (உததியிடை கடவு மரகத வருண குல துரக உபலளித சதகோடி சூரியர்கள், திவாகரர் வடிவை உருக்கி வடித்த திருக்கை வேல் கொடு - 12 சூரியர்களின் தேஜசை உருக்கி வடிவமைத்த வேலாயுதத்தைக் கையில் கொண்டு (கனகாசலத்தைக் கடைந்து முனையிட்டு கடுக்கின்ற துங்க நெடுவேல்)

வாரிகோ கோஎன வாய்விட - கடல் ஓ என அலர (வேல் பட்டு அழிந்தது வேலையும்), வந்தெதிர் சூரமா சேனையை மோது களந்தனில் - போரில் எதிர்த்து வந்த சூரபத்மனின்

சேனைகளைத் தாக்கிய சமர பூமியில் (சூர சம்ஹார போர்க்களத்தில் பூத வேதாள வர்ணணை).

உருவம் இருளெழ - கரிய வடிவமுடைய தோற்றமும், எயிறு நிலவெழ - பற்கள் சந்திர ஒளியைப் போல் தெளிந்து இருக்கவும் (பிறைகள் போல் தந்தம் உடனும்), உலகு வெரு வர அசைய வருவன - உலகத்தோர் பயப்படும் படி ஆடிக் கொண்டு வருவன (அநேக வித பூத வேதாளங்களே).

உடைய நாயகி - தங்களின் தலைவியாகிய பார்வதி, சங்கரி, வேதாள நாயகி, கண்டு மகிழ்ந்திட - பார்த்து களிப்படையும் படி, நடை விநோத விதம் புரி பந்திய - பலதரப்பட்ட விசித்திர கதிகளில் ஆடி நடந்து வரும் கூட்டங்கள் (அநேக வித பூத வேதாளங்களே).

ஒக்கலை விடாது அழுது அரற்று - தாயின் இடுப்பில் அமர்ந்து ஓயாது அழுது கொண்டு பசியினால் சத்தம் இடும், பாலர்க்கு - குட்டி வேதாளங்களுக்கு, மிக உச்சி வெடியாது - போர்க்களத்தில் மிக்க உஷ்ணத்தினால் தலை மண்டை ஒடு வெடித்துப் போகாமல், நிண மெத்தவே அப்புவன - மாமிச சேற்றை லேபனம் போல மிகுதியாகத் தடவி ஒத்தடம் கொடுப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

உங்குக்கு இங்கு இட்டு - ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அடிக்கடி மாறிக் கொண்டு, ஆழி நான்கினும் - நான்கு திசைகளிலும் உள்ள கடல்களிலும், ஒன்றுக்கொன்று - ஒருத்தருடன்ஒருத்தர் போட்டி போட்டுக் கொண்டு, அடி பாய்தல் காண்பன - நீளத் தாவுதல் போட்டி செய்து கொண்டு விளையாடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

யுத்த களத்தினில் ரத்த மணிக்குவை - போர்க்களத்தில் சிதறிக் கிடக்கும் அசுரர்களின் மகுடங்களில் இருந்த ரத்னக் குவியலில் இருந்து, ஒட்டமொடு - பந்தயம் போட்டுக் கொண்டு, ஒற்றை இரட்டை பிடிப்பன - விசிறி எறிந்து பிடித்து ஒற்றையா இரட்டையா என விளையாடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

யோகினிகளும் - தேவியின் திருக்கோவில் பிரகாரத்தில் அமர்ந்து யோகம் செய்யும் தேவதைகள், பெரிய சாகினிகளும் - கொலைகள் புரியும் சாகினி தேவதைகள், புதிய மோகினிகளும் - புதிதாக வடிவெடுத்து ஆண்களை மயக்கும் மோகினி பிசாசுகளும், பழைய டாகினிகளும் புகழ - பிணங்களை திண்ணும் வயதான டாகினிப் பேய்களும் (முருகனின் வலிமையைப் போற்றிப் பகர)

உவணநிரை கொண்டிடும் - கழுகுகள் வரிசையாகக் கூடும், செங்கா வணத்திடையில் - அசுரர்களின் இரத்தத்தினால் செந்நிறம் அடைந்த பந்தலின் கீழே (கழுகுகள் ஏராளமாக மேலே குழுமி இருப்பது ஒரு பந்தல் போட்டிருப்பது போல் விளங்குகிறது) (முதியவுணர் அன்று பட்ட முதியகுடர் நன்று சுற்று முது கழுகு பந்தர் இட்ட) உறவு கொள வந்து தம் பெண்காறை கட்டுவன - தனது பெண் பூதங்களோடு திருமணம் செய்ய வந்து அந்தக் கல்யாணப் பெண்களுக்கு திருமாங்கல்யம் கட்டுவன (அநேக வித பூத வேதாளங்களே).

உமிழ் குருதி ஆறு - மடிந்த அசுரர்களின் உடலிலிருந்து சொரிந்து வெளிப்பட்டரத்த நதி,

அடை பட குறடு அடுக்கி அதில் - தடைப்படும் படி திண்ணை போல் அமைக்கக் கருதி, உபவனம் ஓர் ஏழையும் முறித்த அருகு ஒழுக்குவன - ஏழு உலகங்களில் உள்ள காட்டு

மரங்களை ஒடித்து அந்த நதியின் கரையை ஒழுங்காகக்கட்டுவன (அநேக வித பூத வேதாளங்களே).

உடு படலத்தை - நட்சத்திரக் கூட்டத்தை, மறைத்த குறை குவால உடல் - மறைக்கும் அளவிற்கு உயரமாக குவிக்கப்பட்ட தலையற்ற உடல்களின் திரளில் இருந்து, உதிர சமுத்திரம் முற்று நிலைப் படாதன - ஒழுகும் ரத்தக் கடலில் ஒரே இடத்தில் நிலை கொள்ளாது, அங்கும் இங்கும் சஞ்சாரம் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

ஓடைமால் வாரண யூகம் அடங்கலும் - பெரிய நெற்றிப் பட்டம் அணிந்த யானைப் படை முழுவதும், ஓர் ஓர் பேய் நீள் கடை வாயிலட அடங்குவ - ஒவ்வொரு பேயின் பெரிய கடை வாய்க்குள் அடங்கிவிடும் (அப்பேர்ப்பட்டவை) (அநேக வித பூத வேதாளங்களே).

உடலின் நிசிசரர் மவுலி ஒலியலும் - தலை வேறு உடல் வேறு என சிதைக்கப்பட்ட அசுரர்களின் கிரிடத்தில் அணியப்பட்டுள்ள மாலைகளையும், உதடும் அலைவன - அவர்களின் உதடுகளையும் பிடித்து ஆட்டுவன, பதடி முலையின - தொங்கும் படியான தனங்களை உடையன (அநேக வித பூத வேதாளங்களே).

உததி ஏழும் அடங்கவும் உறிஞ்சியும் - ஏழு கடல்களை வயிறு நிறைய குடித்தும் கூட, உதர வார் அழல் நின்று கொளுந்துவ - வயிற்றில் பசி தீ அடங்காது எரிவதை உடையவை, (அநேக வித பூத வேதாளங்களே).

உக்கிர இராவணன் எடுத்த மேருக்கிரியும் - பெரும் சினம் கொண்ட இராவணன் அசைத்து எடுத்த கைலாய மலையை, ஒற்றி இரு தோள் கொடு பறித்து இடாது அப்புவன - தனது தோள்கள் தழுவி இரு கைகளாலும் மேலும் பெயர்த்து எடுக்க முடியாமல் அந்த மலையை - (அநேக வித பூத வேதாளங்களே).

ஒன்றி - மன ஒற்றுமையுடன், திண் குரல் - வலிய குரலை உடைய, கூகை பாம்பொடு - கோட்டான் பாம்பு இவைகளையும், வென்றிச் செந்தலை - வெற்றி மிகுந்த செந்தலை விரியன் எனும் பாம்பையும், தாலி பூண்பன - கழுத்தில் தாலிச் சரடாக அணிந்து கொள்வன (அநேக வித பூத வேதாளங்களே).

ஒக்க - ஒரே அளவாக, மிடற்றில் இறக்கு குறைத்தலை - கழுத்தளவில் வெட்டப் பட்ட உடல் நீங்கிய சிரங்களை, விக்கி - மரண விக்கல் எடுக்கும் படி செய்து, வெளுக்க வெளுக்க விழிப்பன - முழிகள் வெள்ளையாக தோன்றும்படி விழிப்பதற்கு காரணமாக இருப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

யோகு புரியும் குகையும் - யோகப் பயிற்சிக்கு ஏற்ற மலைக் குகையில் (குகையில் நா நாதரும்), யோக பரரும்பொருவ - யோக சாதனைகளை செய்பவர்கள் போல, ஓடை மத தந்தி வயிறூடு இனிது உறங்குவன - நெற்றிப் பட்டம் அணிந்த மத யானைகளில் வயிற்றின் உள்ளே தூங்குவன (அநேக வித பூத வேதாளங்களே).

உசித பிசிதம் கொணர்ந்து - தகுதியான மாமிச வகைகளை சேர்த்துக் கொண்டு, இங்கு ஏற விற்றும் என - இவ்விடத்தில் நல்ல மாமிச வியாபாரம் செய்வோம் என, மத மலை

எலும்பு கொண்டு அங்காடி கட்டுவன - மதம் பிடித்த மலை போன்ற யானைகளின் எலும்புகளை செங்கல்களாகக் கொண்டு கடைகளை அமைப்பன, (அநேக வித பூத வேதாளங்களே).

உதிர நிண வாள் பெருக - வாளில் இருந்து மாமிசமும் ரத்தமும் கொட்ட, ஒட்டுவன வெட்டுவன - தாக்கி அழிப்பன துண்டாக வெட்டுவன, உடலின் நடு ஊடுருவ முட்டுவன தட்டுவன - உடலின் உள்ளே நடுவில் மோதி அழித்து விழச் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

ஒழுகு பிணத்து - பிணத்திலிருந்து ஒழுகி விழும், நிணத்தின் அளற்றிலே - கொழுப்புச் சேற்றில், பழு ஒடிய - தனது விலா எலும்புகள் ஒடியும் படிக்கு, உழக்கி வழுக்கி உருட்டி வீழ்வன - மிதித்து கால்கள் வழுக்கி அந்தச் சேற்றில் வீழ்ந்து கிடப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

ஊசலார் - உஞ்சல் போல் அங்கும் இங்கும் அசைந்து ஆடுகின்ற, வார் குழை ஓலை இடும்படி - நீண்ட காது ஓலையாக அணிவதற்கு, ஓது சாமீகர நேமி பிடுங்குவ - புகழ் மிக்க பொன் கிரியாகிய மேருமலையைப் பிடுங்கி எடுப்பன, (அநேக வித பூத வேதாளங்களே).

கரணம் இடுவன - சில குட்டிக் கரணம் போடுவன, குணலை இடுவன - கூச்சல் போடடுக் கொண்டு கூத்தாடுவன (சில பிசாசு குணாலி நிணமுன)

கழையை நடுவன பவுரி வருவன - மூங்கில் கம்புகளை நட்டு அதைச் சுற்றி ஒன்றோடு ஒன்று கை கோர்த்துக் கொண்டு பவுரி நடனம் ஆடுவன (திக்குப் பரி அட்டப் பயிரவர் தொக்குக் தொகு சித்ரப் பவுரிக்கு திரிகடகம் என ஓத) (அநேக வித பூத வேதாளங்களே).

ககன கூடமும் உடைந்து விழும் படி - ஆகாய முகடு அதிர்ச்சியினால் பிளந்து விழும் படிக்கு

கதறி வாய் அனல் கண் கனல் சிந்துவ - பெரும் கூச்சலுடன் தங்கள் வாய்களிலிருந்து நெருப்புப் பிழம்பும், விழிகளிலிருந்து தீப் பொறிகளும் சிதறி விழச் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

கைச்சதியின் ஆம் உறை - கர தாளத்தில் அமைகின்ற வழியிலே, விதித்த ஆம் - இசை நூல்களில் இலக்கணம் கூறப்பட்ட, உற்கடித சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக - சிவபெருமானின் ஈசான முகத்தில் தோன்றி ஆறு மாத்திரை உடைய உற்கடிதம், சத்யோஜாத முகத்தில் உதித்து எட்டு மாத்திரைகளைக் கொண்ட சாசபூடம் அகோர முகத்தில் தோன்றி 12 மாத்திரை உடைய சத்பிதாபுத்திரிகம்,

கண்டச் - கண்ட தாள வல்லுநர்களால் அறியப்பட்ட, சம்பத் - சம்பத் வேட்டம் எனப்படுவதும் தத்புருட முகத்தில் தோன்றி 12 மாத்திரை உடையதாய் உள்ளதும், இப்பேதமாம் பல - இந்தப் பேத வகைகளாகும் பலவகையான, கஞ்சப் பஞ்சகத் தாளமாம் படி - வெண்கல தாளக் கருவியால் ஒலிக்கப்படும் ஐந்து வகை தாளங்களும் பிறந்து ஒலிக்கும் படி

கற்சரி - கற்சரி எனப்படும் பாதரச ஒலியுடன் நிகழும், உற்சவ - திருவிழாவின், தர்ப்பண லக்ஷண - கண்ணாடி காட்சி போல் தோன்றுகின்ற வகையில், சச்சரி மட்டு - ஜஜ்ஜரி

வாத்தியத்தின் தாளத்திற்கு ஏற்ப, இசை ஒற்றி அறுப்பன - பாட்டிற்கு ஏற்றப்படி தாளக்கணக்கு போடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

காய் எரிய பங்கியொடு - நெருப்பு போல் காய்ந்து ஜ்வாலை விடுகின்ற மயிர் திரள்களுடன், சேகரம் மிகுந்து அசைவ - தலைகளும் மேற்சொன்ன தாளத்திற்கு ஏற்ப வேகமாக ஆடும் படி அசைப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

காதுபடு சங்கவள மாலிகை புனைந்திசைவ - காதுகளில் பூட்டி இருக்கும் சங்கு குழைகளையும் செழிப்பான மார்பில் மாலைகளையும் அணிந்து கொண்டு மனதிருப்தியுடன் விளங்குவன (அநேக வித பூத வேதாளங்களே).

கருணை அது இகந்து வந்து - இரக்கம் என்பதையே மறந்து போன, ஒண் கோகு உல - ஒளி வீசும் திரண்ட கல் போன்ற தோள்களும், பெரிய கரு முடியொடும் படுங் கங்காள ஒத்துவன - வலிமை பொருந்திய பெரிய தலைகளும் சாயும் படி எலும்புக் கூட்டை ஒன்றோடு ஒன்று மோதி அடிப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

கடிபயிர வாதிகள் - யுத்த பூமியில் காவல் காக்கும் பைரவர் அஷ்ட பைரவர்கள், ப்ரியப்படு கதிக்கு இசைய - விரும்பிக் கேட்கும் நடன வகைகளுக்கு, நடை நவிலு பாவனை - கூத்துக்களை விமர்சனம் செய்யும் பாவனை முத்திரைகள், உதிக்கு நடவித்தையின் - வெளிப்படுத்தும் நடன வகைகளை காண்பிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

கடகம் அடுத்த இடக்கை - தோள் வலை பூண்ட இடது கையையும், வலக்கை வாளின - வாள் ஏந்திய வலக்கையையும் உடையன, கருதிய லக்ஷிய லக்ஷண முற்றும் ஓதுவ - எல்லோராலும் விரும்பப்படும் நடன சாஸ்திரத்தின் இலக்கிய இலக்கணங்களை முழுதுமாக நடித்துக் காண்பிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

காலம் மாறாத வராளி - அந்தந்த நேரங்களில் பாட வேண்டிய குந்தல வராளி, பந்து வராளி, புன்னாக வராளி, வராளி, ஜால வராளி போன்ற ராகங்களையும், சிகண்டிகை - பாலை வாழ்பண் எனப்படும் சிகண்டி ராகத்தையும், பால சீகாமர - பாலைப் பண்ணைச் சேர்ந்த சீகாமார ராகத்தையும் (தும்பி காமரம் செப்பும்), மானவி பஞ்சிகை - பெருமை வாய்ந்த பஞ்சவி ராகத்தையும்

கவுட பயிரவி லளிதை கயிசிகை கவுளி மலகரி பவுளி இசைவன - இனித்த பைரவி, லலிதா, கயிசிகை (இதத்த கயிசிகம், இசைதனில் இனிய கயிசிகை), கௌளி, மலகரி (பூபாளத்தின் மனைவி), பவுளி முதலிய ராகங்களையும் பாடுவன. (அநேக வித பூத வேதாளங்களே).

கனவ ராடி அரும்பட மஞ்சரி தன தனாசி விதம் படு பஞ்சமி - பெரிய வராடி, அருமையான படமஞ்சரி, பெருமை மிக்க தன்யாசி, இரண்டு பேதமாக பாடப்படும் பஞ்சமி ராகத்தையும்

கைச்சுலவு கோன்முறை - கையில் ஏந்துகின்ற கோலால் சுழற்றியும், தூக்கியும் தாழ்த்தியும் காண்பிக்கும் வகையில், விதித்த ராகத்து அடைவில் - ராக லசஷணப்படி, உச்சமது சாதிகம் எடுத்து - உச்ச ஸ்தானத்தில் ராக மூர்ச்சனையைக் காட்டி (இசை தலைமை பூதம் கோலை மேலே தூக்கி காண்பிக்கும் போது மேல் - ஸ - வைத் தொட்டு), மேல் எட்டுவன - இசையின் மேல் சஞ்சாரத்தை காண்பிப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

கஞ்சக் கஞ்ச - வெண்கலத் தாளக் கருவியுடன், நற் றேசி ராஞ்சி குறிஞ்சிப் பண் குறித்து யாழை ஏந்துவ - நல்ல தேசி ராகத்தையும் மனதிற்கு ரஞ்சிதமான குறிஞ்சிப் பண்ணையும் வாசிக்க யாழைக் கையில் பிடித்திருப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

கற்ற - தான் பாடம் படித்த படி, உடுக்கை இடக்கை களப்பறை மத்தளி - வலக் கையில் வாசிக்கும் உடுக்கை, இடக்கையில் டக்கா (நடராஜ முழுக்குவது), போர் முரசுகள், மத்தளம், கொட்டு இயம் - கொட்டப்படும் மற்ற வாத்தியங்களையும், முற்றும் அடிப்பன - மிகுதியாக அடித்து வாசிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

கார் என முழங்கு குரல் ஏறு துடி - மேக கர்ஜனை போன்ற ஒலியை உடைய, சந்த்ரவளை - சந்திர பிறை போன்ற அரை வட்டமான தோல் கருவி, வீர முரசும் - வீர முரசு, தியாக முரசு, நியாய முரசு எனும் மூன்று வகைகளில் ஒன்றான வீரப்பறை, திமில் - திமிலை (பறை திமிலை திமிர்த மிகு தம்பட்டம்), தடாரி - பம்பை, குட பஞ்சமுகி - குடம் போன்ற ஐந்து முகங்களுடன் கூடிய வாத்தியம் (திருவாரூரில் இது விசேஷம்)

கரடி பறை - கரடி போல் சத்தமிடும் பறவைகள் (தபலை திமிலைகள் பூரிகை பம்பை கரடி தமருகம் வீணைகள் பொங்க), அங்கு அனந்தம் கோடி கொட்டுவன - அந்த யுத்த களத்தில் அளவற்ற முறையில் அடித்து முழுக்குவன, (அநேக வித பூத வேதாளங்களே).

முறைமுறை கவந்த நின்று ஒன்றோடு கிட்டுவன - தலையற்ற உடல்களின் அருகே நின்று கொண்டு ஒன்றுடன் ஒன்று தொட்டுக் கொண்டு இருப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

கச ரத பதாகினி - யானைப் படை, தேர்ப்படை, காலாட்படைகளை உடைய, அரக்கர் துணிபட்டு விழும் களமுழுதும் - அசுரர் சேனைகள் அறுபட்டு மடிந்து விழும் சமர பூமி முழுவதும் திரிந்து, வாழிய - கந்த வேளுக்கே ஜெயம் என்ற கோஷத்தையும் (குணுக்குகள் நிணம் உண்டு அரன் மகன் புறம் ஜெயம் எனும் சொலோ களமிசை எழுமாறே - பேய்கள்) பஞ்சாமிர்த வண்ணம்), திருப்புகழ் முழக்குவன - முருகனுடைய திருப்புகழையும் உரத்த குரலில் எழுப்புவன (அநேக வித பூத வேதாளங்களே).

கடிய குணத்த சினத்த - கொடூரமும் அளவற்ற கோபமும் உடையன, சகத்ர யோசனை நெடிய கழுத்த - ஆயிரக் கணக்கான தூரத்திற்கு நீண்டிருக்கும் கழுத்தை உடையன, சுழித்த விழித்த பார்வைய - சுழன்று விழிகின்ற கண்களை உடையன (அநேக வித பூத வேதாளங்களே).

காதம் நூறு ஆயிர கோடி வளைந்தன - போர்க்களத்தில் லட்சம் கோடிக் கணக்கில் நிறைந்து சுற்றி இருந்தன, பூதவே தாளம் அநேகவி தங்களே - அநேக வகையான பூதங்களும் வேதாளங்களுமே.

## பொழிப்புரை :

சிவந்த நிறத்தையும், அநேக படங்களையும் கொண்டுள்ள, சர்ப்ப ராஜனான ஆதிசேடனின் முடியின் உச்சியில் தங்கி இருக்கும், எல்லா உலகங்களையும் பெற்றெடுத்த பார்வதி

பரிசுத்தமானவள், பெருமை மிக்கவள், சூக்கும ஆகாய வடிவி, அழகி, ஹிமாசலத்தில் வளர்ந்த மயில், அன்ன வனப்பையும் மென்மையையும் பெற்றவள், அம்பிகை, முக்கண்ணி

திருமாலின் தங்கை, எல்லா வேதங்களுக்கும் தலைவியானவள், ஆச்சரியமான முறையில் பழமைக்கும் பழமையானவள், சுயம் ஜோதி வீசும் மோட்ச வீட்டை வரமாகக் கொடுக்கும் இயற்கை உதார குணம் மிக்கவள்.

அழகிய பொன் குண்டலங்கள் அணிந்துள்ள பெண், மங்கள வடிவினள், ஒளி வீசும் கிளி, நாகண வாய் பறவை போன்றவள், அழகிய கொடி போன்றவள்.

பஞ்சாட்சரம் போன்ற உயரிய மூலமந்திரங்களை, லட்சக் கணக்கில் உரு ஏற்றும் அடியார்கள், தந்திர நூல் முறைப்படி வகிக்கும் முக்கோண, அறுகோண, நவகோண முதலிய எந்திர தகடுகளிலும் மேருவிலும் விளங்குபவள், த்ரியக்ஷி - சூரிய சந்திர அக்னி ஆகியவைகளை நேத்திரங்களாகக் கொண்டவள், சாமுண்டாயை விச்சே என்கிற ஆறு எழுத்து மந்திரத்திற்கு உரியவள்.

தாயான தேவியின், அருள் விளங்கும் புதல்வன், ஆயிரக் கணக்கான கிளைகளுடன் பெருகி வரும், ஒப்பற்ற கங்கை தனது மடியில் சுமந்து வந்து தந்தவன், குமார மூர்த்தியாய் அவதரித்து உலகிற்கு அருள் வழங்கின, தாமரை போன்ற ஆறு திருமுகங்களை உடையவன்.

பெரிய பரங்குன்ற மலையை இடித்து வழி கண்டு, வலிய போரில் வல்ல கற்கிமுகி என்ற பூதம் சரண் சரண் என்று பெருங்குரல் எழுப்ப, அழகிய பாடல்களில் திறமை படைத்த நக்கீரனுக்கு அடைக்கலம் கொடுத்து குகையிலிருந்து வெளிவர உதவி செய்து,

நாட்டை ஆள்பவர்களும், நாட்டில் வசிப்பவர்களும் அறியும்படி பகிரங்கமாய், குறுகிய உருவம் உடைய அகத்திய முனிவருக்கு, ஒப்பற்ற தமிழ் மொழியின் இயல், இசை, நாடகம் எனும் அங்கங்களின் இலக்கணத்தை, சிறந்த விஸ்தாரமான முறையில் விளக்கம் செய்த தெய்வீகப் புலவன்

என்னுடைய பூர்வ வினைகளை துய்த்தல் பொருட்டு, சந்தேகமில்லாமல் உறுதியாய் ஏற்படும், பவக்கடலில் புகாது எனை, பிறவிப் பெருங்கடலில் நான் மீண்டும் விழுந்து விடாதபடி, வினவி எடுத்து அருள் வைத்த கழல் க்ரு பாகரன். ஆறுதல் மொழிகள் கூறி எனைத் தூக்கி அருள் பாலித்த புணையாகிய திருவடிகளை உடைய கருணாமூர்த்தி.

குற்றங்களை நீக்கி தூய்மையான நடை, உடை பாவனைகளை உடைய தவசிகள், உணர்ந்து மகிழும் சொல்லுக்கு அடங்காத மனம் அடங்கின இருப்பிடத்தில் வசிப்பவன்.

அகில் கஸ்தூரி கலவைச் சாந்து இவைகளின், நறு மணம் வீசுவதும், அழகானதும் யானையின் முகத்தில் இடுகிற வேலைப்பாடுகள் நிறைந்த சீலை போல் தோன்றும் ரவிக்கையை அணிந்ததும், உறுதி வாய்ந்து பூரிப்பை அடைந்ததுமான

அமிர்தம் போன்று பால் நிறைந்த மலை போன்ற தனபாரம் உடையவள், தேவர்கள் இடத்தில் வளர்ந்த கொடி போன்றவள், குமுத மலர் போன்ற அழகிய திரு வாயும் மயில் போன்ற நளின அழகும் உடைய, பெண் யானை, பூஞ் செடியின் கொத்து போன்றவள்.

உடல் முழுதும் கண்கள் பெற்றுள்ளவனும் வஜ்ராயுதம் தரித்துள்ளவனும் ஆகிய இந்திரன் அகலிகையை களவினால் புணர்ந்தமையால், கௌதமரால், உடல் முழுவதும் பெண் குறிகள் பெற சாபம் அடைந்து வெட்கத்துடன் ஒளிந்து வாழ தேவ குருவால் ஏவப்பட்டு சீர்காழிக்கு அருகில் கண்ணார் கோயில் சிவனை வழிபட்டு அக்குறிகள் கண்களாக மாறின), சிறந்த பொன்னுலகத்தோர் வணங்கும் தேவயானையின் கணவன் (தாங்கள் இனிமேல் அசுரர்களின் துன்பமில்லாமல் வாழ தேவயானையை முருகனுக்கு திருமணம் செய்வித்த தேவர்கள் நன்றி மறவாமல் அந்த நாயகியைத் தினமும் போற்றுகின்றனர். ''சுரர் வாழப் பிறந்த சுந்தரி தேவயானை''.

மாத்ருகா மந்திரங்கள் ஐம்பத்தொன்றிலும், அஷ்டாக்ஷரம், ஷடாக்ஷரம், மூன்று எழுதது, பஞ்சாக்ஷரம் இவற்றில் தங்கும் - எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பரம் பொருள், வழியும் மனமும் கடந்து எங்கேனும் நிற்கும் அவன் - என்பார்.

மேலான சிறந்த வழியில் சென்று, பக்தியினால் பக்குவமடைந்த அடியார்கள், வழிபாட்டு முறைகளில் மலர் வழிபாட்டை சிலாகித்து மகிழும் வெட்சி மாலை அணிந்த அழகிய தோள்களை உடையவன்.

ஆதார தலங்களான பரங்கிரி, செந்தூர், ஆவினங்குடி, ஏரகம், குன்றுதோறாடல், சோலைமலை எனும் ஆறு திருப்பதிகளுள், முதல் தலமான திருப்பரங் குன்றம், திரு ஆவினன் குடியாகிய பெரிய பதியும், வேதங்களின் முடிவாகிய உபநிடத்துக்கள்,

அடியவர்களின் இதய தாமரை (தலங்களிலும், மலைகளிலும் வாசம் செய்யும் முருகன் மிகவும் மிருதுவான அடியார்களின் மனமாகிய (பக்தியால் நெகிழ்து போன) தாமரையில் வீற்றிருக்கிறார். நாகாசலம், திருவிடைக்கழி.

எப்பொழுதும் நீலோற்பல மலர்கள் பூப்பதும், முத்துக்கள் சிதறும் தடாகங்களில், நீர்வீழ்ச்சிகள் வேகமாய் விழுகின்ற திருத்தணி எனப்படும்

எண்ணற்ற திருத்தலங்களில், தேவலோகத்தில் உள்ள கற்பகத்தோப்பில், பொருந்தி விளங்கும், களிப்புடன் வீற்றிருப்பவன், பெரியோன், யுத்த களத்தில் குடை, துதி முதலிய கூத்துக்களையும் அடியார்களுக்காக அருள் நடனமும் புரிபவன், செந்நிற ஆடையில் விருப்பம் உள்ளவன்

சிறந்த பெண்களாகிய ஆறு கிருத்திகை மாதர்களின், தன பாரத் தொகுதியில், வயிறு முழுக்க பாலாகிய அமுதத்தை உண்ட பெரும் தன்மையைக் கொண்டவன்.

நீர் நிறைந்த, சரவண பொய்கையில் அவதரித்த - ஒப்பற்ற குழந்தை - வேத உண்மைகளை வெளிப்படுத்தும் இளம் பிராய சொற்களை உடையவன்.

வண்டுகளின், ரீங்காரங்கள் நிரம்பியதும், பாணி மந்திரம் ஓதி சமர்பிக்கப் பட்டதும், சிவந்த நிறம் உடையதும், நறுமணம் நீங்காத கடப்ப மாலைகளை அணிந்தவன்

வெளியிலட வெடித்ததால் சாரும், இரசமும், இனிப்பு நிறைந்த தேனைப் பருகுவதற்காக, மந்திக் கூட்டங்கள், மூங்கில் மரத்தின் உச்சியில் ஏறி, தேன் கூட்டை பிடிக்கும் வள்ளி மலையில்

மணம் வீசும் பசுமையான தினைப்புனத்தில் வாழும் வள்ளியின் தாமரைப் போன்ற திருவடிகளைப் பணியும், அளவற்ற ஆசை கொண்டவன்.

ஊமத்த மலரை அணிந்திருக்கும் தந்தை சிவ பெருமான் களிப்டையும் படி, என்றும் அழியாத் நிரந்தரமான வேத உண்மைகளை சந்தேகம் நீங்கும்படி உபதேசித்தவன்.

பாற்கடலை கடைந்த போது திக்குகளும், மத்தாக நிறுவப்பட்ட மந்திர மலையும், பூமியும், பூமியில் உள்ள குளங்களும், பொன் கிரியாகிய மேருவுடன் சுழற்சி அடையவும், மத்தக் கயிறாக கட்டப் பட்ட வாசுகி எனும் பாம்பு விஷத்தைக் கக்க,

மகர மீன்கள் வாழும் கடலைக் கடைந்து, இந்திரன் முதலான தேவர்களுக்கு அமிர்தத்தைப் பங்கிட்டுக் கொடுத்த ஸ்திரமான சங்கு, சக்ரம், வில், வாள், கதை ஆகிய ஐந்து ஆயுதங்களைத் தரித்திருக்கும் தெய்வமான திருமாலின், சங்கு கட்கம் கொண்ட தானவாந்தகன் மாயவனின்

மருமகன், தன்னை எப்போதும் தியானிப்பவர்களின் இச்சைகளை நிறைவேற்றி அருள்பவன், நெஞ்சம் நெகிழ்ந்து தன்னை வணங்கும் பக்தர்களின் நல்வினை, தீவினை எனும் சங்கிலியை நீக்குபவன்

வேடர்களின் வாசஸ்தலமான வள்ளி மலையின், ஒப்பற்ற பக்தியை உடைய வள்ளியை ஆட்கொள்ளுவதற்காக, முன் நாளில், என்றும் இளையோனாய் இருந்தும் தன் மேனி முழுவதும் முதுமையும் நரையும் காணப்படும் அந்தணனாய்

அழகு சொட்டும் திரு உருவத்தினனாய், கவலையற்ற மனத்தினன், முன்னை பழம் பொருளுக்கும் முன்னைப் பரம் பொருள், கூதாள மலரால் புனையப்பட்ட பதக்கம் போன்ற ஆபரணத்தை மார்பில் அணிந்தவன்.

வேண்டிய போது அடியர் வேண்டிய பேகாமது வேண்ட வெறாது உதவுவதையே தன்னுடைய விரதமாகக் கொண்டவன், மோன முத்திரையைக் காட்டி சிவனாருக்கும் குறுமுனிக்கும் அருணை முனிக்கும் ஞானோபதேசம் செய்தவன், திறமையும் நற்குணமும் படைத்தவன்

திருமாலின் உந்தித் தாமரையில் உதித்த பிரம்மனைக் கேள்வி கேட்ட போது, பொருள் தெரியாததால் மிகவும் சினந்து திண்மையான கனத்த சங்கிலியால் அவனை சிறையிலிட்ட சிறப்பு மிக்கவன்

எல்லையற்று பரந்து இருக்கும் எட்டு திசைகளும்

கட்டுப்படும் படி சுற்றி இருக்கும் சக்ரவாள கிரியும், வடக்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு முதலிய எல்லா திசைகளிலும் உள்ள மலைகளும்

தன் கீர்த்தியும் ஒளியும் குறைப்பட்டு நலியவும், பரிசுத்தமான வேலை ஏவிய, தாமரை அன்ன திருக்கரங்கள் பொருந்திய பிரகாச மூர்த்தி

அறிவை மயங்க வைக்கும் மும்மலங்கள் கூடிய இப் பொய் வாழ்க்கையை, நீக்கி அருள் செய்து, மாசற்ற தூய விடுதலை அளித்து நித்ய சுகாநந்தத்தை அளிப்பவன்

ஆனைமுகன் பழத்திற்காக தனது தந்தையை பிரதட்சணம் செய்த போது, வெற்றி மயில் ஏறி ஒரே நொடியில் சராசரங்களைச் சுற்றி வந்தவன்

எல்லாம் அடங்கி இருக்கும் இந்த சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தையும், பல ரகசிய குறிப்புகள் கொண்ட ஆறு மதங்களின் மார்க்கத்தையும், உள்ளத்தால் எண்ணப்படும் எல்லைகளுக்கு அப்பாற்பட்ட எங்கேனு நிற்குமவன் - விவரிக்க முடியாத நிலையில் இருப்பவன்

தனது இனிய உபதேசத்தால், உலகில் உள்ள எல்லா தத்துவங்களுக்கும் விளக்கம் கொடுப்பவன், வடவாமுக அக்னியைப் போல் வெப்பமும் வீரமும் உடைய சேவலைத் தன் கொடியாக கொண்டு விளங்கும் குகப் பெருமான்

பசுமை ஒளி பக்கத்தில் வீசும் உயர்ந்த ஜாதிக் குதிரைகளைத் தன் தேர் பரிகளாக கொண்ட 12 சூரியர்களின் தேஜசை உருக்கி வடிவமைத்த வேலாயுதத்தைக் கையில் கொண்டு

கடல் ஓ என அலர, போரில் எதிர்த்து வந்த சூரபத்மனின் சேனைகளைத் தாக்கிய சமர பூமியில்

கரிய வடிவமுடைய தோற்றமும், பற்கள் சந்திர ஒளியைப் போல் தெளிந்து இருக்கவும் உலகத்தோர் பயப்படும் படி ஆடிக் கொண்டு வருவன

தங்களின் தலைவியாகிய பார்வதி, சங்கரி, வேதாள நாயகி, பார்த்து களிப்படையும் படி, பலதரப்பட்ட விசித்திர கதிகளில் ஆடி நடந்து வரும் கூட்டங்கள்

தாயின் இடுப்பில் அமர்ந்து ஓயாது அழுது கொண்டு பசியினால் சத்தம் இடும், குட்டி வேதாளங்களுக்கு, போர்க்களத்தில் மிக்க உஷ்ணத்தினால் தலை மண்டை ஓடு வெடித்து போகாமல், மாமிச சேற்றை லேபனம் போல மிகுதியாகத் தடவி ஒத்தடம் கொடுப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அடிக்கடி மாறிக் கொண்டு, நான்கு திசைகளிலும் உள்ள கடல்களிலும், ஒருத்தருடன்ஒருத்தர் போட்டி போட்டுக் கொண்டு, நீளத் தாவுதல் போட்டி செய்து கொண்டு விளையாடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

போர்க்களத்தில் சிதறிக் கிடக்கும் அசுரர்களின் மகுடங்களில் இருந்த ரத்னக் குவியலில் இருந்து, பந்தயம் போட்டுக் கொண்டு, விசிறி எறிந்து பிடித்து ஒற்றையா இரட்டையா என விளையாடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

தேவியின் திருக்கோவில் பிரகாரத்தில் அமர்ந்து யோகம் செய்யும் தேவதைகள், கொலைகள் புரியும் சாகினி தேவதைகள், புதிதாக வடிவெடுத்து ஆண்களை மயக்கும் மோகினி பிசாசுகளும், பிணங்களை திண்ணும் வயதான டாகினிப் பேய்களும்

கழுகுகள் வரிசையாகக் கூடும், அசுரர்களின் இரத்தத்தினால் செந்நிறம் அடைந்த பந்தலின் கீழே, தனது பெண் பூதங்களோடு திருமணம் செய்ய வந்து அந்தக் கல்யாணப் பெண்களுக்கு திருமாங்கல்யம் கட்டுவன (அநேக வித பூத வேதாளங்களே).

மடிந்த அசுரர்களின் உடலிலிருந்து சொரிந்து வெளிப்பட்டரத்த நதி, தடைப்படும் படி திண்ணை போல் அமைக்கக் கருதி, ஏழு உலகங்களில் உள்ள காட்டு மரங்களை ஒடித்து அந்த நதியின் கரையை ஒழுங்காகக்கட்டுவன (அநேக வித பூத வேதாளங்களே).

நட்சத்திரக் கூட்டத்தை, மறைக்கும் அளவிற்கு உயரமாக குவிக்கப்பட்ட தலையற்ற உடல்களின் திரளில் இருந்து, ஒழுகும் ரத்தக் கடலில் ஒரே இடத்தில் நிலை கொள்ளாது அங்கும் இங்கும் சஞ்சாரம் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

பெரிய நெற்றிப் பட்டம் அணிந்த யானைப் படை முழுவதும், ஒவ்வொரு பேயின் பெரிய கடை வாய்க்குள் அடங்கிவிடும் (அப்பேர்ப்பட்டவை) (அநேக வித பூத வேதாளங்களே).

தலை வேறு உடல் வேறு என சிதைக்கப்பட்ட அசுரர்களின் கிரிடத்தில் அணியப்பட்டுள்ள மாலைகளையும், அவர்களின் உதடுகளையும் பிடித்து ஆட்டுவன - தொங்கும் படியான தனங்களை உடையன (அநேக வித பூத வேதாளங்களே).

ஏழு கடல்களை வயிறு நிறைய குடித்தும் கூட, வயிற்றில் பசி தீ அடங்காது எரிவதை உடையவை, (அநேக வித பூத வேதாளங்களே).

பெரும் சினம் கொண்ட இராவணன் அசைத்து எடுத்த கைலாய மலையை, தனது தோள்கள் தழுவி இரு கைகளாலும் மேலும் பெயர்த்து எடுக்க முடியாமல் அந்த மலையை அணைத்துக் கொள்வன (அநேக வித பூத வேதாளங்களே).

மன ஒற்றுமையுடன், வலிய குரலை உடைய, கோட்டான் பாம்பு இவைகளையும், வெற்றி மிகுந்த செந்தலை விரியன் எனும் பாம்பையும், கழுத்தில் தாலிச் சரடாக அணிந்து கொள்வன (அநேக வித பூத வேதாளங்களே).

ஒரே அளவாக, கழுத்தளவில் வெட்டப் பட்ட உடல் நீங்கிய சிரங்களை, மரண விக்கல் எடுக்கும் படி செய்து, முழிகள் வெள்ளையாக தோன்றும்படி விழிப்பதற்கு காரணமாக இருப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

யோகப் பயிற்சிக்கு ஏற்ற மலைக் குகையில் யோக சாதனைகளை செய்பவர்கள் போல, நெற்றிப் பட்டம் அணிந்த மத யானைகளில் வயிற்றின் உள்ளே தூங்குவன (அநேக வித பூத வேதாளங்களே).

தகுதியான மாமிச வகைகளை சேர்த்துக் கொண்டு, இவ்விடத்தில் நல்ல மாமிச வியாபாரம் செய்வோம் என, மதம் பிடித்த மலை போன்ற யானைகளின் எலும்புகளை செங்கல்களாகக் கொண்டு கடைகளை அமைப்பன, (அநேக வித பூத வேதாளங்களே).

வாளில் இருந்து மாமிசமும் ரத்தமும் கொட்ட, தாக்கி அழிப்பன துண்டாக வெட்டுவன, உடலின் உள்ளே நடுவில் மோதி அழித்து விழச் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

பிணத்திலிருந்து ஒழுகி விழும், கொழுப்புச் சேற்றில் - தனது விலா எலும்புகள் ஒடியும் படிக்கு, - மிதித்து கால்கள் வழுக்கி அந்தச் சேற்றில் வீழ்ந்து கிடப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

ஊஞ்சல் போல் அங்கும் இங்கும் அசைந்து ஆடுகின்ற - நீண்ட காது ஓலையாக அணிவதற்கு, புகழ் மிக்க பொன் கிரியாகிய மேருமலையைப் பிடுங்கி எடுப்பன, (அநேக வித பூத வேதாளங்களே).

சில குட்டிக் கரணம் போடுவன, கூச்சல் போட்டுக் கொண்டு கூத்தாடுவன.

மூங்கில் கம்புகளை நட்டு அதைச் சுற்றி ஒன்றோடு ஒன்று கை கோர்த்துக் கொண்டு பவுரி நடனம் ஆடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

ஆகாய முகடு அதிர்ச்சியினால் பிளந்து விழும் படிக்கு

பெரும் கூச்சலுடன் தங்கள் வாய்களிலிருந்து நெருப்புப் பிழம்பும், விழிகளிலிருந்து தீப் பொறிகளும் சிதறி விழச் செய்வன (அநேக வித பூத வேதாளங்களே).

கர தாளத்தில் அமைகின்ற வழியிலே, இசை நூல்களில் இலக்கணம் கூறப்பட்ட, சிவபெருமானின் ஈசான முகத்தில் தோன்றி ஆறு மாத்திரை உடைய உற்கடிதம், சத்யோஜாத முகத்தில் உதித்து எட்டு மாத்திரைகளைக் கொண்ட சாசபூடம் அகோர முகத்தில் தோன்றி 12 மாத்திரை உடைய சத்பிதாபுத்திரிகம்,

கண்ட தாள வல்லுநர்களால் அறியப்பட்ட, சம்பத் வேட்டம் எனப்படுவதும் தத்புருட முகத்தில் தோன்றி 12 மாத்திரை உடையதாய் உள்ளதும், இந்தப் பேத வகைகளாகும் பலவகையான, வெண்கல தாளக் கருவியால் ஒலிக்கப்படும் ஐந்து வகை தாளங்களும் பிறந்து ஒலிக்கும் படி

கற்சரி எனப்படும் பாதரச ஒலியுடன் நிகழும், திருவிழாவின், கண்ணாடி காட்சி போல் தோன்றுகின்ற வகையில், ஜஜ்ஜரி வாத்தியத்தின் தாளத்திற்கு ஏற்ப, பாட்டிற்கு ஏற்றப்படி தாளக்கணக்கு போடுவன (அநேக வித பூத வேதாளங்களே).

நெருப்பு போல் காய்ந்து ஜ்வாலை விடுகின்ற மயிர் திரள்களுடன், தலைகளும் மேற்சொன்ன தாளத்திற்கு ஏற்ப வேகமாக ஆடும் படி அசைப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

காதுகளில் பூட்டி இருக்கும் சங்கு குழைகளையும் செழிப்பான மார்பில் மாலைகளையும் அணிந்து கொண்டு மனதிருப்தியுடன் விளங்குவன (அநேக வித பூத வேதாளங்களே).

இரக்கம் என்பதையே மறந்து போன, ஒளி வீசும் திரண்ட கல் போன்ற தோள்களும், வலிமை பொருந்திய பெரிய தலைகளும் சாயும் படி எலும்புக் கூட்டை ஒன்றோடு ஒன்று மோதி அடிப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

யுத்த பூமியில் காவல் காக்கும் பைரவர் அஷ்ட பைரவர்கள், விரும்பிக் கேட்கும் நடன வகைகளுக்கு, கூத்துக்களை விமர்சனம் செய்யும் பாவனை முத்திரைகள், வெளிப்படுத்தும் நடன வகைகளை காண்பிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

தோள் வலை பூண்ட இடது கையையும், வாள் ஏந்திய வலக்கையையும் உடையன, எல்லோராலும் விரும்பப்படும் நடன சாஸ்திரத்தின் இலக்கிய இலக்கணங்களை முழுதுமாக நடித்துக் காண்பிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

அந்தந்த நேரங்களில் பாட வேண்டிய குந்தல வராளி, பந்து வராளி, புன்னாக வராளி, வராளி, ஜால வராளி போன்ற ராகங்களையும், பாலை வாழ்பண் எனப்படும் சிகண்டி ராகத்தையும், பாலைப் பண்ணைச் சேர்ந்த சீகாமார ராகத்தையும், பெருமை வாய்ந்த பஞ்சவி ராகத்தையும்

இனித்த பைரவி, லலிதா, கயிசிகை (இதத்த கயிசிகம், இசைதனில் இனிய கயிசிகை), கௌளி, மலகரி (பூபாளத்தின் மனைவி), பவுளி முதலிய ராகங்களையும் பாடுவன. (அநேக வித பூத வேதாளங்களே).

பெரிய வராடி, அருமையான படமஞ்சரி, பெருமை மிக்க தன்யாசி, இரண்டு பேதமாக பாடப்படும் பஞ்சமி ராகத்தையும்

கையில் ஏந்துகின்ற கோலால் சுழற்றியும், தூக்கியும் தாழ்த்தியும் காண்பிக்கும் வகையில், ராக லக்ஷணப்படி, உச்ச ஸ்தானத்தில் ராக மூர்ச்சனையைக் காட்டி, இசையின் மேல் சஞ்சாரத்தை காண்பிப்பன (அநேக வித பூத வேதாளங்களே).

வெண்கலத் தாளக் கருவியுடன், நல்ல தேசி ராகத்தையும் மனதிற்கு ரஞ்சிதமான குறிஞ்சிப் பண்ணையும் வாசிக்க யாழைக் கையில் பிடித்திருப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

தான் பாடம் படித்த படி, வலக் கையில் வாசிக்கும் உடுக்கை, கொட்டப்படும் மற்ற வாத்தியங்களையும், முற்றும் அடிப்பன - மிகுதியாக அடித்து வாசிப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

மேக கர்ஜனை போன்ற ஒலியை உடைய, சந்திர பிறை போன்ற அரை வட்டமான தோல் கருவி, வீர முரசு, தியாக முரசு, நியாய முரசு எனும் மூன்று வகைகளில் ஒன்றான வீரப்பறை, திமிலை (பறை திமிலை திமிர்த மிகு தம்பட்டம்), பம்பை, குடம் போன்ற ஐந்து முகங்களுடன் கூடிய வாத்தியம் (திருவாரூரில் இது விசேஷம்)

கரடி போல் சத்தமிடும் பறவைகள் (தபலை திமிலைகள் பூரிகை பம்பை கரடி தமருகம் வீணைகள் பொங்க), அந்த யுத்த களத்தில் அளவற்ற முறையில் அடித்து முழுக்குவன, (அநேக வித பூத வேதாளங்களே).

தகையற்ற உடல்களின் அருகே நின்று கொண்டு ஒன்றுடன் ஒன்று தொட்டுக் கொண்டு இருப்பன. (அநேக வித பூத வேதாளங்களே).

யானைப் படை, தேர்ப்படை, காலாட்படைகளை உடைய, அசுரர் சேனைகள் அறுபட்டு மடிந்து விழும் சமர பூமி முழுவதும் திரிந்து, கந்த வேளுக்கே ஜெயம் என்ற கோஷத்தையும் முருகனுடைய திருப்புகழையும் உரத்த குரலில் எழுப்புவன (அநேக வித பூத வேதாளங்களே).

கொடூரமும் அளவற்ற கோபமும் உடையன, ஆயிரக் கணக்கான தூரத்திற்கு நீண்டிருக்கும் கழுத்தை உடையன, சுழன்று விழிகின்ற கண்களை உடையன (அநேக வித பூத வேதாளங்களே).

போர்க்களத்தில் லட்சம் கோடிக் கணக்கில் நிறைந்து சுற்றி இருந்தன, அநேக வகையான பூதங்களும் வேதாளங்களுமே.



# 7. பொருகளத் தலகை வகுப்பு

### அறிமுகம்

முருகப்பெருமான் அசுர சம்ஹாரம் செய்த போர்களத்துள்ள பேய்கள் வருணனை.

தனத்த தனதன தனத்த தனதன

### மூலம்

1. அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
அமைத்த கரதலி ப்ரியத்தை யுடையன

2. அடித்த தமருக கரத்தர் பயிரவர்
நடித்த நவரச நடத்தை யறிவன

3. அருக்கர் பதமல வுடுக்கள் பதமள
வடுக்கு பிணமொரு குறட்டி லடைசுவ

4. அளக்கர் உடைபட மிகுத்த குருதியை
அடைத்து மடைபட வுடைத்து விடுவன

5. அரக்கர் முடிகளை யடுப்பு வகிர்வன
அவற்றின் உலையென இரத்தம் விடுவன

6. அடுக்கல் எனுமவர் எயிற்றை யவர்கர
அகப்பை யவைகொடு புகட்டி அடுவன

7. அமிழ்த்தி அடிவிழு பிணத்தின் நிணவெளி
றளற்றி னிடையடி வழுக்கி விழுவன

8. அடப்பை யிடவரும் அணுக்க ருடன்வரு
தடக்கை மதமலை நடத்தி வருவன

9. குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
குறட்கு மிகுதிசை கொடுத்து வருவன

10. கொழுத்த குரகத இறைச்சி வகைவகை
குவித்து முறைமுறை அவித்து நுகர்வன

11. குருத்து மலரினும் வெளுத்த நிணமது
கொளுத்தி அனலதில் வெதுப்பி யிடுவன

12. குதட்டி நெடியன உதட்டில் இடுதசை
கொடிக்கு முதுசின நரிக்கும் உமிழ்வன

13. குணக்கு வளைகடல் வடக்கி யமதிசை
குடக்கு முழுவது மடக்கு வயிறின

14. குரக்கு மிடறின கரத்தில் எழுகிரி
குலுக்கி யடியொடு பறித்து நிமிர்வன

15. குதித்து முழுகியும் இரத்த நதியிடை
குடித்தும் உணர்வொடு களித்து வருவன

16. குறத்தி யிறைவனை நிறைத்து மலரடி
குறித்து வழிபடு குணத்தை யுடையன

17. துதிக்கை மலைகளை அடுக்கி அலகைகள்
துதிக்க அவைமிசை யிருக்கும் அரசின

18. துளக்கம் உறுசுடர் விளக்கை யனையன
சுழித்து வெருவர விழித்த விழியின

19. துதித்து வழிபட நடத்தல் குறையன
சுகித்து வெளிபட நகைத்து வருவன

20. துணித்த கரியுடல் திணித்த மிடறிடை
துவக்கி அவசமொ டுவிக்கி நிமிர்வன

21. தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
சுழற்றி நடமிடு துருத்தி இடுவன

22. துணுக்கம் உளஅவர் துணுக்கம் இலையென
எடுத்த கழிநெடில் படித்து வருவன

23. சுரர்க்கு மகபதி தனக்கும் இனியொரு
துளக்கம் இலையென மகிழ்ச்சி புகல்வன

24. தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகு தொகு
தொகுக்கு தொகுஎன நடித்து வருவன

25. எதிர்த்து மலைவன முடித்து வெளிமுக
டிடித்து விழும்இடி இடித்த குரலின

26. இரட்டை இளமதி உதித்த எனவெளி
றெயற்றில் நிலவெழும் இருட்டு வடிவின

27. இயக்க முறுபல ரதத்தின் உருளைகள்
இருத்தி அணிதரு பெருத்த குழையின

28. இடக்கை குடமுழ வுடக்கை துடிபறை
எடுத்து முகிலென முழக்கி வருவன

29. இதத்த கயிசிகம் இனித்த பயிரவி
எழுப்பி எழுவகை நிருத்தம் இடுவன

30. இறப்பும் வரும்எழு பிறப்பும் அறஇனி
திருத்தும் எனமயில் விருத்த மொழிவன

31. இடைக்க ழியில்ஒரு செருத்த ணியிலினி
திருக்கும் அறுமுகன் ஒருத்தன் இளையவன்

32. **இளைத்து நிசிசரர் பதைத்து மடியவொர்**
**இமைப்பில் அமர்பொரு களத்தின் அலகையே**

**(பாடல்) சொற்பிரிவு 7**

1. அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
அமைத்த கரதலி ப்ரியத்தை உடையன

2. அடித்த தமருகம் கரத்தர் பயிரவர்
நடித்த நவரச நடத்தை அறிவன

3. அருக்கர் பதமல உடுக்கள் பதம் அளவு
அடுக்கு பிணம் ஒரு குறட்டில் அடைசுவ

4. அளக்கர் உடைபட மிகுத்த குருதியை
அடைத்து அடைபட உடைத்து விடுவன

5. அரக்கர் முடிகளை அடுப்பு வகிர்வன
அவற்றின் உலை என இரத்தம் விடுவன

6. அடுக்கல் எனும் அவர் எயிற்றை அவர் கரம்
அகப்பை அவைகொடு புகட்டி அடுவன

7. அமிழ்த்தி அடிவிழு பிணத்தின் நிணம் வெளி
அளற்றினிடை அடி வழுக்கி விழுவன

8. அடப் பையிடவரும் அணுக்கருடன் வரு
   தடக்கை மதமலை நடத்தி வருவன

9. குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
   குறட்கு மிகுதிசை கொடுத்து வருவன

10. கொழுத்த குரகத இறைச்சி வகை வகை
    குவித்து முறை முறை அவித்து நுகர்வன

11. குருத்து மலரினும் வெளுத்த நிணமது
    கொளுத்தி அனலதில் வெதுப்பி யிடுவன

12. குதட்டி நெடியன உதட்டில் இடுதசை
    கொடிக்கும் முதுசின நரிக்கும் உமிழ்வன

13. குணக்கு வளைகடல் வடக்கி இயமதிசை
    குடக்கு முழுவதும் அடக்கும் வயிறின

14. குரக்கு மிடறின கரத்தில் எழுகிரி
    குலுக்கி அடியொடு பறித்து நிமிர்வன

15. குதித்து முழுகியும் இரத்த நதியிடை
    குடித்தும் உணர்வொடு களித்து வருவன

16. குறத்தி இன்றவனை நிறைத்து மலரடி
    குறித்து வழிபடும் குணத்தை உடையன

17. துதிக்கை மலைகளை அடுக்கி அலகைகள்
    துதிக்க அவைமிசை இருக்கும் அரசின

18. துளக்கம் உறுசுடர் விளக்கை அனையன
    சுழித்து வெருவர விழித்த விழியின

19. துதித்து வழிபட நடத்தல் குறையன
    சுகித்து வெளிபட நகைத்து வருவன

20. துணித்த கரியுடல் திணித்த மிடறிடை
    துவக்கி அவசமொடு விக்கி நிமிர்வன

21. தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
    சுழற்றி நடமிடு துருத்தி இடுவன

22. துணுக்கம் உளஅவர் துணுக்கம் இலையென
    எடுத்த கழிநெடில் படித்து வருவன

23. சுரர்க்கும் மகபதி தனக்கும் இனிஒரு
    துளக்கம் இலைஎன மகிழ்ச்சி புகல்வன

24. தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகுதொகு
தொகுக்கு தொகுஎன நடித்து வருவன

25. எதிர்த்து மலைவன முடித்து வெளிமுகடு
இடித்து விழும்இடி இடித்த குரலின

26. இரட்டை இளமதி உதித்த என வெளிறு
எயிற்றில் நிலவு எழும் இருட்டு வடிவின

27. இயக்க உறுபல ரதத்தின் உருளைகள்
இருத்தி அணிதரு பெருத்த குழையின

28. இடக்கை குடமுழவு உடுக்கை துடி பறை
எடுத்து முகிலென முழக்கி வருவன

29. இதத்த கயிசிகம் இனித்த பயிரவி
எழுப்பி எழுவகை நிருத்தம் இடுவன

30. இறப்பும் வரும் எழுபிறப்பும் அறஇனி
திருத்தும் எனமயில் விருத்தம் மொழிவன

31. இடைக்கழியில் ஒரு செருத்தணியில் இனிது
இருக்கும் அறுமுகன் ஒருத்தன் இளையவன்

32. **இளைத்து நிசிசரர் பதைத்து மடிய ஓர்**
**இமைப்பில் அமர் பொருகளத்தின் அலகையே.**

**பதவுரை :**

அதிர்த்த - மிகுத்த ஒளி எழுப்பும் (அதிருங்கழல்), பரிபுர பதத்தி - சிலம்பு அணிந்த பாதங்களை உடையவள், பயிரவி - கால பைரவரின் துணைவி, அமைத்த கரதலி - அஞ்சேல் என அடியார்களுக்கு அபயம் அளிக்கும் கர முத்திரை உடையவள் (ஆகிய தேவியின்), ப்ரியத்தை யுடையன - அன்பை பெற்று இருப்பன (பொரு களத்தின் அலகையே)

அடித்த தமருக கரத்தர் பயிரவர் - உடுக்கை ஒலிக்கும் கைகளை உடைய அஷ்ட பைரவர்கள், நடித்த நவரச நடத்தை யறிவன - அற்புதம், இன்பம், அவலம், நகைச்சுவை, நடுநிலை, ருத்ரம், வீரம், பயம், இழிப்பு முதலிய நவரச கூத்தின் இலக்கண விதியை அறிந்து அவர்களின் ஆட்டத்தை மெச்சுவன (பொரு களத்தின் அலகையே)

அருக்கர் பதமல - ஆதித்த மண்டலம் மட்டுமல்லாமல் அதற்கு மேலும் உள்ள, உடுக்கள் பதமளவு - நட்சத்திர மண்டலம் எட்டும் அளவுக்கு, அடுக்கு பிணம் - அடுக்கி வைத்துள்ள அசுரர்களின் பிணங்களை, ஒரு குறட்டி லடைசுவ - திண்ணை போல் அலங்காரமாக அடுக்கி வைப்பன, (பொரு களத்தின் அலகையே)

அளக்கர் உடைபட மிகுத்த குருதியை - கடற்கரை உடைந்து பெருகுவது போல் அதிகமாக பெருகிவரும் ரத்த வெள்ளத்தை, அடைத்தும் அடைபட வுடைத்து விடுவன - முதலில் பெருகாமல் அடைத்தும் மீண்டும் உடைத்து விடுவன (பொரு களத்தின் அலகையே)

அரக்கர் முடிகளை அடுப்பு வகிர்வன - மாண்ட அசுரர்களின் தலைகளைக் குப்புறக்கவிழ்த்து சமையல் அடுப்பாக நிர்மாணித்து, அவற்றின் உலையென இரத்தம் விடுவன - அவற்றில் உலை நீராக அசுரர்களின் ரத்தம் நிரப்புவன (பொரு களத்தின் அலகையே)

அடுக்கல் எனும் அவர் எயிற்றை - மலையாக குவிந்து கிடக்கும் அந்த அசுரர்களின் பற்களை உலை நீரில் (அரிசியாக) போட்டு அவர் கர அகப்பை அவைகொடு புகட்டி அடுவன - அவர்களின் கைகளை அகப்பை போல் பாவித்து சமையல் செய்வன (பொரு களத்தின் அலகையே)

அமிழ்த்தி - ரத்தக் குழம்பில் அமிழும் படி, அடிவிழு பிணத்தின் நிணவெளி அளற்றின் இடை - காலடியில் வந்து விழுகின்ற பிணங்களின் கொழுத்த மாமிசச் சேற்றில், அடி வழுக்கி விழுவன - கால் வழுக்கிக் கீழே விழுவன (பொரு களத்தின் அலகையே)

அட - கொல்வதற்காக, பையிட வரும் - சினத்துடன் வேகமாக வரும், அணுக்கருடன்வரு - பக்கத்தே தன்னுடன் நெருக்கமாக இருக்கும் யானைப்பாகருடன், தடக்கை மதமலை நடத்தி வருவன - நடந்து வருகின்ற பெரிய துதிக்கையை உடைய மலை போன்ற மதயானைகளைப் பிடித்து அழைத்து வருவன (பொரு களத்தின் அலகையே)

குதித்து மகிழ்வொடு - மகிழ்ச்சியோடு களிப்புடன் குதித்து, மிதித்து - காலால் பூமியை மிதித்து, நடமிடு குறட்கு மிகுதிசை கொடுத்து வருவன - நடனமிடும் குட்டி பூதங்களுக்கு ஆட்டத்தின் பரிசாக மிச்சம் இருந்த மாமிச உணவைக் கொடுத்து வருவன (பொரு களத்தின் அலகையே)

கொழுத்த குரகத இறைச்சி - போர்களத்தில் மாண்டு கிடக்கும் பருத்த குதிரைகளின் இறைச்சியை, வகைவகை குவித்து முறைமுறை அவித்து நுகர்வன - குவியல் குவியல்களாக திரட்டி வைத்து பல சமையல் செய்து சாப்பிடுவன (பொரு களத்தின் அலகையே)

குருத்து மலரினும் வெளுத்த நிணமது - குருந்து மரத்து மலரைவிட வெண்ணிறமுள்ள கொழுப்பை, கொளுத்தி அனல் அதில் வெதுப்பி யிடுவன - நெருப்பில் சுட்டு நாலு பக்கங்களிலும் பரிமாறுவன (பொரு களத்தின் அலகையே)

குதட்டி - நன்றாக மென்று, நெடியன உதட்டில் இடு தசை - நீண்ட தொங்கும் தன் உதட்டின் வழியாக இட்ட மாமிசத்தை, கொடிக்கும் முதசின நரிக்கும் உமிழ்வன - காக்கைக்கும், பசியால் சினத்துடன் இருக்கும் கிழட்டு நரிகளுக்கும் உணவாகத் தருவன (நாம் சாப்பிடுவதற்கு முன் காக்கைக்கு இடுவது மாதிரி) (பொரு களத்தின் அலகையே)

குணக்கு வளைகடல் - கிழக்கே உள்ள குடாக் கடல் (விரிகுடா), வடக்கி யமதிசை குடக்கு - வடக்கு தென் மேற்கு திசைகளில் உள்ள சமுத்திரங்கள், முழுவதும் அடக்கு வயிறின - எல்லாவற்றையும் முழங்கக் கூடிய அளவிற்கு பெரிய வயிறுகளை உடையன (பொரு களத்தின் அலகையே)

குரக்கு மிடறின - முடக்கு வாதம் பிடித்த கழுத்தை உடையன, கரத்தில் எழுகிரி குலுக்கி யடியொடு பறித்து நிமிர்வன - கைகளில் சூரனுக்கு அரணாக இருந்த ஏழு மலைகளையும் அசைத்து வேரிலிருந்து பறித்து நிமிர்ந்து எழுவன (பொரு களத்தின் அலகையே)

குதித்து முழுகியும் இரத்த நதியிடை - ரத்த நதியிடை குதித்து முழுகியும், குடித்தும் உணர்வொடு களித்து வருவன - குருதியைக் குடித்து உணர்வோடு களித்து வருவன (பொரு களத்தின் அலகையே)

குறத்தி யிறைவனை - ஆனாலும் இவ்வளவு அனாசார வாழ்க்கையை உடையனவாக இருந்தாலும்) வள்ளி மணாளனின், அடி குறித்து - பாதங்களைத் தியானித்து, மலர் நிறைந்தது - மிகுந்த புஷ்பங்களால், வழிபடு குணத்தை யுடையன - அர்ச்சித்து தொழும் பண்பாட்டை கொண்டு உள்ளன. (பொரு களத்தின் அலகையே)

துதிக்கை மலைகளை அடுக்கி - மாண்ட யானைகளின் உடல்களை ஒன்றன் மேல் ஒன்றாய் அடுக்கி, அலகைகள் துதிக்க அவைமிசை யிருக்கும் அரசின - சேவகப் பேய்கள் சுற்றி நின்று போற்றி பாட யானை உடல் சிம்மாசனத்தின் மேல் அமர்ந்து அரசாட்சி செய்வன (பொரு களத்தின் அலகையே)

துளக்கம் உறு - மென்மையாக ஆடுகின்ற, சுடர் விளக்கை யனையன - தீபம் போன்ற, ஒளிவிளக்கை நிகர்ப்பன சுழித்து வெருவர விழித்த விழியின - வட்டமாக அச்சம் தரும்படி கண்களை கொண்டு பார்ப்பன (பொரு களத்தின் அலகையே)

துதித்த வழிபட - எப்போதும் தன் இறைவனை துதி செய்து, நடத்தல் குறையன - வணங்கும் வாழ்க்கையே விரதமாக கொண்டிருப்பன சுகித்து வெளிபட நகைத்து வருவன - மகிழ்ச்சி பொங்க வெளியில் தெரியும்படி சிரித்து வருவன (பொரு களத்தின் அலகையே)

துணித்த கரியுடல் - தலை அறுக்கப்பட்ட யானைகளின் உடல்களை, திணித்த மிடறிடை - அவசர அவசரமாய்த் திணிக்கப்பட்ட தொண்டை, துவக்கி - கட்டினது போல் சிக்கிக் கொண்டு, அவசமொ டுவிக்கி நிமிர்வன - மயக்கம் வந்தது போல் அவஸ்தை பட்டு விக்கல் ஏற்பட்டு அதை சமாளிக்க முதுகை நிமிர்த்தி நிற்பன (பொரு களத்தின் அலகையே)

தொலைத்த - உயிர் பிரிந்து போன, முடிநிரை பரப்பி - தலைகளை வரிசையாகப் பரப்பி வைத்து, வயிரவர் சுழற்றி நடமிடு துருத்தி இடுவன - வயிரவர்கள் ஆடுவதற்கு ஏற்றபடி ஆடல் அரங்கம் அமைப்பன (பொரு களத்தின் அலகையே)

துணுக்கம் உளஅவர் துணுக்கம் இலையென - இவ்வளவு நாட்கள் அசுரர்களுக்காக பயந்திருந்த அனைவரும் இனிமேல் பயம் நீங்கி விட்டது எனும்படி, எடுத்த கழிநெடில் படித்து வருவன - தாம் இயற்றிய அறுசீர் முதலிய விருத்தப்பாக்களை முருகனின் வெற்றியைப் பாடுவன (பொரு களத்தின் அலகையே)

சுரர்க்கு மகபதி தனக்கும் - தேவர்களுக்கும், இந்திரனுக்கும், இனியொரு துளக்கம் இலையென மகிழ்ச்சி புகல்வன - இனிமேல் நடுங்குவதற்கு எந்த காரணமும் இல்லை என்று சொல்லும் படிக்கு களிப்புடன் பேசுவன (பொரு களத்தின் அலகையே)

தொகுக்கு தொகு தொகு தொகுக்கு தொகு தொகு
தொகுக்கு தொகுஎன நடித்து வருவன - தொகுக்கு தொகு தொகு தொகுக்கு தொகு தொகு தொகுக்கு தொகு என்று பல தாள ஒலிகளுடன் ஆடி வருவ:ன (பொரு களத்தின் அலகையே)

எதிர்த்து மலைவன - விளையாட்டாக ஒன்றோடு ஒன்று மல்யுத்தம் புரிவன, முடித்து - அந்த விளையாட்டின் முடிவில், வெளிமுகடு இடித்து விழும்இடி இடித்த குரலின - ஆகாய கபாலமே உடைந்து போகும்படி இடி போன்ற பெரிய வெற்றி முழக்கத்தை எழுப்புவன (பொரு களத்தின் அலகையே)

இரட்டை இளமதி உதித்த என - இரு பிறைச் சந்திரன் தோன்றின என்று சொல்லும்படிக்கு,

வெளிறு எயிற்றில் நிலவெழும் இருட்டு வடிவின - வெண்மை நிறமான பற்களில் இருந்து வீசும் ஒளியில் கருப்பு நிறத்தைக் காண்பிப்பன ((பொரு களத்தின் அலகையே)

இயக்கமுறு - உருண்டு ஓடுகின்ற, பல ரதத்தின் உருளைகள் - அநேகவித தேர்களின் சக்கரங்களை, இருத்தி - எடுத்துப் பொருத்தி, அணிதரு பெருத்த குழையின் - அழகிய பெரிய காதணிகளாகத் தரித்திருப்பன (பொரு களத்தின் அலகையே)

இடக்கை குடமுழ வுடக்கை துடிபறை - இடக்கை, குடமுழவு, உடுக்கை, துடி, பறை எனப்படும் வாத்தியங்களை, எடுத்து முகிலென முழக்கி வருவன - கையில் வைத்துக்கொண்டு மேக கர்ஜனை போல் முழக்கி வருவன (பொரு களத்தின் அலகையே)

இதத்த கயிசிகம் இனித்த பயிரவி - சுகமான கைசிகை, இனிமையான பைரவி முதலிய ராகங்களை, எழுப்பி - பாடல்களில் அமைத்து, எழுவகை நிருத்தம் இடுவன - குரவை, களநடனம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பனவை விதூஷக் கூத்து முதலிய ஏழு வகையான நடனங்களை ஆடிக் காண்பிப்பன (பொரு களத்தின் அலகையே)

இறப்பும் வரும்எழ பிறப்பும் அற - இறத்தலையும், மீண்டும் ஏழு வகை ஜனனம் (தேவர், மக்கள், விலங்கு, பறப்பன, ஊர்வன, நீரில் வாழ்வன, தாவரம்) எடுப்பதையும் நீக்கி, இனி திருத்தும் எனமயில் விருத்த மொழிவன - இன்ப முத்தி நிலையை அளிக்கும் என்கிற நூற்பயனைச் சொல்லி மயில் விருத்தங்களைப் பாராயணம் செய்வன (பொரு களத்தின் அலகையே)

இடைக்கழியில் - திருவிடைக்கழியிலும் ஒரு செருத்த ணியிலினி, திருக்கும் அறுமுகன் ஒருத்தன் இளையவன் - ஒப்பற்ற திருத்தணியிலும் மகிழ்ந்து வீற்றிருக்கும் சண்முகன், என்றும் இளைய குமாரக் கடவுள் (பொரு களத்தின் அலகையே)

இளைத்து நிசிசரர் பதைத்து மடிய - அசுரர்களைப் பகைத்து அவர்கள் துடித்து இறக்கும்படி, ஓர் இமைப்பில் அமர்பொரு களத்தின் அலகையே - கண நேரத்தில் யுத்தம் செய்யும் போர் களத்தில் குழுமி இருந்த பேய்க் கூட்டங்களே.

**பொழிப்புரை :**

மிகுத்த ஒளி எழுப்பும் (அதிருங்கழல்), சிலம்பு அணிந்த பாதங்களை உடையவள், கால பைரவரின் துணைவி, அஞ்சேல் என அடியார்களுக்கு அபயம் அளிக்கும் கர முத்திரை உடையவள் (ஆகிய தேவியின்), அன்பைப் பெற்று இருப்பன (பொரு களத்தின் அலகையே) உடுக்கை ஒலிக்கும் கைகளை உடைய அஷ்ட பைரவர்கள், அற்புதம், இன்பம், அவலம், நகைச்சுவை, நடுநிலை, ருத்ரம், வீரம், பயம், இழிப்பு முதலிய நவரச கூத்தின் இலக்கண விதியை அறிந்து அவர்களின் ஆட்டத்தை மெச்சுவன (பொரு களத்தின் அலகையே) ஆதித்த மண்டலம் மட்டுமல்லாமல் அதற்கு மேலும் உள்ள, நட்சத்திர மண்டலம் எட்டும் அளவுக்கு, அடுக்கி வைத்துள்ள அசுரர்களின் பிணங்களைத், திண்ணை போல் அலங்காரமாக அடுக்கி வைப்பன, (பொரு களத்தின் அலகையே) கடற்கரை உடைந்து பெருகுவது போல் அதிகமாகப் பெருகிவரும் ரத்த வெள்ளத்தை, முதலில் பெருகாமல் அடைத்தும் மீண்டும் உடைத்துப் பெருகவிடுவன (பொரு களத்தின் அலகையே) மாண்ட அசுரர்களின் முடிகளைச் சமையல் அடுப்பாக நிர்மாணித்து, அவற்றின் உலை நீராக அசுரர்களின் ரத்தம் நிரப்புவன (பொரு களத்தின் அலகையே) மலையாகக் குவிந்து கிடக்கும் அந்த அசுரர்களின் பற்களை, உலை நீரில் (அரிசியாக) போட்டு அவர்களின் கைகளை அகப்பை போல் பாவித்து சமையல் செய்வன (பொரு களத்தின் அலகையே) ரத்தக் குழம்பில் அமிழும் படி, காலடியில் வந்து விழுகின்ற பிணங்களின் கொழுத்த மாமிசச் சேற்றில், கால் வழுக்கி கீழே விழுவன (பொரு களத்தின் அலகையே) கொல்வதற்காக, சினத்துடன் வேகமாக வரும், பக்கத்தே தன்னுடன் நெருக்கமாக இருக்கும் யானைப்பாகருடன், நடந்து வருகின்ற பெரிய துதிக்கையை உடைய மலை போன்ற மதயானைகளைப் பிடித்து அழைத்து வருவன (பொரு களத்தின் அலகையே) மகிழ்ச்சியோடு களிப்புடன் குதித்து, காலால் பூமியை மிதித்து, நடனமிடும் குட்டி பூதங்களுக்கு ஆட்டத்தின் பரிசாக மிச்சம் இருந்த மாமிச உணவைக் கொடுத்து வருவன (பொரு களத்தின் அலகையே) போர்களத்தில் மாண்டு கிடக்கும் பருத்த குதிரைகளின் இறைச்சியை, குவியல் குவியல்களாகத் திரட்டி வைத்து பல சமையல் செய்து சாப்பிடுவன (பொரு களத்தின் அலகையே) குருந்து மரத்து மலரைவிட வெண்ணிறமுள்ள கொழுப்பை, நெருப்பில் சுட்டு நாலு பக்கங்கிளிலும் பரிமாறுவன (பொரு களத்தின் அலகையே) நன்றாக மென்று, நீண்ட தொங்கும் தன் உதட்டின் வழியாக இட்ட மாமிசத்தை, காக்கைக்கும் பசியால் சினத்துடன் இருக்கும் கிழட்டு நரிகளுக்கும் உணவாகத் தருவன (நாம் சாப்பிடுவதற்கு முன் காக்கைக்கு இடுவது மாதிரி) (பொரு களத்தின் அலகையே) கிழக்கே உள்ள குடாக் கடல் (விரிகுடா), வடக்கு தென் மேற்கு திசைகளில் உள்ள சமுத்திரங்கள், எல்லாவற்றையும் முழுங்கக் கூடிய அளவிற்கு பெரிய வயிறுகளை உடையன (பொரு களத்தின் அலகையே) முடக்கு வாதம் பிடித்த கழுத்தை உடையன, கைகளில் சூரனுக்கு அரணாக இருந்த ஏழு மலைகளையும் அசைத்து வேரிலிருந்து பறித்து நிமிர்ந்து எழுவன (பொரு களத்தின் அலகையே) ரத்த நதியிடை குதித்து முழுகியும், குருதியைக் குடித்து உணர்வோடு களித்து வருவன (பொரு களத்தின் அலகையே) ஆனாலும் இவ்வளவு அனாசார வாழ்க்கையை உடையனவாக இருந்தாலும்) வள்ளி மணாளனின், பாதங்களைத் தியானித்து, மிகுந்த புஷ்பங்களால், அர்ச்சித்து தொழும் பண்பாட்டைக்

கொண்டு உள்ளன. (பொரு களத்தின் அலகையே) மாண்ட யானைகளின் உடல்களை ஒன்றன் மேல் ஒன்றாய் அடுக்கி, சேவகப் பேய்கள் சுற்றி நின்று போற்றி பாட யானை உடல் சிம்மாசனத்தின் மேல் அமர்ந்து அரசாட்சி செய்வன.

மென்மையாக ஆடுகின்ற, தீபம் போன்ற, வட்டமாக அச்சம் தரும்படி கண்களைக் கொண்டு பார்ப்பன (பொரு களத்தின் அலகையே) எப்போதும் தன் இறைவனைத் துதி செய்து, வணங்கும் வாழ்க்கையே விரதமாகக் கொண்டிருப்பன (பொரு களத்தின் அலகையே), மகிழ்ச்சி பொங்க பகிரங்கமாய் நகைத்து வருவன (பொரு களத்தின் அலகையே) தலை அறுக்கப்பட்ட யானைகளின் உடல்களை, அவசர அவசரமாய் திணிக்கப்பட்ட தொண்டை, கட்டினது போல் சிக்கிக் கொண்டு, மயக்கம் வந்தது போல் அவஸ்தைப் பட்டு விக்கல் ஏற்பட்டு அதை சமாளிக்க முதுகை நிமிர்த்தி நிற்பன (பொரு களத்தின் அலகையே) உயிர் பிரிந்து போன, தலைகளை வரிசையாக பரப்பி வைத்து, வயிரவர்கள் ஆடுவதற்கு ஏற்றபடி ஆடல் அரங்கம் அமைப்பன (பொரு களத்தின் அலகையே) இவ்வளவு நாட்கள் அசுரர்களுக்காக பயந்திருந்த அனைவரும் இனிமேல் பயம் நீங்கி விட்டது எனும் படி, தாம் இயற்றிய அறுசீர் முதலிய விருத்தப்பாக்களை முருகனின் வெற்றியைப் பாடுவன (பொரு களத்தின் அலகையே) தேவர்களுக்கும், இந்திரனுக்கும், இனிமேல் நடுங்குவதற்கு எந்த காரணமும் இல்லை என்று சொல்லும் படிக்கு களிப்புடன் பேசுவன (பொரு களத்தின் அலகையே) தொகுக்கு தொகு தொகு தொகுக்கு தொகு தொகு தொகுக்கு தொகு என்று பல தாள ஒலிகளுடன் ஆடி வருவன (பொரு களத்தின் அலகையே) விளையாட்டாக ஒன்றோடு ஒன்று மல்யுத்தம் புரிவன, அந்த விளையாட்டின் முடிவில், ஆகாய கபாலமே உடைந்து போகும்படி இடி போன்ற பெரிய வெற்றி முழக்கத்தை எழுப்புவன (பொரு களத்தின் அலகையே) இரு பிறைச் சந்திரன் தோன்றின என்று சொல்லும்படிக்கு வெண்மை நிறமான பற்களில் இருந்து வீசும் ஒளியில் கருப்பு நிறத்தைக் காண்பிப்பன (பொரு களத்தின் அலகையே) உருண்டு ஓடுகின்ற, அநேகவித தேர்களின் சக்கரங்களை, எடுத்துப் பொருத்தி, அழகிய பெரிய காதணிகளாக தரித்திருப்பன (பொரு களத்தின் அலகையே) இடக்கை, குடமுழவு, உடுக்கை, துடி, பறை எனப்படும் வாத்தியங்களை, கையில் வைத்துக்கொண்டு மேக கர்ஜனை போல் முழக்கி வருவன (பொரு களத்தின் அலகையே) சுகமான கைசிகை, இனிமையான பைரவி முதலிய ராகங்களை, பாடல்களில அமைத்து, குரவை, களநடனம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பவை விதுஷக் கூத்து முதலிய ஏழு வகையான நடனங்களை ஆடிக் காண்பிப்பன (பொரு களத்தின் அலகையே) இறத்தலையும் மீண்டும் எழு வகை ஜனனம் (தேவர், மக்கள், விலங்கு, பறப்பன, ஊர்வன, நீரில் வாழ்வன, தாவரம்) எடுப்பதையும் நீக்கி, இன்ப முத்தி நிலையை அளிக்கும் என்கிற நூற்பயனைச் சொல்லி மயில் விருத்தங்களைப் பாராயணம் செய்வன (பொரு களத்தின் அலகையே) திருவிடைக்கழியில், ஒப்பற்ற திருத்தணியில் களிப்புடன் வீற்றிருக்கும் சண்முகன் என்றும் இளையவன் குமாரக் கடவுள் (பொரு களத்தின் அலகையே) அசுரர்களைப் பகைத்து அவர்கள் துடித்து இறக்கும்படி, கண நேரத்தில் யுத்தம் செய்யும் போர் களத்தில் குழுமி இருந்த பேய்க் கூட்டங்களே.



# 8. செருக்களத்தலகை வகுப்பு

### அறிமுகம்

முருகன் அசுர சம்ஹாரம் செய்த போர்களத்தில் உள்ள பேய்கள் வர்ணனை (7ஆவது வகுப்பின் கருத்தைத்தழுவியது)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனத்த தனதன

### மூலம்

1. குதிரைத் திரள்பட் டபிணத் தையெடுத்
துதிரப் புனலிற் குளிக்கு மொருதிரள்

2. குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள்

3. கொடுகொட் டிபடத் துடிக்கொட் டிநடத்
தடமிட் டுவளைத் திருக்கு மொருதிரள்

4. குடரைப் புயமிட் டுடலைச் சிறுகக்
குலையிட் டதிரச் சிரிக்கு மொருதிரள்

5. சதையைச் சிலகைக் கொளமற் றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு மொருதிரள்

6. தறுகட் சிறுகட் டவளக் கவளத்
தமரத் திமிரப் பனைக்கை மதமலை

7. தலையுக் குளநற் றருணக் கிரணத்
தரளத் திரளைக் குவித்த டியெனுரல்

8. தனிலிட் டதனைத் தகுகைத் தலமுற்
றிடுநெட் டைமருப் புலக்கை முறைமுறை

9. எதிரிட் டதுகுத் திமுடித் தலையொப்
பஅடுப் பெனவைத் தெலுப்பு விறகினை

10. எரியிட் டெரியிட் டுருவத் துடனெட்
டுலைவைத் துணவைச் சமைக்கு மொருதிரள்

11. இருள்செற் றதடித் தினையொத் திடுகட்
கமெடுத் தெறியத் — தெறித்த தலைகளை

12. இதெனக் கதுனக் கதுமற் றதனுக்
கெனமொய்த் துலவிப் — பொறுக்கு மொருதிரள்

13. அதரத் துவிரற் படவைத் துமிகுத்
தரவத் தொடுகொக் — கரிக்கு மொருதிரள்

14. அமுதொத் தநிணத் தசைமுக் கியறத்
தவசத் துயிலிற் — கிடக்கு மொருதிரள்

15. அடவிப் புனமுற் றகுறத் திருவுக்
கமைவுற் றமணிப் — புயத்தன் அறுமுகன்

16. **அடன்மிக் கதயித் தியர்பட் டுவிழப்**
**பொருதிட் டசெருக் — களத்தில் அலகையே.**

### (பாடல்) சொற்பிரிவு 8

1. குதிரைத் திரள்பட்ட பிணத்தை எடுத்து
உதிரப் புனலில் — குளிக்கும் ஒரு திரள்

2. குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனில் — களிக்கும் ஒரு திரள்

3. கொடு கொட்டி படத் துடி கொட்டி நடத்
தடம் இட்டு வளைத்து — இருக்கும் ஒரு திரள்

4. குடரைப் புயமிட்டு உடலைச் சிறுகக்
குலையிட்டு அதிரச் — சிரிக்கும் ஒரு திரள்

5. சதையைச் சில கைக் கொள மற்று அதனைச்
சருவிச் சருவிப் — பறிக்கும் ஒரு திரள்

6. தறுகண் சிறுகண் தவளம் கவளம்
தமரம் திமிரம் — பனைக்கை மதமலை

7. தலை உக்கு உள நல் தருணம் கிரணம்
தரளத் திரளைக் — குவித்த அடி என் உரல்

8. தனில் இட்டு அதனைத் தகு கைத்தலம்
உற்றிடு நெட்டை மருப்பு — உலக்கை முறை முறை

9. எதிரிட்டு அதுகுத்தி முடித்தலை ஒப்ப
அடுப்பென வைத்து எலுப்பு விறகினை

10. எரியிட்டு எரியிட்டு உருவத்துடன் நெட்டு
உலை வைத்து உணவைச் சமைக்கும் ஒரு திரள்

11. இருள் செற்ற தடித்தினை ஒத்திடு கட்கம்
எடுத்து எறியத் தெறித்த தலைகளை

12. இது எனக்கு அது உனக்கு மற்று அதனுக்கு என
மொய்த்து உலவிப் பொறுக்கும் ஒரு திரள்

13. அதரத்து விரல் படவைத்து மிகுத்த
அரவத்தொடு கொக்கரிக்கும் ஒரு திரள்

14. அமுது ஒத்த நிணத்தசை முக்கி அறத்து
அவசத்துயிலில் கிடக்கும் ஒரு திரள்

15. அடவிப் புனம் உற்ற குறத்திருவுக்கு
அமைவுற்ற மணிப் புயத்தன் அறுமுகன்

16. **அடல் மிக்க தயித்தியர் பட்டுவிழப்
பொருதிட்ட செருக் களத்தில் அலகையே.**

**பதவுரை :**

பட்ட குதிரைத் திரள் பிணத்தை எடுத்து - இறந்துப் பட்ட குதிரைக் கூட்டங்களின் உடல்களை அப்பால் தூக்கி எறிந்து விட்டு, உதிரப் புனலில் குளிக்கும் ஒரு திரள் - அந்த ரத்த ஆற்றில் குளிக்கும் அலகைகளின் ஒரு கூட்டம்.

குருதிக் கடலைப் பெருகப் பருகி - ரத்தக் கடலை நிரம்பக் குடித்து விட்டு, குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள் - அந்த வெறியில் கூத்து ஆடுவன ஒரு கூட்டம்.

கொடுகொட்டி பட - கொடு கொட்டி எனும் வாத்தியம் முழங்க, துடிக்கொட்டி - உடுக்கையை சப்தித்து, நடத் தளம் இட்டு - நடன சாலை அமைத்து, வளைத் திருக்கும் ஒரு திரள் - சூழ்ந்திருக்கும் ஒரு கூட்டம்

குடரைப் புயம் இட்டு - குடல்களை தமது தோள்களில் மாலையாக அணிந்து கொண்டு, உடலைச் சிறுகக் குலை இட்டு - உடலை சுருக்கி கொண்டு நடுங்குவது போல நடித்து, அதிரச் சிரிக்கும் ஒரு திரள் - பெரு முழக்கத்துடன் சிரிக்கும் ஒரு கூட்டம்

சதையைச் சில கைக் கொள - சில பேய்கள் மாமிசத்தை கையில் பிடித்திருப்பதைப் பார்த்து

மற்று அதனைச் சருவிச் சருவிப் பறிக்கு ஒரு திரள் - மற்ற பேய்கள் சண்டை இட்டுப்போராடி அந்த உணவைப் பிடுங்குவன ஒரு கூட்டம்.

தறுகண் சிறுகண் - கொடுங்கோபமும், சிறிய கண்களை உடையதும், தவளக் கவள - வெண்மை நிறமும் கவளம் கவளமாக உண்ணுகின்ற உணவும், தமரத் திமிரப் - பெரும் நடையும் பெருமிதமும், பனைக்கை மதமலை - பனைமரம் போன்ற துதிக்கையை உடைய மத யானையின்

தலை உட்குள - மத்தகத்திலிருந்து உதிர்ந்த, நல் தருணக் கிரணத் தரளத் திரளைக் குவித்து - சிறப்பான புதியதான ஒளி வீசுகின்ற முத்துக் குவியல்களை (கரி முத்து மாலை), அடி எனும் உரல் - அந்த யானையின் பாதங்களான உரலில்

தனில் இட்டு - தனித்தனியான இட்டு, அதனை - அந்தக் கரி முத்துக்களை, தகு கைத்தலம் உற்றிடு - தகுந்த துதிக்கையில் வளைந்திருக்கும், இடு நெட்டை மருப்ப உலக்கை - நீண்ட தந்தங்களை இடிக்கும் உலக்கையாகக் கொண்டு

முறை முறை எதிரிட்டு அது குத்தி - வரிசைப்படி எதிர் வந்து அந்த முத்துக்களை குத்தி, முடி தலை ஒப்ப அடுப்பு என வைத்து எலுப்பு விறகினை - மயிருடன் கூடிய பொருத்தமான தலைகளை அடுப்பாக வைத்து எலும்புகளை விறகாக்கி

எரி இட்டு எரி இட்டு - நெருப்பை மேன்மேலும் ஊட்டி, உருவத்துடன் - அழகு பெற, உலை வைத்து உணசைச் சமைக்கும் ஒரு திரள் - நீண்ட நேரம் உலை வைத்து சமையல் செய்யும் ஒரு கூட்டம்

இருள் செற்ற - இருட்டை நீக்கும், தடித்தினை ஒத்திடு - மின்னலைப் போன்ற, கட்கம் எடுத்து எறியத் தெறித்த தலைகளை - வாளை எடுத்து வீசுவதால் வெட்டுண்டு கிடக்கும் தலைகளை,

இது எனக்கு அது உனக்கு என - எனக்கு, உனக்கு, மற்றதனக்கு (மற்றவர்களுக்கு) என பங்கு போட்டுக் கொண்டு, மொய்த்து உலவிப் பொறுக்கும் ஒரு திரள் - நெருங்கி அங்கும் இங்குமாக திரிந்து கொண்டு போர்களத்தில் தலைகளைப் பொறுக்கி எடுப்பன ஒரு கூட்டம்

அதரத்து விரல் பட வைத்து - உதட்டின் மேல் விரலை வைத்துக்கொண்டு, மிகுத்த அரவத்தொடு கொக்கரிக்கும் ஒரு திரள் - சீழ்கையைப் பலமாக ஒலித்துக்கொண்டு அமர்களமாக கூச்சல் போடுவன ஒரு கூட்டம்

அமுது ஒத்த நிணத் தசை முக்கி - தமக்கு அமிர்தம் போன்று சுவை மிக்க மாமிசங்களையும் கொழுப்பையும் வாய் நிறைய உண்டு, அறத்து - தர்ம சத்திரத்தில், அவசத் துயிலில் கிடக்கும் ஒரு திரள் - உண்ட மயக்கத்தில் தம்மை மறந்து உறங்கும் ஒரு கூட்டம் (இவை எல்லாம் எவை என வினாவினால்)

அடவிப் புனம் உற்ற குறத் திருவுக்கு - காட்டில் தினைக் கொல்லையில் வசித்த குறக்குல இலக்குமியான வள்ளிக்கு, அமைவுற்ற மணிப் புயத்தன் அறுமுகன் - பொருத்தமான அழகிய தோள்களை உடையவன், சண்முகன்,

அடல் மிக்க தயித்தியர் பட்டு விழ - வலிமை மிக்க அசுரர்களை மாண்டு ஒழியும் பொருதிட்ட செருக்களத்தில் அலகையே - போரிட்ட போர்க்களத்தில் பேய்க்கூட்டங்களே.

**பொழிப்புரை :**

இறந்துப் பட்ட குதிரைக் கூட்டங்களின் உடல்களை அப்பால் தூக்கி எறிந்து விட்டு, அந்த ரத்த ஆற்றில் குளிக்கும் அலகைகளின் ஒரு கூட்டம், ரத்தக் கடலை நிரம்பக் குடித்து விட்டு, அந்த வெறியில் கூத்து ஆடுவன ஒரு கூட்டம், கொடு கொட்டி எனும் வாத்தியம் முழங்க, உடுக்கையைச் சப்தித்து, நடன சாலை அமைத்து, சூழ்ந்திருக்கும் ஒரு கூட்டம், குடல்களைத் தமது தோள்களில் மாலையாக அணிந்து கொண்டு, உடலைச் சுருக்கிக் கொண்டு நடுங்குவது போல நடித்து, பெரு முழக்கத்துடன் சிரிக்கும் ஒரு கூட்டம், சில பேய்கள் மாமிசத்தை கையில் பிடித்திருப்பதைப் பார்த்து, மற்ற பேய்கள் சண்டை இட்டு போராடி அந்த உணவைப் பிடுங்குவன ஒரு கூட்டம், கொடுங்கோபமும் சிறிய கண்களை உடையதும், வெண்மை நிறமும் கவளம் கவளமாக உண்ணுகின்ற உணவும், பெரும் நடையும் பெருமிதமும், பனை மரம் போன்ற துதிக்கையை உடைய மத யானையின், மத்தகத்திலிருந்து உதிர்ந்த, சிறப்பான புதியதான ஒளி வீசுகின்ற முத்துக் குவியல்களை, அந்த யானையின் பாதங்களான உரலில், தனித்தனியாக இட்டு, அந்தக் கரி முத்துக்களை, தகுந்த துதிக்கையில் வளைந்திருக்கும், நீண்ட தந்தங்களை இடிக்கும் உலக்கையாகக் கொண்டு, வரிசைப்படி எதிர் வந்து அந்த முத்துக்களைக் குத்தி, மயிருடன் கூடிய பொருத்தமான தலைகளை அடுப்பாக வைத்து, எலும்புகளை விறகாக்கி, நெருப்பை மேன்மேலும் ஊட்டி, அழகு பெற, நீண்ட நேரம் உலை வைத்து சமையல் செய்யும் ஒரு கூட்டம்.

இருட்டை நீக்கும், மின்னலைப் போன்ற, வாளை எடுத்து வீசுவதால் வெட்டுண்டு கிடக்கும் தலைகளை, எனக்கு, உனக்கு, மற்றது தனக்கு, மற்றவர்களுக்கு என பங்கு போட்டுக் கொண்டு, நெருங்கி அங்கும் இங்குமாகத் திரிந்து கொண்டு போர்க்களத்தில் தலைகளைப் பொறுக்கி எடுப்பன ஒரு கூட்டம், உதட்டின் மேல் விரலை வைத்துக்கொண்டு, சீழ்கையை பலமாக ஒலித்துக்கொண்டு அமர்களமாகக் கூச்சல் போடுவன ஒரு கூட்டம், தமக்கு அமிர்தம் போன்று சுவை மிக்க மாமிசங்களையும் கொழுப்பையும் வாய் நிறைய உண்டு, தர்ம சத்திரத்தில், உண்ட மயக்கத்தில் தம்மை மறந்து உறங்கும் ஒரு கூட்டம் (இவை எல்லாம் எவை என வினாவினால்), காட்டில் தினைக் கொல்லையில் குறக்குல வசித்த இலக்குமியான வள்ளிக்கு, பொருத்தமான அழகிய தோள்களை உடையவன், சண்முகன், வலிமை மிக்க அசுரர்களை மாண்டு ஒழியும் படி போரிட்ட போர்க்களத்தில் பேய்க்கூட்டங்களே.





# 9. போர்களத் தலகை வகுப்பு

## அறிமுகம்

முருக பெருமான் அசுர சம்ஹாரம் செய்த போர்களத்தில் உள்ள பேய்கள் வர்ணனை

தன தன தந்தன தனதன தந்தன தந்தா தத்தன
தனதன தனந்த தாத்த தத்த தன தன

## மூலம்

1. பகலிர வின்றியொர் புகல்திசை நந்திய பற்பா னுத்தகை
படமுதல் விசும்பு தூர்த்த டுக்கு பிணமலை

2. பவுரிவ ரும்பரி புரநரல் பங்கய வித்தா ரத்தன
பயிரவி பதங்கள் வாழ்த்தெ டுத்த பசியன

3. பரியகொ ழுந்தசை பயிரவர் என்றுப லிக்கா நிற்பவர்
பகரிடம் அறிந்து பாத்தி ரத்தில் இடுவன

4. பரவிவ ருங்குறள் பசிதணியும்படி பட்டார் கைப்படு
பரிசையின் முகந்து சூட்டி றைச்சி சொரிவன

5. படுகள மென்பதொர் செறுவில் விளைந்தன பற்கோ வைப்பயில்
பவுரிவி சைகொண்டு தீட்டி மெத்த அடுவன

6. பரியணி திண்பணை முடியம டிந்துடல் பப்பா தித்துணி
படவிழு பெருங்கை மாக்க ருக்கல் பகிர்வன.

7. படைவிச யந்தெரி சலதிவ லம்புரி பற்றார் பட்டுள
பலபல விதங்கள் ஆர்ப்பெ டுக்கும் உதடின

8. பகடுபி ளந்ததன் உ ரிவைபு னைந்திடு குப்பா யத்தன
பதவிய ரிணஞ்செ யூட்டு டுத்த வுடையின

9. உகமுடி வன்றினும் வெருவவ ரும்பல உற்பா தத்தன
ஒளிமதி வகிர்ந்த கீற்றெ யிற்று நிலவின

10. உருவம் இருண்டன திகிரிவி லங்கலின் உட்பாய் கிற்பன
உலவநி ணமொண்டு கூட்டமைத்து நுகர்வன

11. உததியு றுஞ்சுவ வடவைநெ டுங்கனல் உட்கா கப்பெரு
குதிரபி சிதங்கள் பேர்த்தி றக்கி யிடுவன

12. உருமுமி டைந்தென அதிர்குர லின்றமில் ஒப்பே றிட்டுநி
ருதர்மவு லிகொண்டு கோட்டை யிட்டு மலைவன

13. உலகுகு லுங்கிட அரியது ணங்கையி னைச்சா திப்பன
உவணப டலங்கள் காக்கை சுற்றி வருவன

14. உலைதரு மென்குட ரிடைபட இந்திர னுத்யா னத்தலர்
உகிர்கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன

15. உயரிப முங்குர கதகுல முங்கன பொற்றேர் வர்க்கமும்
உடைபடு கலங்கள் போற்சு ழித்து விரைபட

16. ஒழுகுதி ரந்தனின்முழுகியெ ழுந்தன உச்சா டத்துடன்
உடைகடல் அதிர்ந்து கூப்பி ளக்கு நடையின

17. செகதலம் எங்கணும் அதிரமு ழங்கிய டிப்பாய் வெற்றிய
திரள்வரை பிடுங்கி நாட்டி யொட்டு குழையின

18. சினமலி வெங்குறள் இனமொடு திண்டிறல் மற்போர் கற்பன
திசையள வுநின்று நீட்டி வைக்கும் அடியின

19. திசைகள்தொ றும்பல குறைகள் எழுந்துது டித்தா டச்சிறை
செறிகழு கரங்கில் வீற்றி ருக்கும் அரசின

20. திமிரபி லங்கிழி படவிசை கொண்டுகு தித்தா லிப்பன
சிகரவ டகுன்றி னூற்றி ரட்டி நெடியன

21. சிறியன கிண்கிணி யணிகுரு வின்சர ணத்யா னத்தின
திசைபட அகண்ட சீர்த்தி மெச்சி யிரைவன

22. திமிலைபெ ரும்பறை சிறுபறை நின்றதி ரச்சே வித்துயர்
சயமகள் விளங்கு வேற்க ரத்தை மொழிவன

23. திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தீ செக்கண
செககண மொழிந்து கூத்த னைத்து நவில்வன

24. சிலைமலி திண்புய அசுரர்சி ரங்கள் அடுப்பா வைத்தவர்
செறிகுடர் நிணங்கள் காய்ச்சி மிக்க அயில்வன

25. நிகரில் அறம்புரி குருகுல பஞ்சவர் மெய்த்தூ துக்கொரு
நிமிடம திலன்று போய்க்கவித்த மணிமுடி

26. நிருபர்ப யங்கொள நெறுநெ றெனும்படி பொற்பீடத்திடை
நிலைபெற இருந்து நூற்று வர்க்கும் அவரறி

27. நினைவுற வன்புறும் ஒருபதி னெண்குண அக்ரோ ணிப்படை
நிகிலமு மடிந்து கூற்று வற்கு நிறைவுற

28. நிலமகள் வன்பொறை கடியுமு குந்தன்மு தற்சேண் முட்டவு
நெறிபட நிமிர்ந்த ஆக்கை யற்கு மருமகன்

29. நிமலைத்ரி யம்பகி கவுரிதி கம்பரி நிர்ப்பா வக்குண
நிருமலி யிரங்கு தாய்ப்ரி யத்தன் அறுமகன்

30. நிகரக னங்குல சிகரிதொ டும்பெரு வெற்பார் உற்பல
நிறையருவி கொஞ்ச ஒச்சி யத்தில் ஒளிர்சுனை

31. நியதியின் நன்கலர் தணிகைஎ னும்பதி நிற்பான் முற்பட
நெடுமகர சிந்து தீப்ப றக்க வெகுவித

**32. நிபுடது ரங்கக சவிரத சங்க்ரம நிட்டு ரக்கொலை**
**நிருதரை முனிந்த போர்க்க ளத்தில் அலகையே.**

**(பாடல்) சொற்பிரிவு 9**

1. பகல் இரவு இன்றி ஓர் புகல் திசை நந்திய பல்பானுத் தகை
பட முதல் விசும்பு தூர்த்து அடுக்கு பிணமலை

2. பவுரி வரும் பரிபுரம் நரல் பங்கய வித்தாரத்தன
பயிரவி பதங்கள் வாழ்த்தி எடுத்த பசியன

3. பரிய கொழுந்தசை பயிரவர் என்று பலிக்கா நிற்பவர்
பகர் இடம் அறிந்து பாத்திரத்தில் இடுவன

4. பரவி வருங்குறள் பசிதணியும்படி பட்டார் கைப்படு
பரிசையின் முகந்து சூட்டி இறைச்சி சொரிவன

5. படுகளம் என்பதோர் செறுவில் விளைந்தன பற்கோவை பயில்
பவுரி விசை கொண்டு தீட்டி மெத்த அடுவன

6. பரியணி திண்பணை முடிய மடிந்து உடல் பப்பாத்தித்துணிபட
விழு பெருங்கை மாக் கருக்கல் பகிர்வன

7. படை விசயம் தெரி சலதி வலம்புரி பற்றார் பட்டுள
பலபல விதங்கள் ஆர்ப்பு எடுக்கும் உதடின

8. பகடு பிளந்து அதன் உரிவை புனைந்திடு குப்பாயத்தன
பதவி அரிணம் செயூட்டு உடுத்த வுடையின

9. உகமுடிவு அற்றினும் வெருவ வரும்பல உற்பாதத்தன
ஒளிமதி வகிர்ந்த கீற்று எயிற்று நிலவின

10. உருவம் இருண்டன திகிரி விலங்கலின் உள் பாய்கிற்பன
உலவி நிணம் மொண்டு கூட்டு அமைத்து நுகர்வன

11. உததி உறுஞ்சுவ வடவை நெடுங்கனல் உட்காகப் பெருகு
உதிர பிசிதங்கள் பேர்த்து இறக்கி இடுவன

12. உருமு மிடைந்தெ என அதிர் குரலின் தமில் ஒப்பு ஏறிட்டு
நிருதர் மவுலி கொண்டு கோட்டை யிட்டு மலைவன

13. உலகு குலுங்கிட அரிய துணங்கையினைச் சாதிப்பன
உவணம் படலங்கள் காக்கை சுற்றி வருவன

14. உலைதரு மென்குடர் இடைபட இந்திரன் உத்யானத்து அலர்
உகிர் கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன

15. உயர் இபமும் குரகதகுலமும் கன பொன் தேர் வர்க்கமும்
உடைபடு கலங்கள் போல் சுழித்து விரைபட

16. ஒழுகு உதிரம்தனில் முழுகி எழுந்தன உச்சாடத்துடன்
உடைகடல் அதிர்ந்து கூப்பிளக்கு நடையின

17. செகதலம் எங்கணும் அதிர முழங்கி அடிப்பாய் வெற்றிய
திரள் வரை பிடுங்கி நாட்டி யொட்டு குழையின

18. சினமலி வெங்குறள் இனமொடு திண்திறல் மற்போர் கற்பன
திசை அளவு நின்று நீட்டி வைக்கும் அடியின

19. திசைகள் தொறும் பல குறைகள் எழுந்து துடித்து ஆடச்சிறை
செறி கழுகு அரங்கில் வீற்று இருக்கும் அரசின

20. திமிரம் பிலங்கிழி பட விசை கொண்டு குதித்து ஆலிப்பன
சிகர வட குன்றின் நூற்றிஇரட்டி நெடியன

21. சிறியன கிண்கிணி அணிகுருவின் சரண தியானத்தின
திசைபட அகண்ட சீர்த்தி மெச்சி இரைவன

22. திமிலை பெரும்பறை சிறுபறை நின்று அதிரச் சேவித்து உயர்
சயமகள் விளங்கு வேல் கரத்தை மொழிவன

23. திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தீ செக்கண
செககண மொழிந்து கூத்தனைத்து நவில்வன

24. சிலைமலி திண்புய அசுரர் சிரங்கள் அடுப்போக வைத்து அவர்
செறி குடர் நிணங்கள் காய்ச்சி மிக்க அயில்வன

25. நிகர் இல் அறம்புரி குருகுல பஞ்சவர் மெய்த்தூதுக்கு ஒரு
நிமிடமதில் அன்று போய்க் கவித்த மணிமுடி

26. நிருபர் பயங்கொள நெறுநெறு எனும்படி பொற்பீடத்திடை
நிலைபெற இருந்து நூற்றுவர்க்கும் அவர் அறி

27. நினைவுற வன்புஉறு ஒரு பதினெண் குண் அக்ரோணிப்படை
நிகிலமும் மடிந்து கூற்றுவற்கு நிறைவுற

28. நிலமகள் வன்பொறை கடியும் முகுந்தன் முதல் சேண் முட்டவும்
நெறிபட நிமிர்ந்த ஆக்கையற்கு மருமகன்

29. நிமலை த்ரியம்பகி, கவுரி திகம்பரி நிர்ப்பாவக்குண
நிருமலி இரங்கு தாய் ப்ரியத்தன் அறுமகன்

30. நிகரம் கனம் குலசிகரி தொடும் பெருவெற்பு உற்பலம்
நிறை அருவி கொஞ்ச ஒச்சியத்தில் ஒளிர்சுனை

31. நியதியின் நன்கு அலர் தணிகை எனும்பதி நிற்பான் முற்பட
நெடு மகர சிந்து தீப்பறக்க வெகுவித

32. **நிபுடம் துரங்கம் கசம் இரத சங்க்ரமம் நிட்டூரம் கொலை**
**நிருதரை முனிந்த போர்க்களத்தில் அலகையே.**

**பதவுரை :**

பகல் இரவு இன்றி - பகல் இரவு என்கிற பாகுபாடுகளைப் பார்க்காமல், ஓர் புகல் - ஒப்பற்றவனாக கூறப்படும், திசை நந்திய - எல்லாத் திசைகளிலும் ஒளியை வீசுகின்ற, பற்பானு - பன்னிரு சூரியர்கள், தகைபட - தங்களுடைய சஞ்சாரம் தடைப்படும் படி, விசும்பு முதல் தூர்த்த - ஆகாயம் முதல் பூமி வரை எல்லாம் மறையும் படி, அடுக்கு பிணமலை - மலைபோல் குவிந்துள்ள அரக்கர் பிணங்களை.

பவுரி வரும் - சுற்றி கூத்தாடி வரும், பரிபுர நரல் பங்கய - சிலம்பு சப்திக்கும் பாத தாமரைகளும், வித்தா ரத்தன - பருத்து கொழுத்த கொங்கைகளை உடைய, பயிரவி பதங்கள் வாழ்த்தி எடுத்த பசியன - ரண துர்க்கையின் திருவடிகளை வாழ்த்தியபடி பச் பச் பச் என்று கெஞ்சி நிற்பன, போர் களத்தில் அலகையே.

பயிரவர் என்று பலிக்கா நிற்பவர் - தமது தலைவியான துர்க்கையின் படை வீரரான பைரவர் எனக் கருதி உணவுப் பிச்சை கேட்டு நிற்கும், பகரிடம் அறிந்து - அவருடைய இடத்தை

தேடிச் சென்று, பரிய கொழுந்தசை - பெருத்த கொழுத்த மாமிசத் துண்டங்களை, பாத்திரத்தில் இடுவன - பிட்சா பாத்திரங்களில் போடுவன, போர் களத்தில் அலகையே.

பரவிவரும் குறள் பசி தணியும்படி - போற்றி துதி செய்து வருகின்ற குட்டை பூதங்களின் பசி தீரும் படி, பட்டார் கைப்படு - யுத்தகளத்தில் வீழ்ந்து இறந்தவர்களுடைய கையிலிருந்து கீழே வீழ்ந்து கிடக்கும், பரிசையின் முகந்து சூட்டு இறைச்சி சொரிவன - கேடயங்களை பாத்திரங்களாகக் கொண்டு வாரி மொண்டு புதிய உஷ்ணம் குன்றாத மாமிசத்தைத் திரளாகக் கொடுப்பன, போர்களத்தில் அலகையே.

படுகளம் என்பதொர் - யுத்த பூமியாகிய, செறுவில் விளைந்தன - வயலில் பயிராகி உள்ள, பற்கோவைப் - பல் வரிசைகளைத் தானியமாக பாவித்து, பயில்பவுரி விசை கொண்டு தீட்டி மெத்த அடுவன - தாங்கள் பழகி வரும் சுற்றி சுற்றி ஆடும் நடனக் கூத்தின் வேகத்தோடு வந்து, அந்தப் பல் வரிசைகளைக் குத்தி சுத்தம் செய்து சிறப்பாக சமைப்பன, போர்களத்தில் அலகையே.

அணி திண்பணை பரி முடிய மடிந்து - அழகிய வலிமை மிக்க குதிரை லாயங்களில், குதிரைகள் அனைத்தும் மாண்டு போய், உடல் பப்பாதித் துணி பட - அவைகளின் உடல்கள் பாதிபாதியாய் அறுந்து விழ (அவைகளையும்), விழு பெருங்கை மாக் கருக்கல் பகிர்வன - வீழ்ந்து கிடக்கும் பெரிய யானைகளையும் வறுத்து பங்கிட்டுக் கொடுப்பன, போர்களத்தில் அலகையே.

படைவிசயம் தெரி - தமது படைகளின் வெற்றிச் செய்திகளைத் தெரிந்து கொண்டு, சலதி வலம்புரி பற்றார் பட்டுள பலபல விதங்கள் ஆர்ப்பெடுக்கும் உதடின - சமுத்திரம் போலவும் சங்கினைப் போலவும், பலப்பல விதங்களில் பகைவர்கள் மாண்டு கிடக்கும் நிலைகளைக் கூச்சலிட்டுக் கூறும் வாயினை உடையன, போர்களத்தில் அலகையே.

பகடு பிளந்து அதன் உரிவை புனைந்திடு குப்பா யத்தன - துண்டமாக்கப்பட்ட யானைகளின் தோலைச் சட்டையாக அணிந்திருப்பன போர்களத்தில் அலகையே, அரிணம் பதவி - மான் தோலைப் பதப்படுத்தி, செயூட்டு உடுத்த வுடையின - செம்மைப்படுத்திச் செய்யப்பட்ட உடுப்புகளைத் தரித்திருப்பன, போர்களத்தில் அலகையே.

உகமுடி அன்றினும் - சதுர் யுகம் முடிந்து பிரளயம் வரும் போது, வெருவ வரும் பல உற்பாதத்தன - அச்சம் ஊட்டும் பல விதமான கெட்ட சகுனங்களைக் காண்பிப்பது போல, ஒளிமதி வகிர்ந்த கீற்று எயிற்று நிலவின - பிரகாசிக்கும் சந்திரனைப் பிளந்தது போன்ற கோரைப் பற்களை உடையன, போர்களத்தில் அலகையே.

உருவம் இருண்டன - கரிய நிறத்தன, திகிரிவிலங்கலின் உட்பாய் கிற்பன - சக்ரவாளகிரியைப் பிளந்து உள்ளே பாயும் வலிமை உடையன, உலவி நிண மொண்டு கூட்டு அமைத்து நுகர்வன - திரிந்து மாமிசங்களை அள்ளிக் கறி சமைத்து உண்பன, போர்களத்தில் அலகையே.

உததி உறுஞ்சுவ - கடல் நீரை உறுஞ்சுகின்ற, வடவை நெடுங்கனல் உட்காகப் பெருகு - வடவாமுக அக்னியாகிய பெருந்தீயும் பயப்படும்படிப் பெருகி வெளிப்படும், உதிர பிசிதங்கள்

பேர்த்து இறக்கி இடுவன - ரத்தம் தோய்ந்த கொழுப்பைப் பிரித்து வண்டலை எல்லாம் வடித்து பங்கீடு செய்வன, போர்க்களத்தில் அலகையே.

உருமும் இடைந்து என - இடி அருகில் சப்திப்பது போன்று, அதிர்குரலின் - முழங்கும் வாய் ஓசையுடன், தமில் ஒப்பு ஏறிட்டு - தமக்குள் யாருடைய குரல் அதிகமானது என ஒப்பிட்டுக் கொண்டு, நிருதர் மவுலி கொண்டு கோட்டை இட்டு மலைவன - அரக்கர்களின் தலைகளைக் கொண்டு கோட்டை போல அடுக்கி எதிர் எதிர் நின்று போட்டியில் ஈடுபடுவன **(Tug of War)** போர்க்களத்தில் அலகையே.

உலகு குலுங்கிட அரிய துணங்கையினைச் சாதிப்பன - உலகமே அதிரும்படி அருமையான துணங்கைக் கூத்தைச் செய்து காட்டுவன, உவண படலங்கள் காக்கை சுற்றி வருவன - கழுகு கூட்டங்கள், காக்கைகள் சுற்றி இருக்க உலவி வருவன, போர்க்களத்தில் அலகையே.

உலைதரு - அழிந்து கிடக்கும், மென் குடல் இடைபட - மெல்லிய குடல்களை சேர்த்துக் கட்டுவதற்கு நார் போல உபயோகித்து, இந்திரன் உத்யானத்து அலர் - கற்பகச் சோலையின் பூந்தோட்டத்துப் பூக்களை, உகிர்கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன - தங்கள் நக நுனிகளால் ஜோடிக்கப்பட்ட மாலைகளைக் கட்டி முடித்துச் சூட்டிக் கொள்வன, போர்க்களத்தில் அலகையே.

உயர் இபமும் குரகதகுலமும் - சிறந்த யானை குதிரைப் படைகளையும், கன பொன்தேர் வர்க்கமும் - பெரிய அழகிய தேர் படைகளையும், உடைபடு கலங்கள் போற சுழித்து விரைபட - சூறாவளிக் காற்றால் சின்னா பின்னமாக்கப்பட்ட படகுகள் போல் சுழற்சி உற்று வேகமாக அழிபட இட்டன, போர்க்களத்தில் அலகையே.

ஒழுகு உதிரந்தனின் முழுகி எழுந்தன - யானை குதிரை உடல்களில் இருந்து வெளிவரும் ரத்த ஆற்றால் முழுகி எழுந்தன, உச்சாடத்துடன் நடையின - சடுகுடு என கொக்கரித்துக் கொண்டு ஒன்றை ஒன்று துரத்துவன, உடைகடல் அதிர்ந்து கூப்பிளக்கு நடையின - கடல் தளர்ந்து போகவும், அந்த ஓட்ட அதிர்ச்சியால் பூமி பிளவு படும் படியான நடையை உடையன, போர்க்களத்தில் அலகையே.

செகதலம் எங்கணும் அதிர முழங்கி - பூமியில் எல்லா இடங்களும் அதிரும்படி முழக்கம் செய்து, அடிப்பாய் வெற்றிய - காலை அழுத்திப் பாய்கின்ற ஜெயத்தை உடையனவாய், திரள்வரை பிடுங்கி நாட்டி ஒட்டி குழையின - சுற்றி உள்ள திரளான மலைகளைப் பிடுங்கி அவைகளை நேராக நிறுத்தி, காதில் ஆபரணமாகப் பூட்டிக் கொள்வன, போர்க் களத்தில் அலகையே.

சினமலி வெங்குறள் இனமொடு - கோபம் மிக்க கொடிய பேய்க் கணங்களுடன், திண் திறல் மற்போர் கற்பன - வலிமையுடனும் சாமர்த்தியத்துடன் மல் யுத்தம் பழகுவன போர்க் களத்தில் அலகையே, திசை அளவு நின்று நீட்டி வைக்கும் அடியின - நான்கு திசைகளிலும் பரவலாக நின்று பாதங்களை எட்ட எட்ட வைப்பன, போர்க் களத்தில் அலகையே.

திசைகள் தொறும் பல குறைகள் எழுந்து - யுத்த களத்தில் பல திசைகளிலும் சிரம் அறுபட்ட பல கவுந்தங்கள் (தலையற்ற உடல்கள்) பூமியிலிருந்து எழுந்து, துடித்து ஆட - அங்கும்

இங்கும் துடித்து ஆட, சிறை செறி கழுகு அரங்கில் வீற்றிருக்கும் அரசின- இறகுகள் மிகுந்து பட படக்கும் கழுகுகளின் அரங்கத்தில் தலமை பூண்டு தன் ஆணைகளைச் செலுத்துவன, போர்க் களத்தில் அலகையே.

திமிர பிலம் கிழி பட விசை கொண்டு குதித்து ஆலிப்பன - இருண்ட பாதாள உலகம் உடைந்து போகும் படிக்கு, வேகத்துடன் குதித்து ஆரவாரம் செய்வன, போர்க் களத்தில் அலகையே, சிகர வடகுன்றின் நூற்று இரட்டி நெடியன - உயர்ந்து வடக்கிலுள்ள மேரு மலையைப் போல் இரு நூறு மடங்கு நீண்டு உயர்ந்த உருவத்தைக் கொண்டன, போர்க் களத்தில் அலகையே.

சிறியன கிண்கிணி யணிகுருவின் சரண தியானத்தின் - சிறு சதங்கை அணிந்துள்ள குருபரனான முருக வேளின் திருவடிகளைத் தியானிக்கும் ஒழுக்கம் உடையன, திசைபட அகண்ட சீர்த்தி மெச்சி இரைவன - நான்கு திசைகளும் உடையும் படிக்கு கணக்குக்கு எட்டாத அபரிமிதமான அவரின் பெரும் புகழை மிகுத்த சப்தங்களுடன் வாயாறப் பாடுவன, போர்க் களத்தில் அலகையே.

திமிலை பெரும்பறை சிறுபறை நின்று அதிரச் சேவித்து - திமிலை, களப்பறை, சிறிய பறை, முதலிய தோல் வாத்தியங்கள் நிலையாக ஒலி செய்ய வணங்கிக் கொண்டு, உயர் சயம்கள் விளங்கு வேல் கரத்தை மொழிவன - மேலான விஜயலக்ஷ்மி திகழும் வேலாயுதத்தையும் அதைப் பிடித்திருக்கும் கரத்தைப் பற்றியும் போற்றித் துதிப்பன, போர்க் களத்தில் அலகையே.

திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தீ செக்கண செககண மொழிந்து - பல ஜதி சுரங்களைக் கூறி, கூத்து அனைத்து நவில்வன - பலவகை கூத்துக்களை நடித்துக் காட்டுவன, போர்க் களத்தில் அலகையே

சிலை மலி திண்புய அசுரர் சிரங்கள் அடுப்பா வைத்து - மலை போன்ற வலிய தோல்களை உடைய அரக்கர்களின் தலைகளை அடுப்பாக வைத்து, அவர் செறி குடர் நிணங்கள் காய்ச்சி மிக்க அயில்வன - அவர்களுடைய செறிந்த குடல்களையும், கொழுப்பையும் காய்ச்சி மிகுதியாக உண்பன, போர்க் களத்தில் அலகையே.

நிகரில் அறம்புரி குருகுல பஞ்சவர் - ஒப்பில்லாத தான தர்மங்களை மேற்கொண்டு வரும் குரு வம்சத்தினரான பஞ்ச பாண்டவர்களுக்கான, தூதுக்கு ஒரு நிமிடமதில் அன்று போய்க் கவித்த மணிமுடி - சத்தியத்தை நாட்டும் தூதுவனாக மிக வேகத்துடன் சென்று முன்னாளில் அஸ்தினாபுரம் சென்று ரத்ன கிரிடங்களை அணிந்துள்ள,

நிருபர் பயங்கொள - துரியோதனனின் ராஜ சபையில் இருந்த அரசர்கள் அச்சம் அடையும் படிக்கு, நெறுநெறு எனும்படி பொற்பீடத்திடை நிலைபெற இருந்து - வஞ்சனையாக போடப்பட்டிருந்த (ஆசனம்) நெறு நெறு என்று கீழே நிலவரையில் இறங்க, அந்த அழகிய பீடத்தில் அச்சமில்லாமல் அதில் நிலையாக வீற்றிருந்து, (நிலவரையில் பதுங்கி இருந்த அரக்கர்களையும், மல்லர்களையும் கிழித்து போட்டு), நூற்றுவர்க்கும் அவர் அறி - துரியோதனாதியர்கள் நூறு கௌரவர்கள் அறிந்து,

நினைவுற வன்புறும் ஒருபதினெண்குண அக்ரோணிப்படை - நினைவில் கொள்ளும் படி வலிமை மிக்க ஒப்பற்ற பதினெட்டு அக்ரோணிப் படை, நிகிலமும் மடிந்து கூற்றுவற்கு நிறைவுற - எல்லாமும் இறந்து எமனுக்கு விருந்தாக அமைய

(பதினெண்குண அக்ரோணிப்படை நிகிலமும் மடிந்து பாண்டவர் பக்கம் 7 கௌரவர்கள் பக்கம் 11 ஆன அக்ரோணி படைகள் அனைத்தும் யுத்தத்தில் அழிந்தன அக்ரோணிபடை

1 யானை, 1 தேர் , 3 குதிரை, 5 காலாள் = 1 பதாதி

| | | |
|---|---|---|
| 3 பதாதி | = | 1 சேனாமுகம் |
| 3 சேனாமுகம் | = | 1 குமுதம் |
| 3 குமுதம் | = | 1 கனகம் |
| 3 கனகம் | = | 1 வாகிணி |
| 3 வாகிணி | = | 1 பிரளயம் |
| 3 பிரளயம் | = | 1 சமுத்திரம் |
| 3 சமுத்திரம் | = | 1 சங்கம் |
| 3 சங்கம் | = | 1 அனிகம் |
| 3 அனிகம் | = | 1 அக்ரோணி) |

நிலமகள் வன்பொறை கடியம் முகுந்தன் - பூமா தேவிக்கு பெரும் பாரமாய் இருந்தவர்களைக் கோபித்து அழித்த திருமால், முதல் சேண் முட்டவும் நெறிபட நிமிர்ந்த ஆக்கையற்கு மருமகன் - முன்னொரு நாளில் ஆகாய கபாலம் இடிக்கும்படி வளர்ந்து தர்மம் நிலைபெற விஸ்வ ரூபம் கொண்டு உடலை உடைய திரிவிக்ரமற்கு மருமகன்.

நிமலை - மலமற்றவள், த்ரியம்பகி - முக்கண்ணி, கவுரி - பொன் நிறத்தவள், **திகம்பரி** - திக்குகளையே ஆடையாக கொண்ட நிர்வாணி, நிர்ப்பாவக் குண நிருமலி - **எண்ணங்களுக்கும்** முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட பரிசுத்தை, இரங்கு தாய் ப்ரியத்தன் - ஜீவ ராசிகளுக்கு கருணை புரியும் அன்னையாகிய பார்வதிக்கு பிரியம் ஆனவன், **அறுமுகன் - சண்முகன்.**

நிகரதிரளான கனங்குல சிகரி தொடும் பெரு வெற்பு - பொன் மயமான சிறந்த **மேரு** மலையைத் தொடும் அளவிற்குப் பெருமை மிக்க மலை, ஆர் உற்பல நிறை அருவி கொஞ்ச ஒச்சியத்தில் ஒளிர் சுனை - நெருங்கிய நீலோற்பல மலர்கள், நீர் மிகுந்த அருவிகள் பாயும் தேஜஸுடன் ஒளி வீசும் சுனையில்.

நியதியின் நன்கு அலர் தணிகை எனும் பதி நிற்பான் - காலை, உச்சி, மாலை எனும் வேளை தப்பாது நன்கு நீலோற்பல மலர்கள் மலர்கின்ற திருத்தணியில் நிற்பவன், முற்பட நெடு மகர சிந்து தீப்பறக்க - யுத்தத்திற்கு முற்பட்டு எழுந்து பெரிய மகர மீன்கள் உலாவும் மகா சமுத்திரம் அக்னி ஜ்வாலை பாய.

வெகுவித நிபுட - நெருங்கி வந்த பல வகையான, துரங்க கச இரத சங்க்ரம - குதிரை, யானை, தேர் படைகளுடன் கூடி வந்து, நிட்டுரக் கொலை நிருதரை முனிந்த போர்க்களத்தில் அலகையே - கொடூரமாகக் கொலைத் தொழில் புரியும் அரக்கர்களை தண்டித்த போர்க்களத்தில் இருந்த பேய்க் கூட்டங்களே.

**பொழிப்புரை :**

பகல் இரவு என்கிற பாகுபாடுகளைப் பார்க்காமல், ஒப்பற்றவனாகக் கூறப்படும், எல்லாத் திசைகளிலும் ஒளியை வீசுகின்ற, பன்னிரு சூர்யர்கள், தங்களுடைய சஞ்சாரம் தடைப்படும் படி, ஆகாயம் முதல் பூமி வரை எல்லாம் மறையும் படி, மலைபோல் குவிந்துள்ள அரக்கர் பிணங்களை.

சுற்றிக் கூத்தாடி வரும், சிலம்பு சப்திக்கும் பாத தாமரைகளும், பருத்து கொழுத்த கொங்கைகளை உடைய, ரண துர்க்கையின் திருவடிகளை வாழ்த்தியபடி பச் பச் பச் என்று கெஞ்சி நிற்பன, போர்க்களத்தில் அலகையே.

தமது தலைவியான துர்க்கையின் படை வீரரான பைரவர் எனக் கருதி உணவுப் பிச்சை கேட்டு நிற்கும், அவருடைய இடத்தைத் தேடிச் சென்று, பெருத்த கொழுத்த மாமிசத் துண்டங்களை, பிட்சா பாத்திரங்களில் போடுவன, போர்க்களத்தில் அலகையே.

போற்றி துதி செய்து வருகின்ற குட்டை பூதங்களின் பசி தீரும் படி, யுத்தகளத்தில் வீழ்ந்து இறந்தவர்களுடைய கையிலிருந்து கீழே வீழ்ந்து கிடக்கும், கேடயங்களைப் பாத்திரங்களாகக் கொண்டு வாரி மொண்டு புதிய உஷ்ணம் குன்றாத மாமிசத்தை திரளாகக் கொடுப்பன, போர்க்களத்தில் அலகையே.

யுத்த பூமியாகிய, வயலில் பயிராகி உள்ள, பல் வரிசைகளை தானியமாகப் பாவித்து, தாங்கள் பழகி வரும் சுற்றிச் சுற்றி ஆடும் நடனக்கூத்தின் வேகத்தோடு வந்து, அந்தப் பல் வரிசைகளைக் குத்தி சுத்தம் செய்து சிறப்பாகச்சமைப்பன, போர்க்களத்தில் அலகையே.

அழகிய வலிமை மிக்க குதிரை லாயங்களில் குதிரைகள் அனைத்தும் மாண்டு போய், அவைகளின் உடல்கள் பாதிபாதியாய் அறுந்து விழ (அவைகளையும்) வீழ்ந்து கிடக்கும் பெரிய யானைகளையும் வறுத்துப் பங்கிட்டுக் கொடுப்பன. போர்க்களத்தில் அலகையே.

தமது படைகளின் வெற்றிச் செய்திகளைத் தெரிந்து கொண்டு, சமுத்திரம் போலவும் சங்கினைப் போலவும், பலப்பல விதங்களில் பகைவர்கள் மாண்டு கிடக்கும் நிலைகளைக் கூச்சலிட்டு கூறும் வாயினை உடையன. போர்க்களத்தில் அலகையே.

துண்டமாக்கப்பட்ட யானைகளின் தோலைச் சட்டையாக அணிந்திருப்பன, போர்க்களத்தில் அலகையே, மான் தோலைப் பதப்படுத்தி, செம்மைப் படுத்த செய்யப்பட்ட உடுப்புகளை தரித்திருப்பன, போர்க்களத்தில் அலகையே.

சதுர் யுகம் முடிந்து பிரளயம் வரும் போது, அச்சம் ஊட்டும் பல விதமான கெட்ட சகுனங்களைக் காண்பிப்பது போல, பிரகாசிக்கும் சந்திரனைப்பிளந்தது போன்ற கோரைப் பற்களை உடையன, போர்களத்தில் அலகையே.

கரிய நிறத்தன, சக்ரவாளகிரியைப் பிளந்து உள்ளே பாயும் வலிமை உடையன, திரிந்து மாமிசங்களை அள்ளிக் கறி சமைத்து உண்பன, போர்க்களத்தில் அலகையே.

கடல் நீரை உறுஞ்சுகின்ற, வடவாமுக அக்னியாகிய பெருந்தீயும் பயப்படும்படி பெருகி வெளிப்படும், ரத்தம் தோய்ந்த கொழுப்பைப் பிரித்து வண்டலை எல்லாம் வடித்து பங்கீடு செய்வன, போர்க்களத்தில் அலகையே.

இடி அருகில் சப்திப்பது போன்று, முழங்கும் வாய் ஓசையுடன், தமக்குள் யாருடைய குரல் அதிகமானது என ஒப்பிட்டுக் கொண்டு, அரக்கர்களின் தலைகளைக் கொண்டு கோட்டை போல அடுக்கி, எதிர் எதிர் நின்று போட்டியில் ஈடுபடுவன **(Tug of War)** போர்க்களத்தில் அலகையே.

உலகமே அதிரும்படி அருமையான துணங்கைக் கூத்தை செய்து காட்டுவன, போர்க்களத்தில் அலகையே. கழுகு கூட்டங்கள், காக்கைகள் சுற்றி இருக்க உலவி வருவன, போர்க்களத்தில் அலகையே.

அழிந்து கிடக்கும், மெல்லிய குடல்களைச் சேர்த்துக் கட்டுவதற்கு நார் போல உபயோகித்து, கற்பகச் சோலையின் பூந்தோட்டத்துப் பூக்களை, தங்கள் நக நுனிகளால் ஜோடிக்கப்பட்ட மாலைகளைக் கட்டி முடித்து சூட்டிக் கொள்வன, போர்க்களத்தில் அலகையே.

சிறந்த யானை, குதிரைப் படைகளையும், பெரிய அழகிய தேர் படைகளையும், சூறாவளிக் காற்றால் சின்னா பின்னமாக்கப்பட்ட படகுகள் போல் சுழற்சி உற்று வேகமாக அழிபட இட்டன, போர்க்களத்தில் அலகையே.

யானை குதிரை உடல்களில் இருந்து வெளிவரும் ரத்த ஆற்றால் முழுகி எழுந்தன, சடுகுடு என கொக்கரித்துக் கொண்டு ஒன்றை ஒன்று துரத்துவன, கடல் தளர்ந்து போகவும், அந்த ஓட்ட அதிர்ச்சியால் பூமி பிளவு படும் படியான நடையை உடையன, போர்க்களத்தில் அலகையே.

பூமியில் எல்லா இடங்களும் அதிரும்படி முழக்கம் செய்து, காலை அழுத்திப் பாய்கின்ற ஜெயத்தை உடையனவாய், சுற்றி உள்ள திரளான மலைகளைப் பிடுங்கி அவைகளை நேராக நிறுத்திக் காதில் ஆபரணமாகப் பூட்டிக் கொள்வன, போர்க்களத்தில் அலகையே.

கோபம் மிக்க கொடிய பேய்க் கணங்களுடன், வலிமையுடனும் சாமர்த்தியத்துடன் மல் யுத்தம் பழகுவன போர்க் களத்தில் அலகையே, நான்கு திசைகளிலும் பரவலாக நின்று பாதங்களை எட்ட எட்ட வைப்பன, போர்க்களத்தில் அலகையே.

யுத்த களத்தில் பல திசைகளிலும் சிரம் அறுபட்ட பல கவுந்தங்கள் (தலையற்ற உடல்கள்) பூமியிலிருந்து எழுந்து, அங்கும் இங்கும் துடித்து ஆட, இறகுகள் மிகுந்து பட படக்கும் கழுகுகளின் அரங்கத்தில் தலைமை பூண்டு தன் ஆணைகளைச் செலுத்துவன, போர்க்களத்தில் அலகையே.

இருண்ட பாதாள உலகம் உடைந்து போகும் படிக்கு வேகத்துடன் குதித்து ஆரவாரம் செய்வன, போர்க் களத்தில் அலகையே, உயர்ந்து வடக்கிலுள்ள மேரு மலையைப் போல் இரு நூறு மடங்கு நீண்டு உயர்ந்த உருவத்தைக் கொண்டன, போர்க்களத்தில் அலகையே.

சிறு சதங்கை அணிந்துள்ள குருபரனான முருக வேளின் திருவடிகளைத் தியானிக்கும் ஒழுக்கம் உடையன, நான்கு திசைகளும் உடையும் படிக்கு, கணக்குக்கு எட்டாத அபரிமிதமான அவரின் பெரும் புகழை மிகுத்த சப்தங்களுடன் வாயாறப் பாடுவன, போர்க்களத்தில் அலகையே.

திமிலை, களப்பறை, சிறிய பறை, முதலிய தோல் வாத்தியங்கள் நிலையாக ஒலி செய்ய வணங்கிக் கொண்டு, மேலான விஜயலக்ஷ்மி திகழும் வேலாயுதத்தையும் அதைப் பிடித்திருக்கும் கரத்தைப் பற்றியும் போற்றித் துதிப்பன, போர்க்களத்தில் அலகையே.

பல ஜதி சுரங்களைக் கூறி, பலவகைக் கூத்துக்களை நடித்துக் காட்டுவன, போர்க்களத்தில் அலகையே

மலை போன்ற வலிய தோல்களை உடைய அரக்கர்களின் தலைகளை அடுப்பாக வைத்து, அவர்களுடைய செறிந்த குடல்களையும், கொழுப்பையும் காய்ச்சி மிகுதியாக உண்பன, போர்க்களத்தில் அலகையே.

ஒப்பில்லாத தான தர்மங்களை மேற்கொண்டு வரும் குரு வம்சத்தினரான பஞ்ச பாண்டவர்களுக்கான, சத்தியத்தை நாட்டும் தூதுவனாக மிக வேகத்துடன் சென்று முன்னாளில் அஸ்தினாபுரம் சென்று ரத்ன கிரிடங்களை அணிந்துள்ள,

துரியோதனனின் ராஜ சபையில் இருந்த அரசர்கள் அச்சம் அடையும் படிக்கு, வஞ்சனையாகப் போடப்பட்டிருந்த (ஆசனம்) நெறு நெறு என்று கீழே நிலவரையில் இறங்க, அந்த அழகிய பீடத்தில் அச்சமில்லாமல் அதில் நிலையாக வீற்றிருந்து, நிலவரையில் பதுங்கி இருந்த அரக்கர்களையும், மல்லர்களையும் கிழித்து போட்டு, துரியோதனாதியர்கள் நூறு கௌரவர்கள் அறிந்து,

நினைவில் கொள்ளும் படி வலிமை மிக்க ஒப்பற்ற பதினெட்டு அக்ரோணிப் படை, எல்லாமும் இறந்து எமனுக்கு விருந்தாக அமைய பூமா தேவிக்குப் பெரும் பாரமாய் இருந்தவர்களை கோபித்து அழித்த திருமால், முன்னொரு நாளில் ஆகாய கபாலம் இடிக்கும்படி வளர்ந்து தர்மம் நிலைபெற விஸ்வ ரூபம் கொண்டு உடலை உடைய திரிவிக்ரமற்கு மருமகன். மலமற்றவள், முக்கண்ணி, பொன் நிறத்தவள், திக்குகளையே ஆடையாக கொண்ட நிர்வாணி, எண்ணங்களுக்கும் முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட பரிசுத்தை, ஜீவ ராசிகளுக்கு கருணை புரியும் அன்னையாகிய பார்வதிக்கு பிரியம் ஆனவன், சண்முகன். பொன் மயமான சிறந்த மேரு மலையைத் தொடும் அளவிற்கு பெருமை மிக்க மலை, நெருங்கிய நீலோற்பல மலர்கள், நீர் மிகுந்த அருவிகள் பாயும் தேஜஸுடன் ஒளி வீசும் சுனையில். காலை உச்சி மாலை எனும் வேளை தப்பாது நன்கு நீலோற்பல மலர்கள் மலர்கின்ற திருத்தணியில் நிற்பவன், யுத்தத்திற்கு முற்பட்டு எழுந்து பெரிய மகர மீன்கள் உலாவும் மகா சமுத்திரம் அக்னி ஜ்வாலை பாய. நெருங்கி வந்த பல வகையான, குதிரை, யானை, தேர் படைகளுடன் கூடி வந்து, கொடூரமாகக் கொலைத் தொழில் புரியும் அரக்கர்களை தண்டித்த போர்களத்தில் இருந்த பேய்க் கூட்டங்களே.



# 10. திருஞான வேழ வகுப்பு

## அறிமுகம்

மனம், வாக்கு, காயம், செயல் அற்ற அநுபூதி நிலையில் விளங்கும் சிவஞானத்தை, யானைக்கு ஒப்பிடுதல் இலக்கிய மரபு. கந்தர் கலிவெண்பாவில் - சிவஞான கடக்களிறு - என வருவதையும் தாயுமானவர் பாட்டில் - 'என்னை மத்த கஜமாக்கி' - என வருவதையும் காணலாம்.

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தானதானன

## மூலம்

1. சடலை பட்டலை உடல் எனப்படு
தரும சித்திர கூடமானவை

2. தவிர நிட்கள வெளியில் நிற்பன
சமய தர்க்கவி ரோத வாதிகள்

3. தகர எற்றுவ, புகர்ம னக்கிரி
தனைமு ருக்குவ, ஆசை ஆணவ

4. தளைஇ யற்கையை விடந டிப்பன
சனன முற்றிய சாத மாம்எழு

5. கடல்க டப்பன, படுகொ லைச்சமர்
கடகம் அப்படி சாய மோதுவ

6. கருவி னைத்தரும் இருவினைத்தொடர்
கழல்ப தத்தன, யோக சாதகர்

7. களைப றிப்பன, கிளைஎ னப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ,

8. கருணை மெய்த்தவ திருவ ருட்கன
கவள மொக்குவ, காம ராசனை

9. அடல்கெ டுப்பன, அகில கற்பனை
அரண்அழிப்பன, கோப மானவை

10. அவிய நற்பொறை எனுந திப்பிர
ளயம் இறைப்பன, லோப மோகிதம்

11. அவைமு றிப்பன, மதமு ழுத்தறி
யடிப றிப்பன, ராச தாதியின்

12. அதிகு ணத்ரய மதில் இடிப்பன,
அளவில் தத்துவ தூளி வீசுவ;

13. திடமு டைச்சிறை மயில் உகைத்தெழு
சிகரி குத்திய வேலை நீள்சுனை

14. தினமும் உற்பல மலர்தி ருத்தணி
இறைதி ருப்புகழ் பாடு நாவலர்

15. திரள்ப்ரி யப்பட இனித ளிப்பன
செயலொ ழித்தநு பூதி மீமிசை

**16. திகழும் அற்புத மவுன நிர்க்குண
சிவம யத்திரு ஞான வேழமே.**

**(பாடல்) சொற்பிரிவு (10)**

1. சடலை பட்டு அலை உடல் எனப்படு
தரும சித்திர கூடம் ஆனவை

2. தவிர நிட்கள வெளியில் நிற்பன
சமய தர்க்க விரோத வாதிகள்

3. தகர எற்றுவ, புகர் மனக்கிரி
தனை முருக்குவ, ஆசை ஆணவ

4. தளை இயற்கையைவிட நடிப்பன
சனன முற்றிய சாதமாம் எழு

5. கடல் கடப்பன, படுகொலைச் சமர்
கடகம் அப்படி சாய மோதுவ

6. கருவினைத் தரும் இரு வினைத் தொடர்
கழல் பதத்தன, யோக சாதகர்

7. களை பறிப்பன, கிளை எனப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ

8. கருணை மெய்த்தவ திருஅருள் கனம்
கவளம் மொக்குவ, காம ராசனை

9. அடல் கெடுப்பன அகில கற்பனை
அரண் அழிப்பன, கோபம் ஆனவை

10. அவிய நல் பொறை எனும் நதிப் பிரளயம் இறைப்பன உலோப மோகிதம்

11. அவை முறிப்பன, மதமுழுத் தறி அடி பறிப்பன, ராச தாதியின்

12. அதி குணத்ரயம் மதில் இடிப்பன, அளவில் தத்துவ தூளி வீசுவ

13. திடம் உடைச் சிறை மயில் உகைத்து எழு சிகரி குத்திய வேல் நீள் சுனை

14. தினமும் உற்பலம் மலர் திருத்தணி இறை திருப்புகழ் பாடு நாவலர்

15. திரள் ப்ரியப்பட இனிது அளிப்பன செயல் ஒழித்த அநுபூதி மீமிசை

16. **திகழும் அற்புத மவுன நிர்க்குணம் சிவமயத் திரு ஞான வேழமே.**

**பதவுரை :**

சடலை பட்டு அலை உடல் எனப்படு தரும சித்திர கூடம் ஆனவை தவிர நிட்கள வெளியில் நிற்பன - பொய்யான வஞ்சனை சேர்ந்து, ஸ்தூலத்தில் பருத்து, துன்பப்படுகின்ற சரீரம் என்று கூறப்படுவதும், பூர்வ வினை எனும் விதியினால் ஏற்பட்ட, பொய்யான வீட்டை நீங்குவதற்கு, துணை நின்று, உருவ பேதம் அற்ற பர ஆகாசத்தில் (மயிலாடு சுத்த வெளியில்) விளங்கச் செய்வன (வெளியில் விளைந்த வெறும் பாழில் தான் விளங்கி, அடியார்களையும் அங்கு அழைத்துச் செல்லும்). (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) சமய தர்க்க விரோத வாதிகள் தகர எற்றுவ - கொந்து கா என மொழியும் சமயவிரோத தந்திரவாதிகளை மோதி இதன் விளைவாகத்தள்ளுவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) புகர் மனக்கிரி தனை முருக்குவ - குற்றம் நிறைந்த உள்ளமாகிய மலையை பொடிப்பொடி ஆக்குவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) ஆசை ஆணவ தளை இயற்கையை விட நடிப்பன - மூவாசை அகங்காரம் ஆகிய இயல்பாகிய தளைகளான, விலங்குகளை விலக்க வல்ல விளையாடல்களை புரியும்படி செய்வன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) சனன முற்றிய சாதமாம் எழு கடல் கடப்பன - பிறப்பு எனும் முடிவான எழுவகைத் தோற்றங்களும் ஏழு வகையான பிறவிக் கடலையும் கடக்க வைக்க வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) படுகொலைச் சமர் கடகம் அப்படி சாய மோதுவ - கொடிய கொலைகளை நிகழ்த்தி போர் புரியும் சேனைகளை அந்த நிமிடத்திலேயே குலைந்து அழியும் படி எதிர்த்து போரிட வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) கருவினைத் தரும் இரு வினைத் தொடர் கழல் பதத்தன - மீண்டும் கருக்குழியில் தள்ளுகின்ற தீவினைகள், ''நான் செய்கிறேன்'' என்ற நினைப்புடன் செய்யும் நல்வினை ஆகிய சங்கிலிகளைக்கழற்றி, விடுதலை செய்ய வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) யோக சாதகர் களை பறிப்பன - யோக அப்யாசம் செய்யும் மாணவர்களுக்கு நடு நடுவில்

ஏற்படும் சோர்வையும், சோம்பேறித் தனத்தையும் நீக்கி புத்துயிர் கொடுக்க வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) கிளை எனப்படு கவலை சுற்றிய காடு சாடுவ - நெருங்கிய உறவினர் போல வந்து சூழ்ந்திருக்கும், மனக்கவலையாகிய காட்டை அழிக்க வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) கருணை மெய்த் தவ திருஅருள் கன கவள மொக்குவ - கந்தனின் கிருபையால் கிடைக்கும், உண்மைத் தவத்தின் பயனாய்க் கிட்டும் தேவானுக்கிரகம் எனும் திரண்ட மெய் உணவு உருண்டையை வாரி முழுங்குவன காம ராசனை அடல் கெடுப்பன - சிற்றின்ப ஆசையின் வல்லமையை அழிப்பன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) அகில கற்பனை அரண் அழிப்பன - பல விதமான மாய கோட்டைகளின் வல்லமையைத் தகர்க்க வல்லன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) கோபம் ஆனவை அவிய நற் பொறை எனு நதிப் பிரளயம் இறைப்பன - ஆத்திரம் கொண்ட செய்கைகள் நசியும்படி, சிறந்த பொறுமை எனும் ஆற்றின் வெள்ளத்தை வாரி வீசி கொடுப்பன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) லோப மோகிதம் அவை முறிப்பன - ஈயாத கஞ்சத் தன்மை, காம மயக்கம் ஆகியவைகளை ஒழித்து எறிவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) மதமுழுத் தறி அடி பறிப்பன - அகம்பாவம் எனும் தூணின் மூலத்தையே பறித்து எறிவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) ராச தாதியின் அதி குணத்ரய மதில் இடிப்பன - மேல் எழும் முக்குணங்களின் கோட்டைச் சுவர்களை இடித்து நிற்குண நிலைகளைக் கொடுப்பன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்) அளவு இல் தத்துவ தூளி வீசுவ - அளவிடுவதற்கு அரிய உண்மைப் பொருளாகிய மலரின் பூந்தாதுகளை வீசி எறிவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்), திடம் உடைச் சிறை மயில் உகைத்து - வலிமை மிக்க சிறகைக் கொண்ட மயிலை, வாகனமாகச் செலுத்தி, எழு சிகரி குத்திய வேல் ஐ - சூரபத்மனுக்குக் காவலாக இருந்த ஏழு மலைகளையும் தாக்கி அழித்த வேல் கடவுள், நீள்சுனை தினமும் உற்பல மலர்தி ருத்தணி இறை - பெரிய தடாகத்தில் அனுதினமும் நீலோற்பலம் பூக்கின்ற தணிகாசலனின், திருப்புகழ் பாடு நாவலர் திரள் ப்ரியப்பட இனிது அளிப்பன - திருப்புகழைப் பாடுகின்ற புலவர்களின் கூட்டம் இன்புறும் படி, அனைத்துப் பொருள்களையும் தருவன (சிவஞான களிற்றின் ஆற்றல்கள்), செயல் ஒழித்த அநுபூதி மீமிசை திகழும் அற்புத மவுன நிர்க்குண சிவமயத் திரு ஞான வேழமே - மனம், வாக்கு, காயத்தின் சலனங்களை நீக்கி, ஸ்வாநுபூதி நிலையின் சிகரமாக விளங்கும், அற்புதமான மௌன, நிலையாகிய முக்குணங்களைக் கடந்த சொரூபமான, சிவ மயமாய்த் திகழுகின்ற மங்களகரமான "ஞானம்" எனும் களிற்றின் ஆற்றல்களே.

**பொழிப்புரை :**

பொய்யான வஞ்சனை சேர்ந்து ஸ்துாலத்தில் பருத்து துன்பப்படுகின்ற உடல் என்று கூறப்படுவதும், பூர்வ வினை எனும் விதியினால் ஏற்பட்ட பொய்யான வீட்டை நீங்குவதற்கு துணைநின்று உருவபேதமற்ற ஆகாசத்தில் விளங்கச் செய்வன. சமய வாதிகள் செய்யும் தர்கங்களில் விரோதமாய் வாதாடுபவர்களை சிதற அடித்து நீக்குவன. குற்றம் நிறைந்த உள்ளமாகிய மலையை பொடி பொடியாக ஆக்குவன. மூவாசை, அகங்காரம் ஆகிய இயல்பாகவே உண்டாகின்ற பாசத்தை, விலக்க வல்ல விளையாடல்களை புரியும்படி செய்வன. பிறப்பு என்னும் எழுவகை தோற்றங்களும் ஏழு வகையான பிறவிக் கடலையும், கடக்க வைக்க

வல்லன. கொடிய கொலைகளை நிகழ்த்தி போர்புரியும் சேனைகளை, அந்த நிமிடத்திலேயே குலைந்து அழியும்படி எதிர்த்து போரிட வல்லன. மீண்டும் பிறப்பு என்ற குழியில் தள்ளுகின்ற தீவினைகள், நல்வினைகள் ஆகிய சங்கிலிகளை கழற்றி விடுதலை செய்ய வல்லன. யோக அப்யாசம் செய்யும் மாணவர்களுக்கு நடு நடுவில் ஏற்படும் சோர்வையும், சோம்பேறித் தனத்தையும் நீக்கிப்புத்துயிர்க் கொடுக்க வல்லன. நெருங்கிய உறவினர் போல வந்து சூழ்ந்திருக்கும் மனக்கவலையாகிய காட்டை, அழிக்க வல்லன. கந்தனின் கிருபையால் கிடைக்கும். உண்மைத் தவத்தின் பயனாய்க்கிட்டும் தேவானுக்கிரகம் என்னும் திரண்ட மெய் உணவு உருண்டையை வாரி முழுங்குவன. சிற்றின்ப ஆசையின் வல்லமையை அழிப்பன. பல விதமான மாயக்கோட்டைகளின் வல்லமையைத் தகர்க்க வல்லன. கோபம் கொண்ட செய்கைகள் நசியும் படி சிறந்த பொறுமை எனும் ஆற்றின் வெள்ளத்தை வாரி வீசுவன. ஈயாத கஞ்சத் தன்மை, காம மயக்கம் ஆகியவைகளை ஒழித்து எறிவன. அகம்பாவம் என்னும் தூணின் மூலத்தையே பறித்து எறிவன. மேல் எழும் முக்குணங்களின் கோட்டைச் சுவர்களை இடித்து, நிற்குண நிலைகளைக் கொடுப்பன. அளவிடுவதற்கு அரிய உண்மைப் பொருளாகிய மலரின் பூந்தாதுக்களை வீசி எறிவன. வலிமைமிக்க சிறகைக் கொண்ட மயிலை வாகனமாகச் செலுத்தி, சூரபத்மனுக்குக் காவலாக இருந்த ஏழு மலைகளையும் தாக்கி அழித்த வேல் கடவுள், பெரிய தடாகத்தில் அனுதினமும் நீலோற்பலம் பூக்கின்ற, தணிகாசலனின் திருப்புகழைப் பாடுகின்ற புலவர்களின் கூட்டம் இன்புறும்படி, அனைத்துப் பொருள்களையும் தருவன. மனம், வாக்கு, காயத்தின் சலனங்களை நீக்கி, ஸ்வானுபூதி நிலையின் சிகரமாக, விளங்கும் அற்புதமான மௌன நிலையாகிய, முக்குணங்களைத் கடந்த சொரூபமான சிவ மயமாய்த் திகழுகின்ற மங்களகரமான ஞானம் என்னும் களிற்றின் ஆற்றல்களே.

***



# 11. திருக்கையில் வழக்க வகுப்பு

## அறிமுகம்

இந்த நூல், தணிகேசரின் திருப்புகழை ஓதுபவர்களுக்கு, அந்தப் பெருமான் திருக்கையால் கிடைக்கும் அருள் பிரசாதத்தின் மகிமையை விஸ்தரிப்பது. இந்தப் பிரசாதம் சிவஞானமே. இதை ஞானக்களிற்றிற்கு உவமையாகக் கூறி இருக்கிறார்.

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

## மூலம்

1. தருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன
தடக்கரம் நிமிர்த்துயர் உடுக்குலம் உதிர்ப்பன,

2. தடித்தெழு குலப்புவி நடுக்குற அதிர்ப்பன
தழைச்செவி படைப்பன, திரட்கயிலை ஒப்பன,

3. சதுர்த்தச தலத்தையும் எடுத்தக டவுட்பணி
சகஸ்ர பணபத்தியும் ஒடுக்குற நடப்பன,

4. சமுத்ர மதனத்தில் அமுதத்துடன் உதிப்பன,
தரத்தன, தலைச்சுர, நதிப்புனல் குளிப்பன:

5. அருக்கர் பதம்உட்பட மிதித்திடு பதத்தன
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன:

6. அரக்கர்ப டைகெட்டுமு றியப்பொரு பதத்தன
அயற்கும் அமரர்க்கும்ஒ ருபொற்பதி யளிப்பன:

7. அளித்தவ முதுக்களவ மொக்குவன ; முத்தெறி
அலைக்கடல் கலக்குவ ; குலக்கிரி குலுக்குவ;

8. அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன;
அதிக்ரம கமப்ரவுட விக்ரம மதத்தன:

9. மருக்குலவு கற்பக வனத்தலர் பறிப்பன;
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன:

10. மதிப்பிள வெனச்செருகி வைத்தென மணிச்சதுர்
மருப்பின : இமைப்பற விழித்த நயனத்தன:

11. வளைத்த கிரியைப் பொடிபடுத்தி இபம்எட்டையும்
மலைத்தவண் அடிப்பட மடப்பிடி அணைப்பன:

12. மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன;
மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன;

13. திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை

14. செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலச் சரவணத் தறுமுகப்பொருள்

15. செகத்ரய முகிழ்த்த உதரத் திரிபுரைக்கொரு
திருப்புதல்வன் உற்பல கிரிப்பெயர் தரித்தருள்

**16. திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே;**

**(பாடல்) சொற்பிரிவு (11)**

1. தருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன,
தடக்கரம் நிமிர்த்து உயர் உடுக்குலம் உதிர்ப்பன

2. தடித்து எழுகுலப் புவி நடுக்கு உற அதிர்ப்பன
தழைச்செவி படைப்பன, திரட்கயிலை ஒப்பன,

3. சதுர்த்தச தலத்தையும் எடுத்த கடவுள் பணி
சகஸ்ர பணபத்தியும் ஒடுக்குற நடப்பன,

4. சமுத்ர மதனத்தில் அமுதத்துடன் உதிப்பன
தரத்தன தலைச்சுர, நதிப்புனல் குளிப்பன

5. அருக்கர் பதம் உட்பட மிதித்திடு பதத்தன
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன

6. அரக்கர் படை கெட்டு முறிய பொரு பதத்தன
அயற்கும் அமரர்க்கும் ஒரு பொற்பதி அளிப்பன

7. அளித்த அமுதுக்கவளம் மொக்குவன; முத்து எறி
அலைக்கடல் கலக்குவ குலக்கிரி குலுக்குவ

8. அடித்துஎழு பொருப்பினை நெருப்பு எழ விழிப்பன
அதிக்ரமம் கமம் ப்ரௌடம் விக்ரமம் மதத்தன

10. மருக்குலவு கற்பகவனத்து அலர் பறிப்பன
வளைத்தெழு தருக்களை மொளுக்கு என முறிப்பன

11. மதிப்பிளவு என செருகிவைத்தென மணிச்சதுர்
மருப்பின இமைப்பு அற விழித்த நயனத்தன

12. வளைத்த கிரியைப் பொடிபடுத்தி இபம் எட்டையும்
அலைத்து அவண் அடிப்பட மடப்பிடி அணைப்பன

13. மழை புயல் கிழிப்பன புனல் பசி தணிப்பன
மணி கணகனப்பண மதத்ரயம் விதிர்ப்பன

14. திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்து இனிது
இருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை

15. செகுப்பவன் நினைத்தவை முடித்து அருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலம் சரவணத்து அறு முகப்பொருள்

16. செகத்ரயம் முகிழ்த்த உதரம் திரிபுரைக்கு ஒரு
திருப்புதல்வன் உற்பல கிரிப்பெயர் தரித்து அருள்

17. **திருத்தணி மலைக்கு இறை திருப்புகழ் படிப்பவர்**
**சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.**

**பதவுரை :**

தருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன - இடித்துப் போர் புரியும் யுத்தகளம் பயத்தினால் நடுக்கும் படி முழக்கம் இடுவன (ஞானக்களிறு) தடக்கரம் நிமிர்த்துயர் உடுக்குலம் உதிர்ப்பன - பெரிய துதிக்கையை உயர்த்தி ஆகாயத்தில் உயரத்தில் உள்ள நட்சத்திரக் கூட்டங்கள் உதிரும்படி அடிப்பன (ஞானக்களிறு), தடித்து எழு குலப் புவி நடுக்கு உற அதிர்ப்பன - பெரிதாகிய சிறந்து ஏழு உலகங்களும் ஆட்டம் காணும் படி நடுங்கச் செய்வது, (ஞானக்களிறு) தழைச்செவி படைப்பன, திரட்கயிலை ஒப்பன - முறம் போன்ற தழைத்துப் பரந்துள்ள காதுகளைக் கொண்டன, திரட்சி மிக்க கயிலை மலை போல் நெருக்கமாக வெள்ளை நிறம் உடையன (ஞானக்களிறு) சதுர்த தச தலத்தையும் எடுத்த கடவுள் பணி சகஸ்ர பண பத்தியும் ஒடுக்குற நடப்பன - 14 உலகங்களையும் தன் முதுகில் சுமக்கும் தெய்வீகமான சர்ப்பம் ஆதிசேஷனின் 1000 பட வரிசைகளும் பயந்து நடுங்கும்படி உலா வருவன (ஞானக்களிறு) சமுத்ர மதனத்தில் அமுதத்துடன் உதிப்பன - திருப்பாற்கடல் கடைந்த போது அமுதத்துடன் சேர்ந்து தோன்றின (ஐராவதத்திற்கு ஒப்பிடுகிறார்) (ஞானக்களிறு) தரத்தன, தலைச்சுர, நதிப்புனல் குளிப்பன - சிரேஷ்டமானவை, நதிகளில் தலையாய ஆகாச கங்கையில் குளிப்பன, (ஞானக்களிறு) அருக்கர் பதம் உட்பட மிதித்திடு பதத்தன - சூரிய மண்டலம் முதல் எல்லா புவனங்களையும் மிதித்து சஞ்சரிக்கக் கூடிய கால்களை உடையன (ஞானக்களிறு) அறப்படு கொலைத் தொழில் புறப்படு முகத்தன - தர்ம தேவதை நடுங்கும் வகையில் கொலை உக்ரத்தை வெளிப்படுத்தும் முகத்தை உடையன, (ஞானக்களிறு) அரக்கர்படை கெட்டு முறியப் பொரு பதத்தன - அரக்கர் படை தோற்று

ஓடும்படி போர் புரியும் தகுதி உடையன, (ஞானக்களிறு) அயற்கும் அமரர்க்கும் ஒரு பொற்பதி அளிப்பன - அயனுக்கும் அமரர்களுக்கும் ஒப்பற்ற சத்ய லோகத்தையும் அமராவதியையும் கொடுத்து உதவி புரிவன, (ஞானக்களிறு) அளித்த அமுதுக் கவளம் மொக்குவன - தனக்கு அளிக்கப்பட்ட அமிர்த உணவுக் குவியலை வாரி மொக்குவன (ஞானக்களிறு) முத்தெறி அலைக்கடல் கலக்குவ - முத்துக்களை வாரி வீசும் அலை வீசும் சமுத்திரத்தைக் கலக்குவன (ஞானக்களிறு) குலக்கிரி குலுக்குவ - அஷ்ட் திக்கு மலைகளை ஆட்டி அசைப்பன (ஞானக்களிறு) அடித்து எழு பொருப்பினை நெருப்பு எழ விழிப்பன - சூரனுக்கு அரணாக இருந்த ஏழு மலைகளை (நிமிர்ந்து நிற்கும் மலைகளை) கண்களில் அனல் வீச முழித்துப் பார்ப்பன (ஞானக்களிறு) அதிக்ரம கம ப்ரவுட விக்ரம மதத்தன - அளவு கடந்த நிறைவான கம்பீரம் மிக்க வீரப்பெருமை உடையன (ஞானக்களிறு) மருக்குலவு கற்பக வனத்தலர் பறிப்பன - நறுமணம் வீசும் கற்பக வனத்தில் பூக்களைப் பறிப்பன (ஞானக்களிறு) வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன - நிமிர்ந்து நிற்கும் மரங்களின் கிளைகளை வளைத்து படார் என ஒடிப்பன (ஞானக்களிறு) மதிப்பிளவு எனச்செருகி வைத்தென மணிச்சதுர் மருப்பின - சந்திரனின் பிறை எனச் சொல்லும்படி அதை முகத்தில் சொருகி வைத்திருப்பது போல அழகிய நான்கு தந்தங்களை உடையன (ஞானக்களிறு) இமைப்பற விழித்த நயனத்தன - இமைகளைக் கொட்டாமல் விழித்திருக்கும் கண்களை உடையன, வளைத்த கிரியைப் பொடி படுத்தி இபம் எட்டையும் அலைத்து அவண் அடிப்பட மடப்பிடி அணைப்பன - பூமியை வளைத்திருக்கும் சக்ரவாளகிரியைத் தூள் செய்து அஷ்ட திக்கு கஜங்களை எதிர்த்து அவைகளை அங்கேயே கீழே தள்ளி விட்டு தன் பெண் யானையுடன் கூடி மகிழ்வன (ஞானக்களிறு) மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன - மழை மேகத்தைக் கிழித்து அதில் இருந்து சிந்தும் தண்ணீரைக் குடித்து தாகத்தைத் தணித்துக் கொள்வன (ஞானக்களிறு) மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன - தன் கழுத்தில் கட்டி இருக்கும் மணிகள் கண கண எனும் ஒலியை எழுப்ப கன்ன மதம், கை மதம், கோச மதம் முதலியவைகளைச் சொரிவன (ஞானக்களிறு) திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்து இனிது இருப்பவள் விருப்புறு வரைப்புயன் - உழுது சீர்படுத்தப்பட்ட தினைப்புனத்தினில் காட்டு மரங்களின் இலைகளை உடையாகச் கொண்டு (பெண் பார்க்கப் போகும் போது மாப்பிள்ளை புதுப்புடவை கொண்டு போவது போல் வள்ளி மலைக்கு தழைகளால் ஆன ஆடைகளைக் கொண்டு போகிறார் - கொய்த தழையே செல்லும் மழவா) சுக வாழ்வு அனுபவித்த வள்ளி நாயகி விரும்புகின்ற மலை போன்ற தோள்களை உடையவன்; வினைப்பகை செகுப்பவன், நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல், சிவத்த கமலச் சரவணத்து அறுமுகப்பொருள் - நம் பகைவர்களாகிய வினைகளை ஜெயித்து அழிப்பவன், நினைத்த காரியங்களை அனுகூலமே புரிபவன், சரவணப் பொய்கையில் செந்தாமரைப் படுக்கையில் உதித்த சண்முகத் தெய்வம்; செகத்ரய முகிழ்த்த உதரத் திரிபுரைக்கொரு திருப்புதல்வன் - மூவுலகங்களையும் ஈன்ற திருவயிறு உடைய பராசக்தியின் ஒப்பற்ற திருக்குமரன்; உற்பல கிரிப்பெயர் தரித்தருள் திருத்தணி மலைக்கிறை - நீலோற்பல மலை எனும் பெயரைத் தாங்கும் திருத்தணி மலைக்குத் தலைவனாகிய முருகக் கடவுளின், திருப்புகழ் படிப்பவர் சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே - திருப்புகழை ஓதுபவர்கள் விசேஷமாக அடைவது அப்பெருமானின் திருக்கையால் வழங்கப்படும் ப்ரசாதமே.

**பொழிப்புரை :**

இடித்துப்போர்புரியும் யுத்தகளம் பயத்தினால் அச்சம் கொள்ளுமாறு முழக்கம் இடுவன. பெரிய துதிக்கையை உயர்த்தி ஆகாயத்தின் உயரத்தில் உள்ள நக்ஷத்திரக் கூட்டங்கள் உதிர்ந்து விழும்படி தாக்க வல்லன. பெரிதாகிய சிறந்த ஏழு உலகங்களும் ஆட்டம் காணும் படி நடுங்கச் செய்வன. முறம் போன்று தழைத்துச் செழிப்புடன் பறந்துள்ள காதுகளைக் கொண்டன. பருத்த கயிலை மலை போல நெருக்கமாக வெள்ளை நிறம் உடையன. பதினான்கு உலகங்களையும் தன் முதுகில் சுமக்கின்ற தெய்வீக நாகமாகிய ஆதிசேடனது ஆயிரம் படங்களின் வரிசைகளும் பயந்து நடுங்கும்படி உலா வருவன. திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அமுதத்துடன் சேர்ந்து தோன்றின, மேலான தன்மையான சிவபிரான் தலைமீது விளங்கும் கங்கை நீரில் குளிப்பன. சூரிய மண்டலம் முதல் எல்லா புவனங்களையும் மிதிக்கவல்ல தரம் வாய்ந்த கால்களை உடையன. தர்ம தேவதை நடுங்கும் வகையில் பொல்லாத கொலைத்தொழில் உக்ரத்தை வெளிப்படுத்தும் முகத்தை உடையன. அசுரர் சேனை தோற்று ஓடும்படி போர் புரியும் தகுதி உடையன. பிரம்மனுக்கும், தேவர்களுக்கும் சத்திய லோகத்தையும், அமராவதியையும் கொடுத்து உதவி புரிவன. தனக்கு அளிக்கப்பட்ட அமிர்த உணவை வாரி வாய் நிறைய உண்பன. முத்துக்களை வாரி வீசும் அலைகளைக் கொண்ட கடலைக் கலக்குவன. அஷ்ட திக்கு மலைகளையும் ஆட்டி அசைப்பன. சூரனுக்கு அரணாக இருந்த ஏழு மலைகளையும் மோதி அடித்து கண்களில் நெருப்பு வீசும்படி முழித்துப் பார்ப்பன. அளவு கடந்த நிறைவான கம்பீரமிக்க பராக்கிரமத்தைக் கொண்ட பெருமை உடையன. நறுமணம் வீசும் கற்பக வனத்தில் பூக்களைப் பறிப்பன. நிமிர்ந்து நிற்கும் மரங்களின் கிளைகளை வளைத்துப்படார் என்று ஒடிப்பன. சந்திரனின் பிறை எனச் சொல்லும்படி அதை முகத்தில் சொருகி வைத்திருப்பது போல அழகிய நான்கு தந்தங்களை உடையன. இமைகளைக் கொட்டாமல் விழித்திருக்கும் கண்களை உடையன. பூமியை வளைத்திருக்கும் சக்ரவாளகிரியைத்தூள் செய்து அஷ்டதிக்கு கஜங்களை எதிர்த்து அவைகளை அங்கேயே கீழே தள்ளிவிட்டு தன் பெண் யானையுடன் கூடி மகிழ்வன. மழை மேகத்தைக்கிழித்து அதில் இருந்து சிந்தும் நீரைக்குடித்து தாகத்தைத் தணித்துக் கொள்வன. தன் கழுத்தில் கட்டி இருக்கும் மணிகள் கண கண என்று ஒலியை எழுப்ப கன்னமதம், கைமதம், கோசமதம் ஆகிய மும்மதங்களையும் சொரிவன. உழுது சீர்ப்படுத்தப்பட்ட தினைப்புனத்தினில் காட்டு மரங்களின் இலைகளை உடையாகக் கொண்டு சுகமாக வாழ்ந்திருப்பவளாகிய வள்ளி நாயகி விரும்புகின்ற மலை போன்ற தோள்களை உடையவன். நம் பகைவர்களாகிய வினைகளை ஜெயித்து அழிப்பவன், நினைத்த காரியங்களை முடித்து வைத்து அருள்பாலிக்கும் கருணைக்கடல், சிவந்த தாமரையில் சரவணப் பொய்கையில், ஆறு திருமுகங்களுடன் தோன்றிய தெய்வம். மூன்று உலகங்களையும் பெற்ற திரு வயிற்றை உடைய பராசக்தியின் ஒப்பற்ற குமாரன், நீலோற்பல மலை என்னும் பெயரைத் தாங்கும் திருத்தணி மலைக்குத் தலைவனாகிய முருகக்கடவுளின், திருப்புகழை ஓதுபவர்கள் சிறப்புடன் அடைவது அப்பெருமானின் திருக்கையால் வழங்கப்படும் ப்ரசாதம்-ஐராவதம் போன்ற மேலே கூறிய ஆற்றல்களை உடையன.

***

# 12. வேடிச்சி காவலன் வகுப்பு

### அறிமுகம்

இது வேடர் மகளாம் வள்ளியின் காதலராகிய முருகனின் பெருமையைக் கூறுகிறது.

தனதனன தத்ததன தனதனன தத்ததன
தனதனன தத்ததன தானந்த தானதன

### மூலம்

1. உதரகம லத்தினிடை முதியபுவ னத்ரயமும்
உகமுடிவில் வைக்கும்உமை யாள்பெற்ற பாலகனும்

2. உமிழ்திரை பரப்பிவரு வெகுமுக குலப்பழைய
உதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்

3. உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்கஅவர்
ஒருவரொரு வர்க்கவணொர் ஓர்புத்ரன் ஆனவனும்

4. உதயரவி வர்க்கநிகர் வனகிரண விர்த்தவிதம்
உடையசத பத்ரநவ பீடத்து வாழ்பவனும்

5. உறைசரவ ணக்கடவுள் மடுவிலடர் வஜ்ரதர
னுடையமத வெற்புலைய வேதித்த வீரியனும்

6. உரைபெற வகுத்தருணை நகரின்ஒரு பத்தனிடும்
ஒளிவளர் திருப்புகழ்ம தாணிக்கு பாகரனும்

7. உரககண சித்தகண கருடகண யக்ஷகணம்
உபநிடம் உரைத்தபடி பூசிக்கும் வானவனும்

8. ஒருவனும் மகிழ்ச்சிதரு குருபரனும் உத்தமனும்
உபயமுறும் அக்நிகர மீதிற்ப்ர பாகரனும்

9. அதிமதுர சித்ரகவி நிருபனும் அகத்தியனும்
அடிதொழு தமிழ்த்ரயவி நோதக் கலாதரனும்

10. அவரைபொரி யெட்பயறு துவரைஅவல் சர்க்கரையொ
டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்

11. அவுணர்படை கெட்டுமுது மகரசல வட்டமுடன்
அபயமிட விற்படைகொ டாயத்த மானவனும்

12. அருணையில் இடைக்கழியில் உரககிரி யிற்புவியில்
அழகிய செருத்தணியில் வாழ்கற்ப காடவியில்

13. அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதின் வாழ்வித்தவேதியனும்

14. அரிபிரம ருக்குமுதல் அரியபர மற்குயரும்
அருமறை முடிப்பையுப தேசித்த தேசிகனும்

15. அமலனும் எனக்கரசும் அதிகுணனும் நிர்க்குணனும்
அகிலபுவ னத்தமர சேனைக்கு நாயகனும்

16. அநுபவனும் அற்புதனும் அநுகுணனும் அக்ஷரனும்
அருமனம் ஒழிக்கும் அநு பூதிச் சுகோதயனும்

17. இதமகிதம் விட்டுருகி இரவுபக லற்றஇடம்
எனதற இருக்கைபுரி யோகப் புராதனனும்

18. எனதுமன சிற்பரம சுகமவுன கட்கமதை
யமன்முடி துணிக்கவிதி யாவைத்த பூபதியும்

19. எழுமையும் எனைத்தனது கழல்பரவு பத்தனென
இனிதுகவி யப்படிப்ர சாதித்த பாவலனும்

20. இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதயமு மணக்குமிரு பாதச் சரோருகனும்

21. எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரஅதி பாரப் புயாசலனும்

22. எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளிமுகி யைப்பொருத ராவுத்த னானவனும்

23. எழுபரி ரதத்திரவி எழுநிலமொ டக்கரிகள்
இடர்பட முழக்கியெழு சேவற் பதாகையனும்

24. இணையிலியும் நிர்ப்பயனும் மலமிலியும் நிஷ்களனும்
இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்

25. மதுகையொடு சக்ரகிரி முதுகுநெளி யப்புவியை
வளையவரும் விக்ரமக லாபச் சிகாவலனும்

26. வலியநிக ளத்தினொடு மறுகுசிறை பட்டொழிய
வனஜமுனி யைச்சிறிது கோபித்த காவலனும்

27. வருசுரர் மதிக்கஒரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்

28. வரதனும் அநுக்ரகனும் நிருதர்குல நிஷ்டுரனும்
மநுபவன சித்தனும நோதுக்க பேதனனும்

29. வயிரிசை முழக்கமிகு மழைதவழ் குறிச்சிதொறும்
மகிழ்குரவை யுட்டிரியும் வேடிக்கை வேடுவனும்

30. மரகதமணிப்பணியின் அணிதழை உடுத்துலவும்
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்

31. மதனன்விடு புட்பசர படலமுடல் அத்தனையும்
மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனனும்

31. **வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதனில்**
**மயிலென இருக்குமொரு வேடிச்சி காவலனே.**

**(பாடல்) சொற்பிரிவு (12)**

1. உதரம் கமலத்தினிடை முதிய புவனத்ரயமும்
உகமுடிவில் வைக்கும் உமையாள் பெற்ற பாலகனும்

2. உமிழ்திரை பரப்பிவரு வெகுமுக குலப்பழைய
உதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்

3. உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்கஅவர்
ஒருவர் ஒருவர்க்கு அவண் ஓரோர் புத்ரன் ஆனவனும்

4. உதயரவி வர்க்கம் நிகர் வனம் கிரணம் விர்த்தம் விதம்
உடைய சதபத்ரம் நவ பீடத்து வாழ்பவனும்

5. உறை சரவணக் கடவுள் மடுவில் அடர் வஜ்ரதரன்
உடைய மதவெற்பு உலைய வேதித்த வீரியனும்

6. உரைபெற வகுத்து அருணை நகரின் ஒரு பத்தன் இடும்
ஒளிவளர் திருப்புகழ் மதாணிக் கிருபாகரனும்

7. உரக கணம் சித்தகணம் கருடகணம் யக்ஷகணம்
உபநிடம் உரைத்தபடி பூசிக்கும் வானவனும்

8. ஒருவனும் மகிழ்ச்சிதரு குருபரனும் உத்தமனும்
உபயம் உறும் அக்நிகர மீதில் ப்ரபாகரனும்

9. அதிமதுர சித்ரகவி நிருபனும் அகத்தியனும்
அடிதொழு தமிழ்த்ரய விநோதக் கலாதரனும்

10. அவரை, பொரி, எள், பயறு, துவரை, அவல், சர்க்கரையொடு
அமுது செயும் விக்நபதி யானைச் சகோதரனும்

11. அவுணர் படை கெட்டு முது மகர சலவட்டம் உடன்
அபயமிட விற்படை கொடு ஆயுத்தம் ஆனவனும்

12. அருணையில் இடைக்கழியில் உரககிரியில் புவியில்
அழகிய செருத்தணியில் வாழ்கற்பகாடவியில்

13 அறிவும் அறிதத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறி என இமைப்பொழுதின் வாழ்வித்தவேதியனும்

14. அரி பிரமருக்கு முதல் அரிய பரமற்கு உயரும்
அருமறை முடிப்பை உப தேசித்த தேசிகனும்

15. அமலனும் எனக்கு அரசும் அதிகுணனும் நிர்குணனும்
அகில புவனத்து அமர சேனைக்கு நாயகனும்

16. அநுபவனும் அற்புதனும் அநுகுணனும், அக்ஷரனும்
அருமனம் ஒழிக்கும் அநு பூதிச் சுகோதயனும்

17. இதம் அகிதம் விட்டு உருகி, இரவு, பகல் அற்ற இடம்
எனது அற இருக்கை புரி யோகப் புராதனனும்

18. எனது மனதில் பரம சுகமௌனம் கட்கமதை
யமன்முடி துணிக்க விதியாக வைத்த பூபதியும்

19. எழுமையும் என்னைத் தனது கழல் பரவும் பத்தனென
இனிது கவி அப்படி ப்ரசாதித்த பாவலனும்

20. இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பும் எனது
இதயமும் மணக்கும் இருபாதச் சரோருகனும்

21. எழுதரிய கற்பதரு நிழலில் வளர்தத்தை தழு
விய கடகம் வஜ்ரம் அதி பாரப் புய அசலனும்

22. எதிரில் புலவர்க்கு உதவும் வெளிமுகடு முட்ட வளர்
இவுளிமுகியைப் பொருத ராவுத்தன் ஆனவனும்

23. எழுபரி ரதம் இரவி எழு நிலமொடு அக்கரிகள்
இடர்பட முழக்கி எழு சேவற் பதாகையனும்

24. இணையிலியும் நிர்ப்பயனும் மனமிலியும் நிஷ்களனும்
இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்

25. மதுகையொடு சக்ரகிரி முதுகு நெளியப் புவியை
வளையவரும் விக்ரம கலாபச் சிகாவலனும்

26. வலிய நிகளத்தினொடு மறுகு சிறைபட்டொழிய
வனஜ முனியைச் சிறிது கோபித்த காவலனும்

27. வருசூரர் மதிக்க குருகுபெயர் பெற்ற
கனவடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்

28. வரதனும் அநுக்ரகனும் நிருதர்குல நிஷ்டுரனும்
மநு பவனம் சித்தனும் மநோ துக்கபேதனனும்

29. வயிர் இசை முழக்கம் மிகுமழை தவழ் குறிச்சிதொறும்
மகிழ் குரவையுள் திரியும் வேடிக்கை வேடுவனும்

30. மரகதமணிப் பணியின் அணிதழை உடுத்து உலவும்
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்

31. மதனன் விடு புட்பசர படலம் உடல் அத்தனையும்
மடல் எழுதி நிற்கும் அதிமோகத் தபோதனனும்

32. **வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்து இதனில்**
**மயில் என இருக்கும் ஒரு வேடிச்சி காவலனே**

**பதவுரை :**

உதர கமலத்தினிடை முதிய புவனத்ரயமும் உக முடிவில் வைக்கும் உமையாள் பெற்ற பாலகனும் - திருவயிறாகிய தாமரை மலரிடத்தில் பழமையான மூவுலகங்களையும் யுகம் முடிந்து பிரளயம் வரும் போது அடக்கி வைத்துக் காப்பாற்றும் பார்வதி பெற்ற பாலகனும், (வேடிச்சி காவலனே) உமிழ்திரை பரப்பி வரு வெகு முக குலப்பழைய உதக மகள் பக்கல் வரு சோதிச் சடானனனும் - அலை எறிந்து நீர் பரப்பி வரும் பல கிளைகளாகப் பாய்வதுமாகிய சிரேஷ்டமான பழைய ஜலமாது கங்கையின் மடியில் அவதரித்த ஒளி வீசும் ஷண்முகனும், (வேடிச்சி காவலனே) ''குலத்தில் கங்கை சிறியோனே'', உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவர் ஒருவர் ஒருவர்க்கு அவண் ஓர் ஓர்புத்ரன் ஆனவனும் - கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரும் ஒரு உருவமாக இருந்த காங்கேயனுக்கு பால் ஊட்ட நினைத்த போது அந்த மாதர்கள் ஒவ்வொருவருக்கும் அந்த இடத்திலே ஒரோர் புத்திரன் ஆனவனும் (வேடிச்சி காவலனே) - (ஆறு பேரும் மகிழ ஆறு புத்திரன் ஆனவனும்) - உதய ரவி வர்க்க நிகர் வனகிரண விர்த்தவிதம் உடைய சத பத்ர நவ பீடத்து வாழ்பவனும் - உதிக்கும் சூரிய கூட்டம் போன்றதும், அழகிய ஒளி வீசுகின்றதும், வேறு வேறு வித்தியாசமான நிறங்களைக் கொண்டதுமான மயிலாகிய புதுமையான ஆசனத்தில் வீற்றிருப்பவனும் (வேடிச்சி காவலனே) உறை சரவணக்கடவுள் மடுவில் அடர் வஜ்ரதரனுடைய மத வெற்பு அலைய வேதித்த வீரியனும்

- கங்கையில் உள்ள சரவணப் பொய்கையில் மலர்ந்த கடவுளாகிய முருகனை, அவன் சிவபெருமானின் குமாரன் என புரிந்து கொள்ளாமல் போர் செய்ய வந்த வஜ்ராயுத தேவனான இந்திரனின் மலை போன்ற வலிமை மிக்க ஐராவதம் அடிபட்டு அழியும்படி புடைத்த வீரனும் (வேடிச்சி காவலனே) - உரை பெற வகுத்த அருணை நகரின் ஒரு பத்தன் இடும் ஒளி வளர் திருப்புகழ் மதாணி க்ருபாகரனும் - முருகப்பெருமானின் கீர்த்தி பிரசித்தியாய் விளங்கும் பொருட்டு, சீர்பாதச் சிறப்பு, அவனின் வேலாயுத மகிமை முதலியவற்றை வரைபடுத்தி, திருவண்ணாமலையில் வாழும் ஒரு பத்தனான அடியேன் இயற்றி அணிவித்த பெருமை ஒளி வளர்கின்ற திருப்புகழ் ஆகியவற்றை சொல்மாலைகளின் நடுவே பதக்கமாக ஏற்றுக் கொண்ட கருணாமூர்த்தியும் (வேடிச்சி காவலனே) (நான் எனக் கூறாமல் ஒரு பத்தன் என படர்க்கையில், கிளி ரூபம் பெற்றபின் இவ்வகுப்பை அருணகிரியார் பாடினார் என்பது சிலரின் கருத்து).

உரககண சித்தகண கருடகண யக்ஷகணம் உபநிடம் உரைத்தபடி பூசிக்கும் வானவனும் - பதிணெண் கணத்தைச் சேர்ந்த நாக கணங்கள் (நாகலோக ஈரேழு பாருக்கும் உரியோனே) அஷ்ட மா சித்திகளில் வல்லவர்களான சித்தர் கூட்டங்கள், (அகிலம் புகழும் சிவானந்த அமிர்தம் புசிக்கும் சித்தர்கள்) அஷ்டாங்கத்தால் நாத வடிவான யோக சித்தர்கள், உகிரால் ஊன்றி பருபதத்தை உயரத் தூக்கும் சித்தர்கள், ஒற்றைக் கல்லைப்பரிசுத்த உயர் பொன்னாக்கும் சித்தர்கள், ஜெகதல அண்டங்களை தமது அகத்தே தரிசிக்கும் சித்தர்கள், திரி காலம் கண்டு அனிமாதி செய்யும் சித்தர்கள்), கருடர்கள் (திருமாலின் வாகனமான கருடனைத் தவிர பல கருடர்கள் உண்டு என்பதை பாரதமும் கூறுகிறது), குபேரன் முதலிய இயக்கர் கூட்டம் (படைத்த பிரம்மனையே பட்சிக்க வேண்டும் என்பவர்கள் அரக்கர்கள். ரட்சிக்க வேண்டும் என்பவர்கள் யக்ஷர்கள்) அவர்கள் அனைவரும் கூடி உபநிடத்தில் சொல்லிய படி தகர வித்தையால் பூஜிக்கப்படும் தேவாதி தேவனும் (வேடிச்சி காவலனே) - ஒருவனும் மகிழ்ச்சி தரு குருபரனும் உத்தமனும் உபயமுறும் அக்நி கரமீதில் ப்ரபாகரனும் - ஒப்பற்ற பிரம்மப் பொருளும் (அவரே பரப்பிரம்மம்) தன்னையே உபாசனை செய்யும் அடியார்களைப் பேரின்ப மகிழ்ச்சிக் கடலில் வைத்திருக்கும் குருமூர்த்தியும் (தத்திக் கரை புரளும் பரமானந்த சாகரத்தே தித்திக்கும் அமுது கண்டேன்), மிக சிரேஷ்டனும் (தந்தை - நொடித்தான் மலை உத்தமன், தாய் - இமவான் மடந்தை உத்தமி, ஆகையால் மைந்தனும், உத்தமனாய் விளங்குவதில் வியப்பு ஒன்றும் இல்லை) தீ கடவுளின் இருகரங்களாலும் தாங்கப்பட்ட (அஜத்து உருமிக்கும் மெய்யோன் கையில் சேர்ந்த செய்யோன்) பேரொளி வீசும் சொரூபமுடையவனும்(வேடிச்சி காவலனே), அதிமதுர சித்ரகவி நிருபனும் அகத்தியனும் அடிதொழு தமிழ் த்ரய விநோதக் கலாதரனும் - மிகவும் இனிமை மிக்க எழுக்கூற்றிருக்கை, ஏகபாதம், மாலைமாற்று முதலிய சித்ர கவிகளை ஞானசம்பந்தர் அவதாரத்தில் பாடி அருளிய கவிராஜனும், (அதிக வித சாமர்த்திய கவிராஜனே - தன்னுடைய பாட்டுக்கள் மூலம் எலும்பை பெண்ணாக்கியது, பாம்பு கடியால் மாண்டவனை மீட்டது, ஆண் பனையைப் பழம் ஈயச் செய்தது, மதுரையில் அனல் புனல் வாதம் செய்தது முதலிய அமானுஷ செயல்களைச் செய்ததை சித்ரகவி நிருபன் என்பதை குறிக்கும்) தமிழுக்குத் தந்தையாகிய அகத்திய மாமுனியே வணங்கும் முத்தமிழ் விநோதனாகிய சகலகலா வல்லவனும் (வேடிச்சி காவலனே) - அவரை பொரி எள் பயறு துவரை அவல் சர்க்கரையொடு அமுதுசெயும் விக்நபதி

யானைச் சகோதரனும் - சர்க்கரையோடு அவரை முதலியவைகளை உணவாக உட்கொள்ளும் விக்ன விநாயகரின் தம்பியும் (வேடிச்சி காவலனே) - அவுணர் படை கெட்டு முது மகரசல வட்டமுடன் அபயம் இட வில் படைகொடு ஆயத்தமானவனும் - அரக்கர்கள் அனைவரையும் அழித்து, பழமை மீன்கள், நிறைந்த கடல் அடைக்கலம் எனக் கதற (வாரி கோ கோ என வாய் விட), வில் ஏந்தி போருக்குத்தயாராக நின்றவனும் (வேடிச்சி காவலனே) - அருணையில், இடைக்கழியில், உரககிரியில் புவியில் அழகிய செருத்தணியில் வாழ்கற்ப காடவியில் - திருவண்ணாமலையில், திருவிடைக்கழியில், திருச்செங்கோட்டில், பூமியின் அழகிய தலமான திருத்தணியில் (புவிக்கு உயிராகும் திருத்தணி), தன்னால் புது வாழ்வு கொடுக்கப்பட்ட கற்பக வனங்கள் மிக்க தேவலோகத்தில் (அருணகிரிநாதர் கிளி ரூபத்தில் பாரிஜாத மலருக்காக அமராவதி நகருக்குப் போய் வந்தார் எனும் செவிவழி செய்திக்கு இவ்வடிகள் பலமூட்டுகிறது), அறிவும், அறி தத்துவமும், அபரிமித வித்தைகளும் அறி என, இமைப்பொழுதின் வாழ்வித்த வேதியனும் - உலகப் பொருளை அறிய வைக்கும் சுட்டறிவையும், அந்த அறிவு எப்படி உருவாகிறது என்பதை விளங்க வைக்கும் மெய்யறிவையும் (அறிவை அறிவது பொருளென அருளிய பெருமானே) அறிவு ஒன்றற நின்று பிரிவு ஒன்றற நின்ற பிரான், கணக்கற்ற கலைகளையும் அற்புத சித்திகளையும், தெரிந்து கொள் எனச்சொல்லி, ஒரு நொடியில் உபதேசித்து, எனக்கு மரணமில்லா பெருவாழ்வை அருளிய அந்தணனும் (வள்ளியை வலிய சென்று நீ ஆட் கொண்டதின் கருத்து யாது என வினவிய ஈசனுக்கும் நொடிப் பொழுதில் முருகன் உபதேசம் செய்தார் - வள்ளி சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க வல்லைக்குள் ஏற்றும் இளையோனே) அமலனும் எனக்கு அரசும் அதிகுணனும் நிர்க்குணலும் - நாராயணனுக்கும், நான்முகனாகிய பிரமனுக்கும் முதல்வரும் அவர்களால் அறிய முடியாதவராய் விளங்கிய சிவபெருமானுக்கு, உயரும் அருமறை முடிப்பை உபதேசித்த தேசிகனும் - உயர்ந்த உணர அரிதான வேத முடிவை உணர்த்திய குருமூர்த்தியும் (வேடிச்சி காவலனே) (நெறி பல கொண்ட வேத நன் முடியினும் மருவிய குருநாதா) ஆசா பாச அழுக்கற்றவனும், எனது தலைவனும், மேலான குண சீலனும், அதே சமயத்தில் ராஜஸ, தாமஸ, சாத்வீக குணங்களைக் கடந்தவனும் (போத நிர்குண போதா நமோ நம அகிலபுவனத்து அமர சேனைக்கு நாயகனும் - அனைத்துப் ப்ரபஞ்சங்களுக்கும் தேவ சைன்யங்களுக்கும் தலைவனும் (வேடிச்சி காவலனே) - அநுபவனும் அற்புதனும் அநுகுணனும் அக்ஷரனும் அருமனம் ஒழிக்கும் அநுபூதிச் சுகோதயனும் - உலகில் அனைத்து ஜீவராசிகளும் உணரும் இன்ப துன்பங்களுக்கு மூலகாரணமாக இருப்பவனும், வியக்கத்தக்க மூர்த்தியும் (சித்ர முகம் ஆறும் முத்து மணி மார்பும் திக்கினில் இலாத பெருமாள் காண்), எல்லா இயக்கங்களுக்கும் துணையாக நிற்பவனும் (அவனன்றி ஒரு அணுவும் அசையாது), நாசம் அற்றவனும் அழிவில்லாதவனும் (க்ஷரம் - அழிவு), அருமையான மனத்தின் சலனங்களை ஒடுக்கி தன்மயமாய் நிற்கும் அநுபவ ஞானத்தில் கிடைக்கப் பெறும் ஆனந்த வஸ்துவும் (வேடிச்சி காவலனே) (உள்ளப் பேறாக நின்று தொய்யப்படாமல் என்று உள்ளத்தின் மாய்வது ஒன்றை மொழியாயோ - வள்ளிமலைத்திருப்புகழ்).

இதம் அகிதம் விட்டு உருகி இரவுபகல் அற்ற இடம் எனதற இருக்கை புரியோகப் புராதனனும் - இன்ப துன்பங்களில் இருந்து நீங்கி (துன்பம் இன்பம் கழித்து ஒடுகின்றது எக்காலம்)

இறைவன் ஆட்கொண்ட கருணைத்திறனை நினைத்து நினைத்து அழுது மறதி நினைப்பு இவை கடந்த பரவெளியை (கருதா மறவா நெறி இதுவே) (இரவு பகல் இல்லா இன்பப் பெரு வெளியூடே விரவி விரவி நின்று உந்தீபற) மமகாரம் அற்றுப் போக (எனது எனும் மலம் அறில்) என்னுடைய இருப்பிடமாக அருளிக் கொடுத்த சிவ யோக பழையவனும் (வேடிச்சி காவலனே) எனது மன சிற்பரம சுக மவுன கட்கமதை யமன்முடி துணிக்க விதியா வைத்த பூபதியும் - எனது உள்ளத்தில் எமனுடை சிரத்தை அறுக்கவல்ல பாக்ய வஸ்துவான நிஷ்சல இன்பம் நல்கும் மவுனம் எனும் வாளை கொடுத்து அருளிய மன்னனும் (வேடிச்சி காவலனே) மவுன வாளால் எம துணைவரை வெல்லும் திறனை முன்பு திருப்புகழில் வேண்டினார் - எமபடரை மோது மோன உரையில் உபதேச வாளை எனது பகை தீர நீயும் அருள்வாயே - 'ஒருவழி படாது' திருப்புகழ். முருகன் சும்மா இரு சொல்லற என்று உபதேசித்ததும் மோன நிலை கிட்டியது. இந்த வாளை வைத்திருக்கும் தைரியத்தால் எமனுக்கே சவால் விடுகிறார். '(செந்தில் வேலனுக்குத் தொண்டாகிய என் அவிரோத ஞானச் சுடர்வாள் கண்டாயடா அந்தகா வந்து பார் சற்று என் கைக்கு எட்டவே'. இதற்கு முன் இந்த வாளை சிவபெருமானுக்குக் கொடுத்தார் என்கிறார். தந்தைக்கு முன்னம் தனி ஞான வாள் ஒன்று சாதித்தருள் கந்தசாமி இந்த வாளை சிவனார் தரித்துள்ளார் என்பதை மாணிக்கவாசகரும் கூறுகிறார் (ஞான வாள் ஏந்தும் ஐயர்).

எழுமையும் எனை தனது கழல் பரவு பத்தன் என இனிது கவி அப்படி ப்ரசாதித்த பாவலனும் - ஊர்வன முதல் தாவரம் முதலான ஏழுவகை பிறப்பிலும் என்னைத் தனது திருவடிகளைத் துதிக்கும் அடியவன் என ஏற்றுக்கொண்டு, இனிமையான முறையில் பாடல்களைப் பாடும் திறனை அற்புதமான வகையில் தந்தருளிய கவி ராஜனும் (வேடிச்சி காவலனே) (திருவண்ணாமலையில் ஆறெழுத்தைப் பொறித்து நான் எப்படிப் பாடுவேன் என மலைப்புடன் அருணகிரியார் சொல்ல முருகன் அடி எடுத்துக் கொடுத்துக் கவிபாடும் திறனை அருளியதை இவ்வரிகள் குறிக்கின்றன).

இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பும் எனது இதயமும் மணக்கும் இரு பாதச் சரோருகனும் - தேவர்களின் சிரங்களின் கூட்டத்திலும் (உயர் அமரர் மணி முடியில் உறைவதுவும்) வேடர்களின் வள்ளி மலையிலும் (எயினர் இடும் இதண் அதனில் சிறுமி வளர் புனமீது உலாவுவதும்) எனது உள்ளத்திலும் நறுமணம் கமழும் இரு பாத தாமரைகளைக் கொண்டவனும் (வேடிச்சிகாவலனே) எழுத அரிய கற்பதரு நிழலில்வளர் தத்தை தழுவிய கடக வஜ்ர அதிபாரப் புயாசலனும் - எழுதுவதற்கு முடியாத அழகுடையவளும் (பழுதொணாத பாவாணர் எழுதொணாத தோள் வீர) கற்பக நிழலிலே வளர்ந்தவளுமான தேவசேனையைத் தழுவியதும் வீரவாளை அணிந்துள்ளதும் வைரம் போன்ற வலிமை கொண்டதுமான, கனத்த தோள் வலிமை கொண்டவனும் (வேடிச்சிகாவலனே) எதிர் இல் புலவர்க்கு உதவு வெளி முகடு முட்ட வளர் இவுளி முகியைப் பொருத ராவுத்தன் ஆனவனும் - தனக்கு சமானமில்லாத பெரும் புலவர் நக்கீரருக்கு உதவும் பொருட்டு, ஆகாச உச்சியைத் தொடும் அளவிற்கு வளர்ந்திருந்த 'கற்கிமுகி' எனும் பூதத்துடன் யுத்தம்செய்த போர் வீரனும் (வேடிச்சிகாவலனே) எழு பரி ரதத்து இரவி எழு நிலமொடு அக்கரிகள் இடர் பட முழக்கி எழு சேவற் பதாகையனும் - ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் உலாவும் சூரியன் வியாபித்து வரும் ஏழு புவனங்களும்,

அந்த எட்டு திக்கு யானைகளும், வேதனை அடையும்படி கூக்குரலிட்டு எழும் சேவல் கொடியைக் கொண்டவனும் (வேடிச்சி காவலனே), இணையிலியும் நிர்ப்பயனும் மலமிலியும் நிஷ்களனும் இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும் - தனக்கு நிகரில்லாதவனும் (துணிகையில் இணையிலி) பயம் என்பதையே அறியாதவனும், (நிஷ்டுர, நிராகுல, நிர்பயனே), மும்மலங்கள் அற்றவனும் (அநகா), சொரூபத்தில் உருவமற்றவனும், என்றும் இளமையாக உள்ளவனும், மறையோர்கள் செய்யும் யாகத்திற்கு நாயகனும், (அந்தண் மறை வேள்வி காவற்கார) (வேடிச்சி காவலனே) மதுகையொடு சக்ரகிரி முதுகு நெளியப் புவியை வளையவரும் விக்ரம கலாபச் சிகாவலனும் - வலிமையுடன் சக்ரவாள கிரியின் பக்கவாட்டங்களை தளர்த்து அசையும் படி பூமியைச் சுற்றி வந்த பராக்ரமம் பொருந்திய தோகை மயில் வாகனும் (வேடிச்சி காவலனே) வலிய நிகளத்தினொடு மறுகு சிறை பட்டு ஒழிய வனஜ முனியைச் சிறிது கோபித்த காவலனும் - பலம் மிக்க விலங்குடன் மனம் கலங்கி சிறையில் பிடிபட்டு துன்பப்படும் படி தாமரை மலரோன் பிரம்மனை சற்றே சினத்த தலைவனும் (வேடிச்சி காவலனே) (வனஜ ஜாதனை அன்று முனிந்தற வலிய பார விலங்கிடு புங்கவன்), வருசுரர் மதிக்க ஒரு குருகு பெயர் பெற்ற கன வடசிகரி பட்டுருவ வேல் தொட்ட சேவகனும் - யுத்தகளத்திற்கு வந்த தேவர்கள் போற்ற, ஒப்பற்ற கிரவுஞ்ச பக்ஷியின் பெயரைத் தாங்குவதும் வடதிசையில் பொன்மயமாக இருந்ததுமான மலை தொளைக்கும்படி வேலாயுதத்தைப் பிரயோகம் செய்த வீரனும் (வேடிச்சி காவலனே) வரதனும் அநுக்ரகனும் நிருதர்குல நிஷ்டுரனும் மநுபவன சித்தனும நோதுக்க பேதனனும் - வரம் கொடுப்பவனும் (வரதாமணி நீ) அருள் பாலிப்பவனும் (நிதிகா நமக்குறுதி அவரே) அசுரர் குலத்தை அழித்தவனும் (மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே) மந்திரங்களுக்கு இருப்பிடமான சித்த மூர்த்தியும் (வேத மந்திர சொரூபா, வேலைத் துளைத்து வரை ஏழைப்பிளந்து வரு சித்தா, சித்தர் மகனே, விராலி சித்ர மலை மேல் உலாவு சித்தா) மனக்கவலைகளை பிளந்து மாற்றுபவனும் (மனத்துயர் கெடுத்து எனை வளர்த்தருள் கிருபைக்கடல்) (வேடிச்சிகாவலனே) வயிரிசை முழக்க மிகு மழை தவழ் குறிச்சிதொறும் மகிழ் குரவையுள் திரியும் வேடிக்கை வேடுவனும் - ஊது கொம்புகளின் ஒலி நிறைந்துள்ளதும் சாரல் படிந்ததுமான மலை நிலங்களில் களிப்புடன் கொண்டாடப்படும் குரவைக் கூட்டங்களில் கலந்து கொண்டு அருள்புரியும் வேடிக்கை வேடுவனும் (வேடிச்சி காவலனே) மரகத மணிப்பணியின் அணிதழை உடுத்து உலவும் வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும் - பச்சை மணி போன்ற ஆபரணங்களுடன் அழகிய இலைகளை ஆடையாக உடுத்தி உலாவுகின்ற வேடுவச் சிறுமியாகிய என்னை 'மணம் செய்து கொள்' என்று விடாமல் யாசித்துக் கொண்டிருப்பவனும் (வேடிச்சி காவலனே) மதனன் விடு புட்ப சர படலம் உடல் அத்தனையும் மடல் எழுதி நிற்கும் அதி மோகத் தபோதனனும் - மன்மதன் செலுத்திய மலர் பாணங்களின் தொகுதி தனது உடல் முழுதும் பாய்ந்து புண்படுத்தி இருக்கும் நிலையை படத்தில் வரைந்து காட்டும் அதிக தெய்வீகக் காதல் மிக்க தவசீலனும் (வேடிச்சி காவலனே) வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதணின் மயில் என இருக்கும் ஒரு வேடிச்சி காவலனே - வரிந்து கட்டப்பட்ட வில் உடைய வேடுவர்கள் பூஜை போட்டு வழிபடும் தினை புனத்து பரண் மீதில் மயில் போன்ற கவர்ச்சியுடன் அழகுடன் அமர்ந்திருக்கும் (மான் தரு கான மயில்) ஒப்பற்ற வள்ளி

நாச்சியாருக்கு பொழுது போக்குபவனாய் காவல் காத்த அந்த ஷண்முக தெய்வம்தான் (வேடிச்சி காவலனே).

**பொழிப்புரை :**

திருவயிறாகிய தாமரை மலரிடத்தில் பழைமையான மூவுலகங்களையும் யுகம் முடிந்து, பிரளயம் வரும் போது அடக்கி வைத்துக் காப்பாற்றும் பார்வதி பெற்ற பாலகனும், அலை எறிந்து நீர் பரப்பி வரும் பல கிளைகளாகப் பாய்வதுமாகிய சிரேஷ்டமான பழைய ஜலமாது கங்கையின் மடியில் அவதரித்த ஒளி வீசும் சண்முகனும், மனமகிழ்ச்சியுடன், கிர்த்திகை மாதர் ஆறு பேரும், ஒரு உருவமாக இருந்த காங்கேயனுக்கு பால் ஊட்ட நினைத்த பொழுது, அந்த மாதர்கள் ஒவ்வொருவருக்கும், அந்த இடத்தில் ஒரோர் புத்திரன் ஆனவனும், உதிக்கும் சூரிய கூட்டம் போன்றதும், அழகிய ஒளி வீசுகின்றதும், வேறு வேறு வித்யாசமான நிறங்களைக் கொண்டதுமான மயிலாகிய புதுமையான ஆசனத்தில் வீற்றிருப்பவனும், கங்கையில் உள்ள சரவணப் பொய்கையில் மலர்ந்த கடவுளாகிய முருகனை, 'சிவபெருமான் குமாரன்' என புரிந்து கொள்ளாமல், போர் செய்ய வந்த வஜ்ராயுத தேவனான இந்திரனின் மலை போன்ற வலிமை மிக்க ஐராவதம் அடிபட்டு அழியும்படி புடைத்த வீரனும், முருகப்பெருமானின் கீர்த்தி பிரசித்தியாய் விளங்கும் பொருட்டு, சீர்பாதச் சிறப்பு, அவனின் வேலாயுத மகிமை, முதலியவற்றை வரைபடுத்தி, திருவண்ணாமலையில் வாழும் ஒரு பக்தனான அடியேன் இயற்றி அணிவித்த பெருமை ஒளி வளர்கின்ற திருப்புகழ் ஆகியவற்றை சொல் மாலைகளின் நடுவே பதக்கமாக ஏற்றுக் கொண்ட கருணாமூர்த்தியும், நாகலோக கணத்தவரொடு சித்தர் கூட்டமும், ஒப்பற்ற பிரம்மப் பொருளும் தன்னையே உபாசனை செய்யும் அடியார்களை பேரின்ப மகிழ்ச்சிக் கடலில் வைத்திருக்கும் குருமூர்த்தியும், உத்தம மூர்த்தியும், தீ கடவுளின் இருகரங்களிலும் தாங்கப்பட்ட பேரொளி வீசும் சொரூபமுடையவனும், மிகவும் இனிமை மிக்க எழுகூற்றிருக்கை, ஏகபாதம், மாலைமாற்று முதலிய சித்ர கவிகளை ஞானசம்பந்தர் அவதாரத்தில் பாடி அருளிய கவிராஜனும், தமிழுக்குத் தந்தையாகிய, அகத்தியமாமுனியே வணங்கும், முத்தமிழ் விநோதனாகிய சகலகலா வல்லவனும், சர்க்கரையோடு அவல் முதலியவைகளை உணவாகக் உட்கொள்ளும், விக்ன விநாயகரின் தம்பியும், அரக்கர்கள் அனைவரையும் அழித்து பழைமை மீன்கள் நிறைந்த கடல் அடைக்கலம் எனக்கதற வில் ஏந்தி போருக்குத் தயாராக நின்றவனும், திருவண்ணாமலையில், திருவிடைக்கழியில், திருச்செங்கோட்டில், பூமியின் அழகிய தலமான திருத்தணியில், தன்னால் புது வாழ்வு கொடுக்கப்பட்ட கற்பக வனங்கள் மிக்க தேவலோகத்தில், உலகப் பொருளை அறிய வைக்கும் சுட்டறிவையும், அந்த அறிவு எப்படி உருவாகிறது என்பதை விளக்க வைக்கும் ஞானத்தையும், எல்லையில்லாத கலைகளையும், அற்புத சித்திகளையும், ஒரு நொடியில் உபதேசித்து எனக்கு மரணமிலா பெருவாழ்வை அருளிய அந்தணனும், நாராயணருக்கும், நான்முகனாகிய பிரமனுக்கும் உயர்ந்த, உணர அரிதான வேதங்களின் மறை பொருளை சிவனுக்கு உபதேசம் செய்த குருமூர்த்தியும், அனைத்து ப்ரபஞ்சங்களுக்கும், தேவ சைன்யங்களுக்கும் தலைவனும், உலகில் அனைத்து ஜீவராசிகளும் உணரும் இன்ப துன்பங்களுக்கு மூலகாரணமாக இருப்பவனும், வியக்கத்தக்க மூர்த்தியும், எல்லா இயக்கங்களுக்கும் துணையாக நிற்பவனும், நாசம் அற்றவனும்,

அழிவில்லாதவனும், அருமையான மனத்தின் சலனங்களை ஒடுக்கி தன் மயமாய் நிற்கும் அநுபவ ஞானத்தில் கிடைக்கப்பெறும் ஆனந்தவஸ்துவும், இன்பதுன்பங்களில் இருந்து நீங்கி, இறைவன் ஆட்கொண்ட கருணைத்திறனை நினைத்து நினைத்து அழுது, மறதி நினைப்பு இவை கடந்த பரவெளியை மமாகரம் நீங்க நிலையிடமாக எனக்கு அருளின சிவயோக முன்னவனும், எனது உள்ளத்தில் எமனுடைய சிரத்தை அறுக்கவல்ல பாக்யவஸ்துவான நிஷ்சல இன்பம் நல்கும் மவுனம் எனும் வாளைக்கொடுத்து அருளிய மன்னனும், ஊர்வன முதல் தாவரம் முதலான ஏழுவகை பிறப்பிலும் என்னைத் தனது திருவடிகளைப் துதிக்கும் அடியவன் என ஏற்றுக்கொண்டு இனிமையான முறையில் பாடல்களைப் பாடும் திறனை அற்புதமான வகையில் தந்தருளிய கவிராஜனும், தேவர்களின் சிரங்களின் கூட்டத்திலும், வேடர்களின் வள்ளி மலையிலும், எனது உள்ளத்திலும் நறுமணம் கமழும் இருபாத தாமரைகளைக் கொண்டவனும், எழுதுவதற்கு முடியாத அழகுடையவரும், கற்பக நிழலிலே வளர்ந்தவளுமான தேவசேனையைத் தழுவியதும் வீரவாளை அணிந்துள்ளதும், வைரம் போன்ற வலிமை கொண்டதுமான கனத்த தோள் வலிமை கொண்டவனும், தனக்குச் சமானமில்லாத பெரும் புலவர் நக்கீரருக்கு உதவும் பொருட்டு, ஆகாச உச்சியைத் தொடும் அளவிற்கு வளர்ந்திருந்த கற்கிமுகி என்ற பூதத்துடன் யுத்தம் செய்த போர் வீரனும், ஏழுகுதிரைகள் பூட்டிய தேரில் உலாவும் சூரியன் வியாபித்து வரும் ஏழு புவனங்களும், எட்டு திக்கு யானைகளும் வேதனை அடையும் படி கூக்குரலிட்டு எழும் சேவல் கொடியைக் கொண்டவனும், தனக்கு நிகரில்லாதவனும், பயம் என்பதையே அறியாதவனும், மும்மலங்கள் அற்றவனும், சொரூபத்தில் உருவமற்றவனும், என்றும் இளமையாக உள்ளவனும் மறையோர்கள் செய்யும் யாகத்திற்கு நாயகனும், வலிமையுடன் சக்ரவாள கிரியையின் பக்க வாட்டங்களைத் தளர்ந்து அசையும்படி பூமியைச்சுற்றி வந்த பராக்ரமம் பொருந்திய தோகை மயில் வாகனனும், பலம் மிக்க விலங்குடன் மனம் கலங்கி சிறையில் பிடிபட்டு துன்பப்படும் படி தாமரை மலரோன் பிரம்மனைச் சற்றே சினத்த தலைவனும், யுத்த களத்திற்கு வந்த தேவர்கள் போற்ற, ஒப்பற்ற கிரவுஞ்ச பக்ஷியின் பெயரைத் தாங்குவதும் வட திசையில் பொன்மயமான இருந்ததுமான மலையைக் தொளைக்கும்படி வேலாயுதத்தைப் பிரயோகம் செய்தவனும், வரம் கொடுப்பவனும், அருள் பாலிப்பவனும், அசுரர் குலத்தை அழித்தவனும், மந்திரங்களுக்கு இருப்பிடமான சித்தமூர்த்தியும், மனக்கவலைகளைப் பிளந்து மாற்றுபவனும், ஊது கொம்புகளின் ஒலி நிறைந்துள்ளதும், சாரல் படிந்ததுமான மலைநிலங்களில் களிப்புடன் கொண்டாடப்படும் குரவைக் கூட்டங்களில் (வேடுவர் ஆடும் கூத்து) கலந்து கொண்டு அருள்புரியும் வேடிக்கை வேடுவனும், பச்சைமணி போன்ற ஆபரணங்களுடன், அழகிய இலைகளை ஆடையாக உடுத்தி உலாவுகின்ற வேடுவச் சிறுமியாகிய என்னை, மணம் செய்து கொள் என்று விடாமல் யாசித்துக் கொண்டிருப்பவனும், மன்மதன் செலுத்திய மலர் பாணங்களின் தொகுதி தனது உடல் முழுவதும் பாய்ந்து புண்படுத்தி இருக்கும் நிலையைப் படத்தில் வரைந்து காட்டும் அதிக தெய்வீகக் காதல் மிக்க தவசீலனும், வரிந்து கட்டப்பட்ட வில் உடைய வேடுவர்கள் பூஜை செய்து வழிபடும் தினைப்புனத்து பரண் மீதில் மயில் போன்ற கவர்ச்சியுடனும் அழகுடனும் அமர்ந்திருக்கும் ஒப்பற்ற வள்ளி நாச்சியாருக்கு வேலைக்காரனாய்க் காவல் காத்த அந்த அறுமுக தெய்வம் தான் (வேடிச்சி காவலனே).

***

# 13. சேவகன் வகுப்பு

### அறிமுகம்

இயம தூதர்கள் வருத்தும் பொழுது முருகப்பெருமானை வந்து உதவுமாறு வேண்டுவது.

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனத்தா தனனா

### மூலம்

1. இருபிறை எயிறு நிலவெழ உடலம்
இருள்படு சொருபம் உடைக்கோ விடவே

2. இறுகிய கயிறு படவினை முடுகி
எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்

3. அருமறை முறையின் முறை முறை கருதி
அதரிடை வெருவ ஒறுத்தால் வகையால்

4. அறிவொடு மதுர மொழியது குழறி
அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய்

5. ஒருபது சிரமும் இருபது கரமும்
விழஒரு பகழி தொடுத்தோன் மருகா

6. உரமது பெரிய திரிபுரம் எரிய
உயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா

7. மருவளர் அடவி வனிதையர் பரவ
மரகத இதணில் இருப்பாள் கணவா

8. **வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சேவகனே**

### (பாடல்) சொற்பிரிவு (13)

1. இருபிறை எயிறு நிலவெழ உடலம்
இருள்படு சொரூபம் உடைக்கோ விடவே

2. இறுகிய கயிறு படவினை முடுகி
எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்

3. அருமறை முறையின் முறை முறை கருதி
அதர் இடை வெருவ ஒறுத்தால் வகையால்

4. அறிவொடு மதுர மொழியது குழறி
அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய்

5. ஒருபது சிரமும் இருபது கரமும்
விழ ஒரு பகழி தொடுத்தோன் மருகா

6. உரமது பெரிய திரிபுரம் எரிய
உயர் கனகிரியை வளைத்தோர் புதல்வா

7. மருவளர் அடவி வனிதையர் பரவ
மரகத இதணில் இருப்பாள் கணவா

8. **வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சேவகனே**

**பதவுரை :**

இருபிறை எயிறு நிலவெழ உடலம் இருள்படு சொருபம் உடைக்கோ விடவே - இரண்டு சந்திர பிரபைகள் போன்ற பற்களில் இருந்து வெண்ணிற ஒளி வீச உடம்பு கரிய நிறமுடைய தலைவனாகிய எமராஜனின் கட்டளைப்படி; இறுகிய கயிறு படவினை முடுகி எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய் - சுவாசத்தில் இறுகக் கட்டி பிராணனை இழுத்துச் செல்லும் சூக்குமக் கயிற்றில் உயிர்கள் அகப்பட பூர்வ வினைகளின் படி எம தூதர்கள் சூக்கும உடம்பின் பிடரியில் கை வைத்துப் பிடித்துக் கொண்டு எமபுரத்திற்குச் செல்லும் போது, அருமறை முறையின் முறைமுறை கருதி அதரிடை வெருவ ஒறுத்தால் வகையால் - வழியில் அச்சம் விளையும் படி பலவிதமாகத் தண்டித்தால், அருமை மிக்க வேதம் விதித்த விதியின்படி, ஒழுங்காக, தவறு ஏற்படாத வகையில் உன்னை சிந்தித்து; அறிவொடு மதுர மொழியது குழறி அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய் - புத்தியும் இனிய பேச்சும் தடுமாறி வரும் அந்த கடைசி நேரத்தில் முருகா என உணர்ச்சிடன் உன்னை அழைப்பேன், அந்தச் சமயம் உடனே வந்து காப்பாற்ற வேண்டும். (சிவ சாமராஜ்யத்தின் சட்ட ஒழுங்கான விதிகளையும் விலக்குகளையும் கற்பிக்கும் வேதநெறிகளை மீறி நடப்போரை தண்டிக்கும் தர்ம ராஜனான எமனின் உடம்பு எனாமல் சொருபமுடைக்கோ என்கிறார்.

தர்ம சபையை அடைவதற்கு முன்பே, உயிர் செய்த பாவங்களை எண்ணி ஆத்திரமடைந்த எம படர்கள், ஏ பாவி, எத்தனைக் கோடி கோடி ஜென்மம் எடுத்தும் நீ நல்வழிப் படவில்லையே. நின்னைப்பெற்ற தாயார்களும் சலித்து விட்டனரே, "ஒரு தாய் இரு தாய் பல கோடியதாய்" உன்னைப் படைத்து படைத்து பிரமனும் சோர்ந்து விட்டாரே. உன் உடலைத் தின்று தின்று நரிகளும், உன் தேகத்தைத் திரும்ப திரும்ப எரித்ததினால் அக்னி தேவனும் சலித்து விட்டனரே. உன்னைப் போன்ற பாவிகளைக் கண்டு எங்கள் தலைவரான எமதர்மராஜனின் மேனி கருத்தனவே. கொதிக்கும் சினத்தோடு பற்களை நற நற என கடித்ததினால் அவைகளும் வளைந்து போயிற்றே. உன்னைப் பிடித்துப் பிடித்து எங்கள் கால்களும் சலித்து விட்டனவே எனும் கோப மொழிகளைப் பேசி வசைகளுடனே தொடர்ந்து அடைவார்கள். பல தண்டனைகளைக் கொடுப்பார்கள். இப்படிப்பட்ட வேதனைகளை எண்ணி எண்ணி என்

பேச்சும் குழறுமே. ஆதலால் இனிமேலாவது திருந்தி வேதம் விதித்த ஒழுங்குபடி நடந்து உள்ளம் உருகி ஒருகால் முருகா, பரமா, குமரா என அழைப்பேன். அப்போது நீ வந்து ஆட்கொள்ள வேண்டும். ''கடி சமன் உயிர் தனை இரு விழி அனலது கக்கச் சிக்கென முட்டிக் கட்டி உடன்று போமுன் கதி தரும் முருகனும் என நினை நினைபவர் கற்பிற்புக்கு அறிவொக்கக் கற்பது தந்திடாயோ (படிதனில் எனத்தொடங்கும் திருப்புகழ்) - ஒருபது சிரமும் இருபது கரமும் விழ ஒரு பகழி தொடுத்தோன் மருகா - இராவணின் பத்து தலைகளையும், இருபது கைகளையும் அறுத்து கீழே விழும்படி ஒப்பற்ற அஸ்திரத்தால் வீழ்த்திய ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் மருகனே, ஒப்பற்ற ப்ரமமாஸ்திரத்தைக் கொண்டு ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி ஒரே அம்பினால் இராவணனை வீழ்த்தினார் என காஞ்சித் திருப்புகழில் அருணகிரியார் கூறுகிறார். 'சமர சண்டக் கொற்றத்து அரக்கன் கதிர் விடும் பத்துக் கொத்து முடிக்குந் தனி ஒர் அம்பைத் தொட்டு' (கனக தம்பத்தை திருப்புகழ்) - ஒரு எனும் சொல்லுக்கு ஒப்பற்ற எனவும் ஒன்று எனவும் இரு பொருள் கொள்ளலாம். சீதா தேவி இராவணனை எச்சரித்ததை இராமாயணம் பேசுகிறது. 'ஆரியன் பகழி வல்லது அறிந்திருந்தும் அறிவிலாதாய், தலை பத்தும் சிந்துவாயோ? ஒருபது பார மவுலியும் இருபது வாகு மேருவும் உதிதியில் விழ ஒரு கணை ஏவும் பராக்ரமன் 'வெய்ய வாரணம் போல் கை தான் இருபது உடையான் தலை பத்தும் கத்தரிக்க எய்தான் மருகா' (கந்தர் அலங்காரம்). 'உரமது பெரிய திரிபுரம் எரிய உயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா' - வலிமை மிக்க முப்புரங்களும் தீயில் சாம்பலாக, உயர்ந்த மேன்மையான மேரு மலையை வில்லாக வளைத்த சிவபெருமானின் திருக்குமாரனே, (வித்யுன் மாலி, தாரகாசுரன், கமலாக்ஷன் எனும் அசுரத் தலைவர்கள் நீண்ட காலம் கடும் தவம் புரிந்து சிவபெருமானிடம் விண், பூவுலகம், பாதாளம் எனும் மூன்று இடங்களிலும் பறக்கக்கூடிய முப்புரங்களிலும் இவர்கள் சென்று ஊர்களைப் பாழாக்கி வந்தனர். சிவ பூஜை செய்து வந்த இவர்களை சிவபெருமான் அழிக்க மாட்டார் எனக் கருதி, திருமால் புத்த உருவத்துடன் நாரத ரிஷி சீடனாய்ச் சென்று அவர்களை பௌத்த மதத்திற்கு மாற்றி சிவ பெருமானை மறக்கச் செய்தார்கள். ஆனால் இந்த மூன்று தலைவர்கள் மட்டும் மாறவில்லை. சிவ பெருமான் நிலம் தேராகவும், சூரிய சந்திரர்கள் அதன் சக்கரங்களாகவும், பிரமன் சாரதியாகவும், மேரு மலை வில்லாகவும், ஆதிசேஷன் நாணாகவும், திருமால் அம்பாகவும் நான்கு வேதங்களும் குதிரைகளாகவும், மற்ற தேவர்கள் வேறு வேறு கருவிகளாகவும் கொண்டு போருக்குச் சென்றார். தங்களால் தான் திரிபுர சம்ஹாரம் நடக்கப் போகிறது என திருமாலும் மற்ற தேவர்களும் ஆணவம் கொள்ள, அதை அறிந்த மஹாதேவர் சிரித்தார். அச்சிரிப்பிலிருந்து எழுந்த நெருப்பு முப்புரங்களையும் அசுரர்களையும் எரித்துச் சாம்பலாக்கியது. மூன்று தலைவர்கள் மட்டும் அழியவில்லை. அவர்கள் சிவபெருமானால் கயிலை மலையில் அமர்த்தப்பட்டனர். 'நல்விரதத்தை விட்ட புன்மையர் புரத்ரயத்தர் பொடியாகப் பொன் மலை வளைத்து எரித்த கண்நுதல்' (மின்னினில் திருப்புகழ்).

'மருவளர் அடவி வனிதையர் பரவ மரகத இதணில் இருப்பாள் கணவா' - நறுமணம் மிக்க வனத்தில் வசிக்கும் வேடப்பெண்கள் வழிபட (அவர்களின் வழிபாட்டை ஏற்று) பசுமையான பரண் மேல் இருந்து தினைப்புனங்களைக் காப்பாற்றிய வள்ளி நாச்சியாரின் மணவாளனே, (பெரும் பைம்புனத்தினுள் சிற்றேனல் காக்கும்) பணியில் கண்ணும் கருத்துமாக இருந்து

அந்த இடத்தை விட்டு அகலாமல் இருந்த வள்ளி நாச்சியாரை இருப்பாள் என்கிறார். பரமாத்மாவை அடைய தீவிரமான நெறியில் பழகும் ஜீவாத்மா கடைபிடிக்கும் அஷ்டாங்க யோகத்தில் இது தாரண நிலையாகும். வள்ளிமலை சுவாமிகள் வள்ளிமலையில் வசிக்கும் பொழுது பொங்கி என்பவளின் தலைமையில் வன தேவதைகள் முருகனின் அருட்சக்தியாகிய வள்ளியம்மையை பூஜிப்பதை அறிந்து, அந்த பொங்கி மாதாவுக்குத் தானும் தினமும் பூஜை செய்து வந்தார். ஆதலால் வனிதையர் என்பதற்கு வன தேவதைகள் என பொருள் கொள்ளுவதே மேலானதாகும். தவம் புரிந்து வந்த குறமாதை ஆட்கொண்டு முருகப்பெருமான் சுவாச யோகத்தைக் காட்டி பிராணாயாமம் முதலிய பிரணவ உபதேசம் செய்தார் என கீழ்க்கண்ட திருப்புகழ் வரிகளிலிருந்து அறிய முடிகிறது - 'ஓது குறமான் வனத்தில் மேவி அவள் கால் பிடித்து உள் ஓம் எனும் உபதேச வித்தோடு அணைவோனே' - 'சூலமென' எனத்தொடங்கும் திருப்புகழ்.

வளைகடல் கதற நிசிசரர் மடிய மலையொடு பொருத முழுச்சே வகனே - உலகைச்சுற்றி இருக்கும் சமுத்திரம் கதறி முறையிடவும் அசுரர்கள் இறக்கவும் க்ரவுஞ்ச மலையுடன் போர் செய்த சுத்த வீரனே. (குகஸ்ரீ ரசபதி நகைச்சுவையாகக் கூறுவார் - இராவணனைக் கொன்ற திருமால் கால் சேவகன். முப்புரம் எரித்தசிவபெருமான் அரைச்சேவகன். காம குரோதாதியான அறுபகைகள், உயிர்த்தொகைகளாகிய தினைப் பயிர்களை நாசம் செய்யாது தவம் காத்த வள்ளி முக்கால் சேவகன். கடல் கதற மலை மடிய நிசாசரர் மாள செய்த முருகனே முழுச் சேவகன் என்பதை இந்த நான்கு அடிகளிலும் அருணகிரியார் வெளிப்படுத்துகிறார்). இவ்வடிகளில் உள்ள சித்தாந்தக் கருத்து - ஆணவம் மூவாயிரத்து நான்கு கூறுகள் கொண்டது. அவற்றின் உச்சியில் இருக்கும் கூறு ஒன்று உயிரின் அறிவை மயக்கும். இதுவே வெளியில் சூரபத்மன் என உரு எடுக்கும். அச்சமயத்தில் தன் கூறுகளை மக்களாகப் பெற்று எடுக்கும் உச்சிக் கூறு பானுகோபனாக ஒளியை மறைத்து உயிர்களுக்கு பெரும் துன்பத்தைக் கொடுக்கும்.

ஆயிரம் கூறுகள் கொண்ட மாயாமலம் ஆயிரம் கூறுகள் உச்சியில் கொண்டும் பக்கவாட்டில் ஈராயிரம் கூறுகள் கீழ்க்கூறுகள் நூற்று ஒன்றாகக் கொண்டது. இந்த மாயாமலம் அண்டத்தில் ஆயிரம் சிரங்கள், ஈராயிரம் கைகள் உடைய சிங்கமுகன். அவனுக்கு 101 புதல்வர்கள்.

கன்ம மலம் கீழ் நோக்கும் ஒரு கூறு உடையது. இம்மலம் அண்டத்தில் தாரகனாய்த் தோன்றி அசுரேந்திரன் எனும் ஒரு மகனை உடையதாய் உயிர்களை பதைபதைக்க வதை புரியும். பிண்டத்திலும், அண்டத்திலும் இம் மலங்களால் உயிர்கள் படும் வேதனைகளைக் கண்டு பெரும் கருணையுடன் உள்ளே குகனாய் மல கண்டனம் செய்து வெளியில் முருகனாய் அசுரர்களை வதைத்த காரணத்தினால் அவனை முழுச்சேவகன் என்கிறார்.

''கடல் உலகினில் வரும்உயிர் படும் அவதிகள்
கலகம் இனையதுள கழியவும் நிலைபெற
கதியும் உனது திருவடி நிழல் தருவதும் ஒரு நாளே'' (சரவணபவநிதி திருப்புகழ்)

**பொழிப்புரை :**

இரண்டு பிறைகள் போன்ற பற்களில் இருந்து வெண்ணிற ஒளி வீச, உடம்பு கரிய நிறமுடைய தலைவனாகிய எமராஜனின் கட்டளைப்படி, சுவாசத்தில் இறுகக்கட்டி, பிராணனை இழுத்துச் செல்லும் சூக்குமக் கயிற்றில் உயிர்கள் அகப்பட, பூர்வ வினைகளின்படி எமதூதர்கள் கழுத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய், வழியில் அச்சம் விளையும் படி, பலவிதமாகத் தண்டித்தால் அருமை மிக்க வேதம் விதித்த விதியின்படி நல்ல வகையில் அறிவுடனே உன்னைச் சிந்தித்து புத்தியும் இனிமையான பேச்சும் தடுமாறி வரும் கடைசி நேரத்தில் முருகா என உணர்ச்சியுடன் உன்னை அழைப்பேன். அந்த சமயம் உடனே வந்து காப்பாற்ற வேண்டும். இராவணனின் பத்து தலைகளையும், இருபது கைகளையும் அறுத்து கீழே விழும்படி ஒப்பற்ற அஸ்திரத்தால் வீழ்த்திய திருமாலின் மருகனே, வலிமைமிக்க முப்புரங்களும் தீயில் சாம்பலாக, உயர்ந்த மேருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானின் குமாரரே ! நறுமணம் மிக்க வனத்தில் வசிக்கும் வேடப் பெண்கள் வழிபட, பசுமையான பரண் மேல் இருந்து கொண்டு தினைப்புனங்களைக் காப்பாற்றிய வள்ளி மணவாளனே ! உலகைச் சுற்றி உள்ள கடல் கதறி முறையிடவும், அசுரர்கள் இறக்கவும் கிரௌஞ்ச மலையுடன் போர் செய்த முழுவீரனே ! சேவகனே.

***



# 14. வேல் வாங்கு வகுப்பு

## அறிமுகம்

வேல் வாங்குவது என்றால் வேலைப் பிரயோகம் செய்வது என்று பொருள்படும். தேவேந்திர சங்க வகுப்பில் இப்பிரயோகத்தை காணலாம். முருகப் பெருமான் வேலாயுதத்தைப் பிரயோகித்ததால் நேர்ந்தன இவை என இவ்வகுப்பு விளக்குகிறது.

(வேல் வாங்கிய செந்தமிழ் நூலோன் குமரன் குகன்) (குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்றே)

தனதன தந்தன தனதன தந்தன தந்தன
தானாந்தன தானாந்தன

## மூலம்

1. திடவிய நெஞ்சுடை அடியர்இ டும்பைகெ டும்படி
தீயாங்குறை போயாழ்ந்தது

2. செயசெய என்றிசை பரவிய எங்கள்கொ டுங்கலி
தேசாந்தர மேசாய்ந்தது

3. செயலுரை நஞ்சுழற் மயலுறு நெஞ்சினர் வஞ்சகர்
தீமான்கதர் தாமேங்கினர்

4. சிகரத ரங்கித மகரநெ ருங்குபெ ருங்கடல்
தீமூண்டுதன் வாய்மாண்டது

5. தெரியலர் சென்றடை திசைகளில் எண்கரி சிம்பெழ
மாறாங்கிரி நூறாந்தொளை

6. சிகரநெ டுங்கிரி குகைகள்தி றந்துதி கந்தமும்
லோகாந்தமு நீர்தேங்கின

7. சிறையுள் அழுந்திய குறைகள்ஒ ழிந்துசெ யங்கொடு
தேவேந்திரர் சேணாண்டனர்

8. திரிபுவ னங்களும் ஒருபயம் இன்றிவ ளங்கெழு
சீர்பூண்டற நேர்பூண்டன

9. விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது
கால்பூண்டுதன் மேல்தீர்ந்தனன்

10. விகசித சுந்தர விதரண ஐந்தரு வெந்தெழில்
வீவான்பொழில் பூவாய்ந்தது

11. விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள் வாழ்ந்தனள்

12. வெருவி ஒதுங்கிமை யவரெவ ருஞ்சிறை வென்றித
மேலாம்படி யேமீண்டனர்

13. விழியொர்இ ரண்டொரு பதுசத நின்றெரி கண்டகன்
மேல்வாங்கிளை கால்சாய்ந்தது

14. வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கி எழுங்கன
சூர்மாண்டற வேர்மாய்ந்தது

15. விபுதர் பயங்கெட நிருதர் தளங்கெட விண்கெடு
மேடாம்படி பாடோங்கின

16. மிடைகுறள் வெங்கொடி கழுகு பருந்து விருந்தென
ஊனார்ந்தகல் வானார்ந்தன

17. அடவிப டுஞ்சடை மவுலியில் வெம்பணி யம்பணி
யாமாங்கதர் வாமாங்கனை

18. அநுபவை அம்பிகை அநுதிதை அம்பைத்ரி யம்பகி
ஆசாம்பரை பாசாங்குசை

19. அநகை அசஞ்சலை அதிகுண சுந்தரி அந்தரி
காலாந்தகி மேலாந்திரு

20. அமலை அலங்க்ருதை அபிநய பங்குரை சங்கினி
மானாங்கணி ஞானாங்குரை

21. அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி ளைந்தழல்
வாய்கான்றிடு நாகாங்கதை

22. அபயவ ரம்புரி உபயக ரந்திகழ் அந்தணி
யாமாங்கறி தாய்மாண்பினள்

23. அதுலைத ருந்திரு மதலையி பங்கொள்ப யங்கொடு
பாய்மாண்கலை வாய்மாண்புன

24. அணிகுற மின்புணர் தணிகையில் அந்தணன் இந்திர
ராசாங்கம தாராய்ந்தவன்

25. வடவையி டும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடாம்புடை நாடாண்டகை

26. வசைகரு துங்குரு பதியொடு தம்பிய ரும்பட
வேபாண்டவர் தேரூர்ந்தவன்

27. வளவில்வ ளர்ந்திடை மகளிர்கு விந்துத டங்குடை
வார்பூந்துகில் வார்பூம்புயல்

28. வரைநிரை கன்றின முழுதும யங்கிய பண்கெழு
வேயேந்திய வாயான்கழல்

29. மருதிடை சென்றுயர் சகடுத டிந்தடர் வெம்புளை
வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்

30. மதசயி லம்பொர வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமான்பகை கோமான்றிரு

31. மருகன் நிரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய்காங்கெயன்

32. **மகபதி தன்பதி பகைகிழி யும்படி அன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே.**

**(பாடல்) சொற்பிரிவு 14**

1. திடவிய நெஞ்சு உடை அடியர் இடும்பை கெடும்படி
தீயாம் குறை போய் ஆழ்ந்தது

2. செய செய என்று இசை பரவிய எங்கள் கொடுங்கலி
தேசாந்தரமே சாய்ந்தது

3. செயல் உரை நஞ்சு உறழ் மயல் உறும் நெஞ்சினர் வஞ்சகர்
தீமான் கதர் தாம் ஏங்கினர்

4. சிகரம் தரங்கிதம் மகர நெருங்கு பெருங்கடல்
தீமூண்டு அதன் வாய் மாண்டது

5. தெரியலர் சென்று அடை திசைகளில் எண்கரி சிம்பு எழ
மாறாம் கிரி நூறாம் தொளை

6. சிகர நெடுங்கிரி குகைகள் திறந்து திக்கு அந்தமும்
லோக அந்தமும் நீர் தேங்கின

7. சிறையுள் அழுந்திய குறைகள் ஒழிந்து செயம் கொடு
தேவேந்திரர் சேன் ஆண்டனர்

8. திரிபுவனங்களும் ஒருபயம் இன்றி வளம்கெழு
சீர் பூண்டு அற நேர் பூண்டன.

9. விட வசனம் சில பறையும் விரிஞ்சன் விலங்கது
கால் பூண்டு தன் மேல் தீர்ந்தனன்

10. விகசித சுந்தர விதரண ஐந்தரு வெந்து எழில்
வீவான் பொழில் பூவாய்ந்தது

11. விழைவு தரும் பதம் சசிதன் விளங்கிய மங்கல
நூல் வாங்குகிலாள் வாழ்ந்தனள்

12. வெருவி ஒதுங்கு இமையவர் எவரும் சிறை வென்று இதம்
மேலாம் படியே மீண்டனர்

13. விழி ஓர் இரண்டு ஒருபது சத நின்று எரி கண்டகன்
மேல் வாம்கிளை கால் சாய்ந்தது

14. வெளி முழுதும் திசை முழுதும் விழுங்கி எழும் கனம்
சூர்மாண்டு அற வேர் மாய்ந்தது

15. விபுதர் பயம் கெட நிருதர் தளம்கெட விண்கெடு
மேடாம் படி பாடு ஓங்கின

16. மிடை குறள் வெம் கொடி கழுகு பருந்து விருந்து என
ஊன் ஆர்ந்து அகல் வான் ஆர்ந்தன

17. அடவி படும் சடை மவுலியில் வெம்பணி அம்பணி
ஆம் அங்கதர் வாம அங்கனை

18. அநுபவை அம்பிகை அநுதிதை அம்பை த்ரியம்பகி
ஆசாம்பரை பாசாங்குசை

19. அநகை அசஞ்சலை அதிகுண சுந்தரி அந்தரி
காலாந்தகி மேலாம் திரு

20. அமலை அலங்க்ருதை அபிநயம் பங்கு உரை சங்கினி
மானாங்கனி ஞான அங்குரை

21. அணி முக பந்திகள் சிறுபொறி சிந்த விளைந்து அழல்
வாய் கான்றிடு நாகம் அங்கதை

22. அபயவரம் புரி உபயகரம் திகழ் அந்தணி
ஆம் ஆங்கு அறி தாய் மாண்பினள்

23. அதுலை தரும் திருமதலை இபம் கொள் பயம் கொடு
பாய் மாண் கலை வாய் மாண் புனம்

24. அணி குறமின் புணர் தணிகையில் அந்தணன் இந்திர
ராசாங்கமது ஆராய்ந்தவன்

25. வடவை இடும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடு ஆம் புடை நாடு ஆண்டகை

26. வசை கருதும் குருபதியொடு தம்பியரும் படவே
பாண்டவர் தேரூர்ந்தவன்

27. வளவில் வளர்ந்து இடை மகளிர் குவிந்து தடம் குடைவார்
பூந்துகில் வார் பூம் புயல்

28. வரை நிரை கன்று இனம் முழுதும் மயங்கிய பண்கெழு
வேய் ஏந்திய வாயான் கழல்

29. மருதிடை சென்று உயர் சகடு தடிந்து அடர் வெம் புளை
வாய் கீண்டு ஒரு பேய் காய்ந்தவன்

30. மத சயிலம் பொர வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமன் பகை கோமான் திரு

31. மருகன் நிரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய் காங்கெயன்

32. **மகபதி தன்பதி பகை கிழியும்படி அன்று அடல்**
**வாள் ஓங்கிய வேல் வாங்கவே**

**பதவுரை :**

திடவிய நெஞ்சு உடை அடியர் இடும்பை கெடும்படி தீயாம் குறை போய் ஆழ்ந்தது - திண்ணிய உள்ளம் படைத்த அடியவர்களின் துன்பம் அழியும்படி தீமை எனும் குறைபாடுகள் தீர்ந்து ஒழிந்தன (காங்கெயன் வேல்வாங்கவே) செய செய என்று இசை பரவிய எங்கள் கொடும் கலி தேசாந்தரமே சாய்ந்தது - ஜெய ஜெய என்று முருகனின் திருப்புகழ் போற்றிய அடியார்களாகிய எங்களின் கொடிய நோயும், வறுமையும் வெளி நாட்டிற்கு ஓடிப் போய்விட்டன (காங்கெயன் வேல்வாங்கவே), செயல் உரை நஞ்சு உறழ் மயல் உறும் நெஞ்சினர் வஞ்சகர் தீமான்கதர் தாம் ஏங்கினர் - தங்களுடைய செயல்களும், பேச்சுக்களும் விஷத்தைப் போல மயக்கம் கொண்ட உள்ளத்தை உடைய வஞ்சகர்கள், தீய கோபத்தைக் கொண்டவர்கள், பயம் அடைந்து தளர்ந்து போனார்கள் (காங்கெயன் வேல்வாங்கவே), சிகர தரங்கித மகர நெருங்கு பெருங்கடல் தீமூண்டு தன் வாய் மாண்டது - மலையின் உச்சி போல் எழும்புகின்ற அலைகள் வீசுகின்றதும் மகர மீன்கள் நிறைந்துள்ள பெரிய கடல் எரி மூண்டு ஓசை அடங்கி ஒடுங்கியது (காங்கெயன் வேல்வாங்கவே) (இரை கடல் தீப்பட வென்ற வேலா), தெரியலர் சென்று அடை திசைகளில் எண் கரி சிம்பு எழ மாறாம் கிரி நூறாம் தொளை - பகைவர்கள் ஓடி ஒளிந்த எல்லா திக்குகளிலும் இருந்த அஷ்ட கஜங்களும் பயத்தால் பிளிற மறைந்திருந்த க்ரவுஞ்ச கிரி பொடிபட்டு விழ, சிகர நெடுங்கிரி குகைன் திறந்து திக்கு அந்தமும் லோக அந்தமும் நீர் தேங்கின - சிகரங்களை உடைய பெரிய மலைகளின் குகைகள் வாய் விட்டு பிளந்து திக்குகளின் எல்லா வரைகளும் அனைத்து உலகங்களின் முடிவிடங்கள் வரையிலும் ப்ரளய ஜலம் தேங்கி நின்றன (காங்கெயன் வேல்வாங்கவே), சிறையுள் அழுந்திய குறைகள் ஒழிந்து செயம் கொடு தேவேந்திரர் சேண் ஆண்டனர் - சூரபத்மனால் சிறையில் அடைபட்டுக் கிடந்த தாழ்வுகள் நீங்கி வெற்றி முழக்கத்துடன் இந்திரர்கள் விண்ணுலகில் ஆட்சி புரிந்தனர் (காங்கெயன் வேல்வாங்கவே), திரிபுவனங்களும் ஒரு பயம் இன்றி வளம் கெழு சீர் பூண்டு அற நேர் பூண்டன - எந்த விதமான அச்சமும் இல்லாமல் மூவுலகங்களும் வளமை நிறைந்த சிறப்பை அடைந்து தரும ஒழுக்கத்தைச் செம்மையாக மேற்கொண்டன (காங்கெயன் வேல்வாங்கவே), விட வசனம் சில பறையும் விரிஞ்சன் விலங்கது கால்பூண்டு தன் மேல் தீர்ந்தனன் - முருகனைப் பார்த்து - பிரணவத்தின் பொருள் சிறு பாலகனாகிய உனக்கு எப்படிப்புரியும் - என்கிற விஷமப் பேச்சுகள் பலவற்றைப் பேசிய பிரம்மனின் காலில் விலங்கைப் பூட்டி அவனுடைய செருக்கை ஒழித்தது (காங்கெயன் வேல்வாங்கவே), விகசித சுந்தர விதரண ஐம் தரு வெந்து எழில்வீ வான் பொழில் பூ வாய்ந்து - மலர்ந்த அழகான கொடையில் சிறந்த சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்கிற ஐந்து தெய்வீக மரங்களும் அசுரர்களால் பொசுக்கப்பட்டு அதன் அழகு குலைந்து போன நிலை மாறி விண்ணுலக சோலைகள் மாறத் தொடங்கியது, (காங்கெயன் வேல்வாங்கவே) விழைவுத ரும்பத சிதன்வி எங்கிய மங்கல நூல்வாங்குகி லாள்வாழ்ந்தனள் - ஆசையை தரும் படியான பதவியில் உள்ள இந்திராணி தனது (நூறு அஸ்வமேத யாகம் செய்தவருக்கே இந்திரப்பதவியும் சசியை அனுபவிக்கும் உரிமையும் கிடைக்கும்) விளக்கமுற்ற திருமாங்கல்ய சரடு கழலாதவாறு அதாவது விதவை ஆகாமல் செளபாக்யத்துடன் வாழ்ந்திருந்தாள் (காங்கெயன் வேல்வாங்கவே)

(சூரபத்மாதிகள் இறந்ததினால் இந்திரனின் உயிர் காப்பற்றப்பட்டது - களிற்றான் கிழத்தி கழுத்தில் கட்டும் நூல் வாங்கிடாது அன்று வேல் வாங்கி கந்தரலங்காரம் 77), வெருவி ஒதுங்கு இமையவர் எவரும் சிறை வென்று இதம் மேலாம் படியே மீண்டனர் - ராக்ஷதர்களிடம் பயப்பட்டு ஒளிந்து கிடந்த எல்லா தேவர்களும் தம் சிறை வாசத்திலிருந்து தப்பித்து நன்மைகள் பெருகும்படி தங்கள் தேவ லோகத்திற்கு மீண்டும் வந்து சேர்ந்தனர் (காங்கெயன் வேல்வாங்கவே) - சூரர் கொடு போய் அடைத்த தேவர் சிறை மீளவிட்ட பெருமாளே, விழி ஓர் இரண்டு ஒருபது சத நின்று எரி கண்டகன் மேல் வாம் கிளை கால் சாயந்தது - கண்கள் இரண்டு ஆயிரமும், நிலைத்து நெருப்பு வீச, கொடியவனான சிங்கமுகனும் அவனைச் சார்ந்து விரிந்து படர்ந்துள்ள சுற்றத்தார் அனைவரும் வேரோடு அழிந்தனர் (காங்கெயன் வேல்வாங்கவே), வெளிமுழுதும் திசை முழுதும் விழுங்கி எழும் கன சூர் மாண்டு அற வேர் மாய்ந்தது - ஆகாய வெளி முழுவதும் எல்லா திசைகளிலும் படர்ந்து மா மரமாய் எழுந்து நின்ற பெரிய சூரபத்மனும் அடியோடு அவன் குலமும் அழிபட்டது(காங்கெயன் வேல்வாங்கவே), விபுதர் பயம் கெட நிருதர் தளம் கெட விண்கெடு மேடாம்படி பாடு ஓங்கின - தேவர்களின் அச்சம் தீரவும் அசுரர்களின் படை ஒழியவும் (அசுரர்களின் பிணக்குவியல் வந்து சேர்ந்ததால்) ஆகாய முகடு கெட்டு மேடாகும் படி போர் சம்பவங்கள் சிறப்பாக நடந்தேறின (காங்கெயன் வேல்வாங்கவே), இந்த பிணக்குவியலினால் தன் தேர் செல்ல தடை ஏற்பட்டதினால், முருகப்பெருமான் தன் நெற்றிக் கண் நெருப்பினால் அலவகளை சுட்டு சாம்பலாக்கினார். (கொடு சூர் சினத்தையும் உடற் சங்கரித்து மலை முற்றும் கொளுத்தும் கதிர்வேலா), மிடை குறள் வெம்கொடி கழுகு பருந்து விருந்து என ஊன் ஆர்ந்து அகல் வான் ஆர்ந்தன - அண்டி வந்த பூதங்களும், கொடிய காக்கைகளும், கழுகுகளும், பருந்துகளும் நல்ல சாப்பாடு கிடைத்தது என்று மாமிசத்தை உண்டு பறந்து ஆகாயம் முழுவதையும் நிறைத்தன (காங்கெயன் வேல்வாங்கவே) (முதுகழுகு பந்தரிட்ட வேலினான்), அடவி படும் சடை மவுலியில் வெம்பணி அம்பணி ஆம் அங்கதர் வாம அங்கனை - காடு போன்ற ஜடாமுடியில் (செஞ்சடாஅடவி மேல் ஆற்றை) கொடிய பாம்புகளையும், அழகிய ஆபரணம் போல தோள் அணியாக (வாகு வளையம்) பூண்ட சிவபெருமானின் இடப்பாகம் பெற்ற பெண் அநுபவை, அம்பிகை அநுதிதை அம்பை த்ரியம்பகி ஆசாம்பரை பாசாங்குசை - உயிர்களுக்கு சுக துக்கங்களை உணரச் செய்பவள், அம்மை, விவரிக்க முடியாதவள், அம்மா, முக்கண்ணி, திக்குகளையே ஆடையாகக் கொண்ட நிருவாணி - திகம்பரி, கையில் பாசத்தையும், அங்குசத்தையும் வைத்திருப்பவள், (ஆணவம் எனும் யானையைக் கட்ட பாசமும், அடக்க அங்குசம், கையில் வைத்துள்ளார் விநாயகர். அஞ்சு கரமும், அங்குச பாசமும், இவருடைய இந்தச் செயலுக்கு காரணம் தன் தாயே என்கிறது தணிகைப்புராணம். பாசாங்குசம் அணி இபமுகத்தன் தொழிற்கு எல்லாம் காரணம் ஆதல் தெளிந்து அருள் கொழிக்கும் கன்னி); அநகை அசஞ்சலை அதிகுண சுந்தரி அந்தரி காலாந்தகி மேலாம் திரு - பாபமற்றவள், சஞ்சலம் அற்றவள், மிகச்சிறந்த அழகி, ஞான ஆகாய வடிவி, (சிற்பர வெளிக்குள் வளர் தற்பரமதான பரதேவதையை அஞ்சலி செய்வாம் - தாயுமானவர்), எமனை உதைத்து அழித்தவள், (கூற்று உதைத்திடவே உதை பார்வதி, காலன் விழ மோது சாமுண்டி) இலக்குமிக்கும் மேலானவள், அமலை அலங்க்ருதை, அபிநய பங்குரை சங்கினி, மானாங்கணி ஞான அங்குரை - மலமற்றவள், சர்வ ஆபரண பூஷணி, நாட்டிய சாஸ்திர

இலக்கணத்தை விளக்கும் மாது, மான் போன்ற விழிகளை உடையவள், ஞானத்திற்கு முளைவித்து (அங்குர் - வித்து); அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்த விளைந்து அழல் வாய் கான்றிடு நாக அங்கதை - அழகிய பட வரிசைகள் தீப்பொறிகளை சிந்தும் படி வெளிவரும் நெருப்பைக் கக்கும் பாம்பைத் தோள் வளையளாக் கொண்டவள்; அபய வரம் புரி உபய கரம் திகழ் அந்தணி ஆம் அங்கு அறி தாய் மாண்பினள் - அபயம், வரதம் இரண்டையும் காண்பிக்கும் இரண்டு கரங்களை உடைய அழகிய மாது, தன் அடியார்களுக்கு வேண்டிய நலங்களை அவ்விடத்திலே அறிந்து அவற்றை நல்கும் தாய் போன்ற பெருமை மிக்கவள்; அதுலை தருந்திரு மதலை இபம் கொள் பயங்கொடு பாய் மாண் கலை வாய் மாண் புன - சமானமற்றவள் ஆகிய தேவி அளித்த அழகிய குமாரன், கணபதியாகிய யானையினால் ஏற்பட்ட அச்சத்தினால் தாவுகின்றதும், நிறைந்துள்ளதுமான கலைமான்கள் வாழும் சிறந்த தினைப்புனத்திலிருந்த; அணி குற மின்புணர் தணிகையில் அந்தணன் இந்திர ராசாங்கம் அது ஆராய்ந்தவன் - அழகிய குறமகளை மணம் புரிந்தவனும், திருத்தணியில் கருணாமூர்த்தியும், வெகுநாட்களாக அசுரர்களால் ஆக்ரமிக்கப் பட்டிருந்த தேவலோக அரசாட்சியை பரிசீலித்து புனரமைப்பு செய்தவன்; வடவை இடும்படி மணிமுடி பஞ்சு எழ விஞ்சிய மாடு ஆம்புடை நாடு ஆண் தகை - வடவைத் தீபற்றினது போல அசுரர்களின் தலைகள் பஞ்சாய்ப் பறக்கவும், மேன் மேல் குவிந்திருந்த இருபக்கத்து பாண்டவ கௌரவ சேனைகள் அடங்கிய போரில் பூபாரத்தைக் குறைக்கும் நோக்கத்துடன் அதை செய்து முடித்த புருஷோத்தமன்; வசை கருதும் குரு பதியொடு தம்பியரும் படவே பாண்டவர் தேர் ஊர்ந்தவன் - உலகத்தவரால் பழித்து வந்த செயல்களையே புரிந்து வந்த குருகுல தலைவன் துரியோதனனும் அவன் தம்பிகளும் இறந்து ஒழிய பாண்டவர்களுக்குத் தேர் சாரதியாய் இருந்தவன் (கன பாண்டவர் தேர்தனிலே எழுபரி தூண்டிய சாரதியாகிய கதிர் ஓங்கிய நேமியனாம் அரி); வளவில் வளர்ந்து இடை மகளிர் குவிந்து தடம் குடைவார் பூந்துகில் வார் பூம் புயல் - ஆயர்பாடியில் வளர்ந்து (பொதுவியர் சேரிக்கே வளர்) இடையர் குல பெண்கள் ஒன்றாகக் கூடி குளத்தில் நீராடிக் கொண்டிருந்தவர்களின் அழகிய சேலைகளை வாரி எடுத்து அபகரித்துச் சென்ற அழகிய மேக வண்ணன் (கொடும் கானிலே செழும் சேலையே கொடு குருந்தேறு மால்மாயன்); வரை நிரை கன்று இன முழுதும் மயங்கிய பண் கெழு வேய் ஏந்திய வாயான் கழல் - கோவர்த்தனகிரியின் அடிவாரத்தில் பசுக்கூட்டங்கள் கன்று கூட்டங்கள் அனைத்தும் தன் நிலை மறக்கும்படி புல்லாங்குழல் இசை எழுப்பிய வாயை உடையவன்; மருதிடை உயர் சகடு தடிந்து அடர் வெம் புளை வாய் கீண்ட ஒரு பேய் காய்ந்தவன்-தன் கழல்களால் மருத மரங்களுக்கு இடையே சென்று சகடாசுரனைக் கொன்று எதிர்த்து வந்த கொக்கு வடிவினனான பகாசுரனை அழித்து பூதகியைக் கொன்றவன்; மத சயிலம் பொர வர விடு நெஞ்சினில் வஞ்சக மாமான்பகை கோமான் திருமருகன் - குவலயாபீடம் எனும் யானையை சண்டை செய்ய அனுப்பியவனும் உள்ளத்தில் வஞ்சனை கொண்ட மாமனாகிய கம்ஸனைப் பகைத்து அழித்த பெருமானாகிய கண்ணனின் மங்கலம் மிக்க மருகன்; நிரம்பிய மதி முக மஞ்சரி குஞ்சரி வாகு ஆம்பரை தோய் காங்கெயன் - பூரண சந்திரன் போன்ற முகம் கொண்ட தளிர் போல் மென்மையானவள், ஐராவதத்தால் வளர்க்கப்பட்டவள், அழகான ஆடை புனைந்த தேவசேனையை அணைக்கும் கங்கையின் மைந்தன், மகபதி தன்பதி பகை கிழியும்படி அன்று

அடல் வாள் ஓங்கிய வேல் வாங்கவே - இந்திரனின் அமராவதிக்குப்பகைவனாகிய சூரபத்மன் கூறுபட்டு அழியும்படி யுத்தம் செய்த அன்று, வலிமையும் ஒளியும் பொருந்திய வேலாயுதத்தை செலுத்திய போது (முன் கூறப்பட்டவை அனைத்தும் நடந்தது).

**பொழிப்புரை :**

திண்ணிய உள்ளம் படைத்த அடியவர்களின் துன்பம் அழியும்படி தீமை எனும் குறைபாடுகள் தீர்ந்து ஒழிந்தன, ஜெய ஜெய என்று முருகனின் திருப்புகழ் போற்றிய அடியார்களாகிய எங்களின் கொடிய நோயும், வறுமையும் வெளி நாட்டிற்கு ஓடிப் போய்விட்டன, தங்களுடைய செயல்களும், பேச்சுக்களும் விஷத்தைப் போல மயக்கம் கொண்ட உள்ளத்தை உடைய வஞ்சகர்கள், தீய கோபத்தைக் கொண்டவர்கள், பயம் அடைந்து தளர்ந்து போனார்கள், மலையின் உச்சி போல் எழும்புகின்ற அலைகள் வீசுகின்றதும், மகர மீன்கள் நிறைந்துள்ள பெரிய கடல் ஏரி மூண்டு ஓசை அடங்கி ஒடுங்கியது பகைவர்கள் ஓடி ஒளிந்த எல்லா திக்குகளிலும் இருந்த அஷ்ட கஜங்களும் பயத்தால் பிளிற, மறைந்திருந்த க்ரவுஞ்ச கிரி பொடிபட்டு விழ, சிகரங்களை உடைய பெரிய மலைகளின் குகைகள் வாய் விட்டு பிளந்து திக்குகளின் எல்லா வரைகளும், அனைத்து உலகங்களின் முடிவிடங்கள் வரையிலும், ப்ரளய ஜலம் தேங்கி நின்றன, சூரபத்மனால் சிறையில் அடைபட்டுக் கிடந்த தாழ்வுகள் நீங்கி வெற்றி முழக்கத்துடன் இந்திரர்கள் விண்ணுலகில் ஆட்சி புரிந்தனர், எந்த விதமான அச்சமும் இல்லாமல் மூவுலகங்களும் வளமை நிறைந்த சிறப்பை அடைந்து, தரும ஒழுக்கத்தைச் செம்மையாக மேற்கொண்டன, முருகனைப் பார்த்து - பிரணவத்தின் பொருள் சிறு பாலகனாகிய உனக்கு எப்படி புரியும் - என்கிற விஷமப் பேச்சுகள் பலவற்றை பேசிய பிரம்மனின் காலில் விலங்கைப் பூட்டி அவனுடைய செருக்கை ஒழித்தது, மலர்ந்த அழகான கொடையில் சிறந்த சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்கிற ஐந்து தெய்வீக மரங்களும் அசுரர்களால் பொசுக்கப்பட்டு அதன் அழகு குலைந்து போன நிலை மாறி விண்ணுலகச் சோலைகள் மாறத் தொடங்கியது, ஆசையைத்தரும் படியான பதவியில் உள்ள இந்திராணி தனது (நூறு அஸ்வமேத யாகம் செய்தவருக்கே இந்திரப்பதவியும் சசியை அனுபவிக்கும் உரிமையும் கிடைக்கும்) விளக்கமுற்ற திருமாங்கல்ய சரடு கழலாதவாறு அதாவது விதவை ஆகாமல் சௌபாக்யத்துடன் வாழ்ந்திருந்தாள், ராக்ஷதர்களிடம் பயப்பட்டு ஒளிந்து கிடந்த எல்லா தேவர்களும், தம் சிறை வாசத்திலிருந்து தப்பித்து நன்மைகள் பெருகும்படி, தங்கள் தேவ லோகத்திற்கு மீண்டும் வந்து சேர்ந்தனர். கண்கள் இரண்டு ஆயிரமும், நிலைத்து நெருப்பு வீச கொடியவனான சிங்கமுகனும் அவனைச் சார்ந்து விரிந்து படர்ந்துள்ள சுற்றத்தார் அனைவரும் வேரோடு அழிந்தனர், ஆகாய வெளி முழுவதும் எல்லா திசைகளிலும் படர்ந்து மா மரமாய் எழுந்து நின்ற பெரிய சூரபத்மனும், அடியோடு அவன் குலமும் அழிபட்டது, தேவர்களின் அச்சம் தீரவும் அசுரர்களின் படை ஒழியவும், (அசுரர்களின் பிணக்குவியல் வந்து சேர்ந்ததால்) ஆகாய முகடு கெட்டு மேடாகும் படி போர் சம்பவங்கள் சிறப்பாக நடந்தேறின, அண்டி வந்த பூதங்களும், கொடிய காக்கைகளும், கழுகுகளும், பருந்துகளும் நல்ல சாப்பாடு கிடைத்தது என்று மாமிசத்தை உண்டு பறந்து ஆகாயம் முழுவதையும் நிறைத்தன காடு போன்ற ஜடாமுடியில் கொடிய பாம்புகளையும், அழகிய ஆபரணம் போல தோள் அணியாக (வாகு வளையம்) பூண்ட சிவபெருமானின்

இடப்பாகம் பெற்ற பெண், உயிர்களுக்கு சுக துக்கங்களை உணரச் செய்பவள், அம்மை, விவரிக்க முடியாதவள், அம்மா, முக்கண்ணி, திக்குகளையே ஆடையாகக் கொண்ட நிருவாணி - திகம்பரி, கையில் பாசத்தையும், அங்குசத்தையும் வைத்திருப்பவள், பாபமற்றவள், சஞ்சலம் அற்றவள், மிகச்சிறந்த அழகி, ஞான ஆகாய வடிவி, எமனை உதைத்து அழித்தவள், இலக்குமிக்கும் மேலானவள், மலமற்றவள், சர்வ ஆபரண பூஷணி, நாட்டிய சாஸ்திர இலக்கணத்தை விளக்கும் மாது, மான் போன்ற விழிகளை உடையவள், ஞானத்திற்கு முளைவித்து அழகிய பட வரிசைகள் தீப்பொறிகளை சிந்தும் படி வெளிவரும் நெருப்பைக் கக்கும் பாம்பைத் தோள் வளையளாக் கொண்டவள், அபயம், வரதம் இரண்டையும் காண்பிக்கும் இரண்டு கரங்களை உடைய அழகிய மாது, தன் அடியார்களுக்கு வேண்டிய நலங்களை அவ்விடத்திலே அறிந்து அவற்றை நல்கும் தாய் போன்ற பெருமை மிக்கவள், சமானமற்றவள் ஆகிய தேவி அளித்த அழகிய குமாரன், கணபதியாகிய யானையினால் ஏற்பட்ட அச்சத்தினால் தாவுகின்றதும், நிறைந்துள்ளதுமான கலைமான்கள் வாழும் சிறந்த தினைப்புனத்திலிருந்த, அழகிய குறமகளை மணம் புரிந்தவனும், திருத்தணியில் கருணாமூர்த்தியும், வெகுநாட்களாக அசுரர்களால் ஆக்ரமிக்கப் பட்டிருந்த தேவலோக அரசாட்சியை பரிசீலித்து புனரமைப்பு செய்தவன், வடவைத் தீ பற்றினது போல அசுரர்களின் தலைகள் பஞ்சாய்ப் பறக்கவும், மேன் மேல் குவிந்திருந்த இருபக்கத்து பாண்டவ கௌரவ சேனைகள் அடங்கிய போரில் பூபாரத்தைக் குறைக்கும் நோக்கத்துடன் அதை செய்து முடித்த புருஷோத்தமன், உலகத்தவரால் பழித்து வந்த செயல்களையே புரிந்து வந்த குருகுல தலைவன் துரியோதனனும் அவன் தம்பிகளும் இறந்து ஒழிய பண்டவர்களுக்கு தேர் சாரதியாய் இருந்தவன், ஆயர்பாடியில் வளர்ந்து இடையர் குல பெண்கள் ஒன்றாகக் கூடி குளத்தில் நீராடிக் கொண்டிருந்தவர்களின் அழகிய சேலைகளை வாரி எடுத்து அபகரித்துச் சென்ற அழகிய மேக வண்ணன், கோவர்த்தனகிரியின் அடிவாரத்தில் பசுக்கூட்டங்கள் கன்று கூட்டங்கள் அனைத்தும் தன் நிலை மறக்கும்படி புல்லாங்குழல் இசை எழுப்பிய வாயை உடையவன், தன் கழல்களால் மருத மரங்களுக்கு இடையே சென்று சகடாசுரனைக் கொன்று எதிர்த்து வந்த கொக்கு வடிவினனான பகாசுரனை அழித்து பூதகிகளை கொன்றவன், குவலயாபீடம் எனும் யானையை சண்டை செய்ய அனுப்பியவனும் உள்ளத்தில் வஞ்சனை கொண்ட மாமனாகிய கம்ஸனை பகைத்து அழித்த பெருமானாகிய கண்ணனின் மங்கலம் மிக்க மருகன், பூரண சந்திரன் போன்ற முகம் கொண்ட தளிர் போல் மென்மையானவள், ஐராவதத்தால் வளர்க்கப்பட்டவள், அழகான ஆடை புனைந்த தேவசேனையை அணைக்கும் கங்கையின் மைந்தன், இந்திரனின் அமராவதிக்கு பகைவனாகிய சூரபத்மன் கூறுபட்டு அழியும்படி யுத்தம் செய்த அன்று, வலிமையும் ஒளியும் பொருந்திய வேலாயுதத்தை செலுத்திய போது (முன் கூறப்பட்டவை அனைத்தும் நடந்தது).

***

# 15. புய வகுப்பு

## அறிமுகம்

இந்த வகுப்பிற்கு அச்சாரமாய் அமைந்தது திருப்புகழில் காணப்படும் கீழ்கண்ட வரிகளே:

"சந்தாரம் சாத்தும் புய இயல்
கந்தா என்று ஏத்தும் படி" (மங்கா எனத்தொடங்கும் திருப்புகழ்)

(முற்றிய பன்னிரு தோளும் வைத்து உயர் திருப்புகழ் செப்பு என பக்கரை எனத்தொடங்கும் திருப்பகழ்)

இது மயிலோன் புய வகுப்பையும், திருப்புகழையும் பாட அருளியதால் தோன்றிய பாடல் இது. அலங்காரத்தில் "முன்பு செய்த பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும்" என மந்திர ஆணை வந்திருத்ததால் இவ்வகுப்பின் பாராயண பயன் சஞ்சித வினையின் நீக்கம் என்பதில் ஐயம் இல்லை

தன தன தனன தனதன தனன தனாதன
தான தான தனதன தத்தன
தந்த தந்த தந்த தானத் தனந்தன

## மூலம்

1. வசைதவிர் ககன சரசிவ கரண மகாவ்ருத
சீல சால வரமுநி சித்தரை
அஞ்சல் அஞ்சல் என்று வாழ்வித் துநின்றன

2. மணிவட மழலை உடைமணி தபனிய நாணழ
காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன

3. வருணித கிரண வருணித வெகுதரு ணாதப
சோதி யாடை வடிவுபெ றப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

4. வளைகடல் உலகை வலம்வரு பவுரி வினோதக
லாப கோப மயில்வத னத்துவி
ளங்கும் அங்கு சங்க டாவிச் சிறந்தன

5. வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

6. மதியென உதய ரவியென வளைபடு தோல்வி
சால நீல மலிபரி சைப்படை
கொண்டு நின்று ழன்று சாதிக்க முந்தின

7. மணகுண சலன மலினமில் துரியஅ தீதசு .
காநு பூதி மவுனநி ரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன

8. வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகச
மூக ராக மதுபம்வி ழச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன

9. மிசைமிசை கறுவி வெளிமுக டளவு நிசாசர
சேனை தேடி வீததிபெ றச்சில
கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன

10. வெருவுவ வெருவ எரிசொரி விழியுள பூதபி
சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன

11. விதமிகு பரத சுரவனி தையர்கண மேல்தொறும்
லீலை யாக விமலச லத்தினை
விண்டி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன

12. விதரண தருவின் மலரிடை செருகிய கூதள
நீப மாலை விபுதர்கு லக்குலி
சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன

13. விகசித தமர பரிபுர முளரி தொழா அபி
ராம வேடர் விமலைதி னைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப்புகுந்தன

14. விதிர்தரு சமர முறிகர கமல நகாயுத
கோழி வீற விதரண சித்ரஅ
லங்க்ரு தம்பு னைந்து பூரித் திலங்கின

15. விரகுடை எனது மனதுடன் அகில்பனி நீர்புழு
கோட ளாவி ம்ருகமத கற்புர
குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன

16. வினைபுரி பவனி தொழுதழு துருகிய கோதையர்
தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன

17. இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளித
னாசி தேசி பயிரவி குச்சரி
பஞ்சு ரந்தெ ரிந்து வீணைக் கிசைந்தன

18. இறுதியில் உதய ரவிகண நிகரென ஆறிரு
காது தோயும் இலகும ணிக்கன
விம்ப குண்ட லங்கள் மேவிப் புரண்டன

19. எதிர்படு நெடிய தருஅடு பெரிய கடாம்உமிழ்
நாக மேகம் இடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின

20. எழுதரும் அழகு நிறமலி திறல்இசை யாக, உ
தார தீரம் என உரை பெற்ற, அ
டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின

21. இருள்பொரு கிரண இரணிய வடகுல பாரிய
மேரு சாதி இனமென ஒத்துல
கங்கள் எங்க ணும்ப்ர காசித்து நின்றன

22. இயன்முநி பரவ ஒருவிசை அருவரை யூடதி
பார கோர இவுளிமு கத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன

23. இபரத துரக நிசிசரர் கெடஒரு சூரனை
மார்பு பீறி அவனுதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி ஆடிச் சிவந்தன

24. எவையெவை கருதில் அவையவை தருகொடை யால்மணி
மேக ராசி சுரபிய வற்றொடு
சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன

25. அசைவற நினையும் அவர்பவம் அகலவெ மேல்வரு
கால தூதரை யுடையும் அப்படி
அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன

26. அகிலமும் எனது செயலல திலையென யானென
வீறு கூறி அறவுமி குத்தெழும்
ஐம்பு லன்தி யங்கி வீழத் திமிர்ந்தன

27. அனலெழு துவசம் உடுகுலம் உதிரவி யோமமும்
ஏழு பாரும் அசலமும் மிக்கபி
லங்க ளுக்கு லுங்க ஆலித் ததிர்ந்தன

28. அடல்நெடு நிருதர் தளமது மடிய வலாரிதன்
வானை ஆள அரசுகொ டுத்தப
யம்பு குந்த அண்ட ரூரைப் புரந்தன

29. அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாடல் அளிமுரல் செச்சைய
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன

30. அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொழு தேகவி
மாலை யாக அடிமைதொ டுத்திடு
புன்சொல் ஒன்று நிந்தி யாமற் புனைந்தன

31. அழகிய குமரன் உமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழும் அறுவர் ப்ரியப்படு
கந்தன் எந்தை யிந்த்ர நீலச் சிலம்பினன்

32. **அநுபவன் அநகன் அன்னியன் அமலன் அமோகன்அ**
**நேகன் ஏகன் அபினவன் நித்தியன்**
**அஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே**

## (பாடல்) சொற்பிரிவு (15)

1. வசை தவிர் ககன சர சிவகரண மகாவ்ருத
சீல சாலவரம் முனி சித்திரை
அஞ்சல் அஞ்சல் என்று வாழ்வித்து நின்றன

2. மணிவடம் மழலை உடைமணி தபனிய நாண்
அழகாக நாடி வகைவகை கட்டு
மருங்குடன் பொருந்து ரீதிக்கு இசைந்தன

3. வருணித கிரணம் அருணித வெகு தருண ஆதப
சோதி ஆடை வடிவு பெறப்புனை
திண் செழும் குறங்கின் மேல் வைத்து அசைந்தன

4. வளை கடல் உலகை வலம் வரு பவுரி வினோத
கலாபம் கோபம் மயில் வதனத்து
விளங்கும் அங்குசம் கடாவிச் சிறந்தன

5. வரை பக நிருதர் முடி பக மகரம் மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்து அயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

6. மதிஎன உதய ரவிஎன வளைபடு தோல்
விசாலம் நீலமலி பரிசைப்படை
கொண்டு நின்று உழன்று சாதிக்க முந்தின

7. மண குண சலனம் மலினம் இல் துரிய அதீத
சுகானுபூதி மவுன நிரக்ஷர
மந்திரம் பொருந்தி மார்பில் திகழ்ந்தன

8. வகை வகை குழுமி மொகு மொகு மொகென அநேக
சமூக ராகம் மதுபம் விழச் சிறு
சண்பகம் செறிந்த தாரில் பொலிந்தன

9. மிசை மிசை கறுவி வெளிமுகடு அளவு நிசாசர
சேனை தேடி விததிபெறச் சில
கங்கணம் கறங்க மீதில் சுழன்றன

10. வெருவுவ வெருவ எரிசொரி விழியுள பூத
பிசாசு போத மிகுதொனி பற்றி
முழங்கு விஞ்சு கண்டை வாசிக்கை கொண்டன

11. விதமிகு பரத சுரவனிதையர் கணம் மேல்தொறும்
லீலையாக விமல சலத்தினை
விண்திறந்து மொண்டு வீசிப் பொலிந்தன

12. விதரண தருவின் மலரிடை செருகிய கூதள
நீப மாலை விபுதர் குலம் குலிசன்
பயந்த செங்கை யானைக்கு இசைந்தன

13. விகசித தமரம் பரிபுரம் முளரி தொழா அபி
ராம வேடர் விமலை தினைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன

14. விதிர்தரு சமரம் முறி கரகமலம் நகாயுதம்
கோழி வீற விதரண சித்ர
அலங்க்ருதம் புனைந்து பூரித்து இலங்கின

15. விரகுடை எனது மனதுடன் அகில் பனி நீர்புழு
கோட அளாவி ம்ருகமதம் கற்பூரம்
குங்குமங் கலந்து பூசித் துதைந்தன

16. வினைபுரி பவனி தொழுது அழுது உருகிய கோதையர்
தூது போக விடும் மதுபக்ஷண
வண்டினந் திரண்டு சூழப் படிந்தன

17. இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளி
தனாசி தேசி பயிரவி குச்சரி
பஞ்சுரம் தெரிந்து வீணைக்கு இசைந்தன

18. இறுதியில் உதயரவி கணம் நிகர்என ஆறிரு
காது தோயும் இலகும் மணிக்கன
விம்பம் குண்டலங்கள் மேவிப் புரண்டன

19. எதிர்படும் நெடிய தரு அடு பெரிய கடாம் உமிழ்
நாகம் மேகம் இடிபட மற்பொரு
திண் சிலம்பு அடங்க மோதிப் பிடுங்கின

20. எழுதரும் அழகும் நிறம் மலி திறல் இசையாக,
உதார தீரம் என உரைபெற்ற,
அடங்கலும் சிறந்து சாலத் ததும்பின

21. இருள்பொரு கிரணம் இரணிய வடகுல பாரிய
மேரு சாதி இனமென ஒத்து
உலகங்கள் எங்கணும் ப்ரகாசித்து நின்றன

22. இயல் முநி பரவ ஒருவிசை அருவரையூடு
அதிபார கோர இவுளி முகத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன

23. இபம் ரதம் துரகம் நிசிசரர் கெட ஒரு சூரனை
மார்பு பீறி அவன் உதிரப்புனல்
செங்களம் துளங்கி ஆடிச் சிவந்தன

24. எவை எவை கருதில் அவை அவை தருகொடையால் மணி
மேக ராசி சுரபி அவற்றொடு
சங்கம் கஞ்சம் பஞ்சசாலத்தை வென்றன

25. அசைவற நினையும் அவர் பவம் அகலவே மேல்வரு
கால தூதரை அடையும் அப்படி
அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன

26. அகிலமும் எனது செயல் அலது இலைஎன யான்என
வீறு கூறி அறவும் மிகுத்து எழும்
ஐம்பு லன்தி யங்கி வீழத் திமிர்ந்தன

27. அனல் எழு துவசம் உடுகுலம் உதிர வியோமமும்
ஏழு பாரும் அசலமும் மிக்க
பிலங்களும் குலுங்க ஆலித்து அதிர்ந்தன

28. அடல் நெடு நிருதர் தளம் அது மடிய வலாரிதன்
வானை ஆள அரசு கொடுத்து
அபயம் புகுந்த அண்ட ஊரைப் புரந்தன

29. அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாடல் அளி முரல் செச்சை
அலங்கல் செங்கடம்பு நேசித்து அணிந்தன

30. அரியதொர் தமிழ் கொடு உரிமையொடு அடிதொழுதே கவி
மாலையாக அடிமை தொடுத்திடு
புன்சொல் ஒன்று நிந்தி யாமல் புனைந்தன

31. அழகிய குமரன் உமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழும் அறுவர் ப்ரியப்படு
கந்தன் எந்தை இந்த்ர நீலச் சிலம்பினன்

**32. அநுபவன் அநகன் அன்னியன் அமலன் அமோகன்**
**அநேகன் ஏகன் அபினவன் நித்தியன்**
**அஞ்சல் என் ப்ரசண்ட வாகைப் புயங்களே**

**பதவுரை :**

வசைதவிர் ககன சரசிவ கரண, மகாவ்ருத, சீல சால, வரமுநி சித்தரை அஞ்சல் அஞ்சல் என்று வாழ்வித்து நின்றன - குற்றம் பழிச்சொல் ஆகியவற்றை அறவே நீக்கியவர்களும், விண்ணில் சஞ்சரிப்பவர்களும் ஆன, சிவ தியானம் நிறைந்த, சிறந்த ஒழுக்கம் வாய்ந்த புண்ணிய ஆத்மாக்களும், அளவற்ற வரங்களைப் பெற்றவர்களும், தவசிகளான சித்த புருஷர்களைப் பயப்படாதீர்கள், அச்சம் வேண்டாம் என அடைக்கலம் கொடுத்தும், அவர்களுக்குச் சிரஞ்சீவி வாழ்வு கொடுத்தும் துணையாக நின்றன (முருகனின் வாகைப் புயங்களே) (ககன சர - பிரமனின் மானச புத்திரர்களான வால கில்லியர் எனும் 60,000 தவ சிரேஷ்டர்கள் அவர்கள் கட்டை விரல் பரிமாணமே உடையவர்கள். சூரியனின் அதி தீவிரமான ஒளி பூவுலகின் மேல் பாய்வதால் எவராலும் தாங்க முடியாது என்று ஆதித்தனின் பவனியின் போது, அவனின் தேரைச் சுற்றி சுற்றி வந்து கேடயம் போல அவனது வெப்பத்தைக் தாங்கள் வாங்கிக்கொண்டு உலகத்திற்கு தேவையான சூட்டை மாத்திரம் கீழே செல்ல விடுகிறார்கள். அவர்கள் காற்றையே உணவாகக் கொள்வார்கள். ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இந்த சீலம் மிக்க தேவ ரிஷிகள், சூரிய வெப்பத்தால் இன்னல் உறாதபடி,

முருகனின் ஒரு கரம் அவர்களைக் காப்பாற்றி சிரஞ்சீவி பதவியைக் கொடுக்கிறது). திருமுருகாற்றுப்படை - 'விண் செலன் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒரு கை' பரிமேல் அழகர் உரை - ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொருத்தல் ஆற்றா எனக் கருதி, தமது அருளால் சுடரோடு திரிந்து, அவ்வெம்மையைப் பெறுகின்ற முனிவரைப் பாதுகாக்கவே ஒரு கை.

மணிவடம் மழலை உடைமணி தபனிய நாண் அழகாக நாடி வகை வகை கட்டு மருங்குடன் பொருந்து ரீதிக்கு இசைந்தன - ரத்ன சரம் மெல்லிய ஓசை எழுப்பும் இடுப்பில் கட்டிய மணி மாலையும் (மொழி புகழும் உடை மணியும்) பொன்னொளி வீசும் அரை ஞாண் இவைகளை மிகவும் விரும்பி வித விதமாகக் கட்டியுள்ள இடுப்பில் சேரும் முறைக்கு ஒத்ததாக விளங்கின, (முருகனின் வாகைப் புயங்களே), திருமுருகாற்றுப்படை - 'உக்கம் சேர்த்தியது ஒரு கை', பரிமேல் அழகர் உரை - ஒரு கையும் ஒரு தொழிலைச் செய்தலின் ஏனைய கைதொழில் இன்றி மருங்கில் கிடந்தது.

வருணித கிரண அருணித வெகு தருண ஆதப சோதி ஆடை வடிவு பெறப் புனை திண் செழும் குறங்கின் மேல் வைத்து அசைந்தன - விவரித்துச் சொல்லத் தக்க ஒளி வீசும் சிவந்த நிறம் மிக்க உதய சூரியனின் பிரகாசத்தைக் கொண்ட உடையை அழகுடன் அணிந்துள்ள வலிமையான செழிப்பான தொடையதின் மேல் வைக்கப்பட்டு அசைந்தன திருமுருகாற்றுப்படை - "நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசையியது ஒரு கை" (முருகனின் வாகைப்புயங்களே)

வளை கடல் உலகை வலம் வரும் பவுரி வினோத கலாப கோப மயில் வதனத்து விளங்கும் அங்குசம் கடாவிச் சிறந்தன - சமுத்திரத்தால் சூழப்பட்ட பூமியை வலமாக சுற்றி சுற்றி மண்டலமிட்டு வரும் அதிசயச் செயலைக் கொண்டதும், தோகை மிகுத்துள்ளதும் ஆன உக்ரமான மயிலின் முகத்தில், ஒளி வீசும் யானைத் தோட்டியைச் செலுத்தி மேன்மையாக விளங்கின. (முருகனின் வாகைப்புயங்களே) திருமுருகாற்றுப்படை - 'அங்குசம் கடாவ ஒரு கை' கோப மயில் - கொடும் கோபச் சூர், மயிலாக மாறியதால் கோப மயில் என்கிறார். போரில் செலுத்தும் போது மயிலுக்கும் அங்குசம் உண்டு என்பதை கந்த புராணம். "கறுவு சமர் அங்குசம் சேர் கை என்கிறது.

வரை பக நிருதர் முடி பக மகர மகோததி தீயின் வாயின் மறுக விதிர்த்து அயில், வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன - க்ரவுஞ்சம், எழு கிரிகள் பிளவு பட, அசுரர்களின் முடிகள் சிதறுண்டு விழ, மகர மீன்கள் நிறைந்துள்ள பெரும் கடல் நெருப்பிடையே கலங்க, அசைத்து கூர்மையும், வெற்றியும் நிலைபெற்றுள்ள பரிசுத்தமான வேலாயுதத்தை அலங்காரமாக ஏந்தி நின்றன. (முருகனின் வாகைப்புயங்களே)

மதி என உதய ரவி என வளை படுதோல், விசால நீல மலி பரிசை படை, கொண்டு நின்று உழன்று சாதிக்க முந்தின - சந்திரன் போலவும், இளம் சூரியன் போலவும், வட்ட வடிவமுடன் ஒளி வீசுவதாய் தோலால் செய்யப்பட்டு, அகன்றுள்ளதாய் கருமை நிறத்துடன் உள்ள கேடயம் எனும் ஆயுதத்தை ஏந்தி நின்று சுழற்றிச் சுழற்றி வெற்றியை அடைய முற்பட்டு விளங்கின. (முருகனின் வாகைப்புயங்களே)

முருகன் அந்தண்மறை வேள்விக் காவற்காரன் ஆதலால் இடர் புரிய வரும் அசுரர்களை கேடயத்தைச் சுழற்றிச் சுழற்றி (விரட்டுகிறான். திருமுருகாற்றுப்படை - மந்திர விதியின் மரபுளி வழா நிற்குமே, ஒரு முறை) காசிபர் திதியால் இயற்றப்பட்ட யாகத்தைக் கெடுக்க தேவர்களால் அனுப்பப்பட்ட மாலயன், மாரன் எனும் அசுரர்களை இளையனார் வேலூரில் அழித்தார். கந்தர் கலி வெண்பா - "அதிர் கேடகம் சுழற்றும் அங்கைத் தலமும்".

மனகுண சலன மலினமில் துரிய அதீத சுகாநுபூதி மவுன நிர் அக்ஷர மந்திரம் பொருந்தி மார்பில் திகழ்ந்தன - மனத்தின் ஓட்டம், குணம் மாறி மாறி இருப்பது, ஒரு நிலை இல்லாமல் ஓடுவது போன்ற மாசு அற்றதாய் யோகியர்கள் தன் மயமாக நிற்கும் நான்காவது நிலைக்கும் மேற்பட்ட துரியாதீதமாகிய - எனதும் யானும் வேறாகி எவரும் யானும் யானாகும் நிலை - துன்பம் கலப்பு இல்லாத இன்பத்தை அனுபவிக்கும் ஞான மயமான மவுன மந்திரம், மனம், வாக்கு, காயம், தொழில்கள் அற்றுப் போக செய்யும் மந்திரம் உரை மாள செயல் மாண்டு சித்தம் அவிழ, எழுத்துக் கணக்குக்கு அப்பாற்பட்டது மௌன மந்திரம் (இதுவே நிர் வசன பிரசங்கம் என்பார்) பொருந்தி மார்பில் சின் முத்திரையுடன் விளங்கின (பசுவாகிய ஆட்காட்டி விரல் பதியாகிய பெருவிரலுடன் சேர்ந்து பாச விரல்கள் மூன்றும் தனித்து விலக நிற்கும் தோற்றம்) முருகனின் வாகைப்புயங்களே திருமுருகாற்றுப்படை - 'ஒரு கை மார்புடன் விளங்க', தேசு பெற நீ வைத்த சின் முத்திரை அங்குசம் செங்கைக்குள்ளே அடக்கி சின்மயானந்த சுக வெள்ளம் படிந்து' - தாயுமானர் "மௌன குரு".

வகைவகை குமுமி மொகுமொகு மொகென அநேக, சமூக ராக மதுபம் விழச்சிறு, சண்பகம் செறிந்த தாரில் பொலிந்தன - கூட்டம் கூட்டமாகத் திரண்டு மொகு மொகு என்ற ஒலியுடன் பலவிதமான இசையுடன் வண்டுகள் விருப்பத்துடன் மேலே வந்து விழ மல்லிகைப் பூ நெருக்கமாகக் கட்டப்பட்ட மாலை மீது விளங்கின (முருகனின் வாகைப்புயங்களே) திருமுருகாற்றுப்படை - 'ஒரு கை தாரொடு பொலிய' "பண்புனை குரல் வழி வண்டு கிண்டிச் செண்பக மலர் பொழில் சிவபுரமே".

மிசைமிசை கறுவி வெளி முகடு அளவு நிசாசரர், சேனை தேடி விததி பெறச் சில, கங்கணம் கறங்க மீதில் சுழன்றன - மேன்மேலும் சிறந்து அண்ட உச்சி வரை அசுரர் சேனைகளின் இருப்பிடங்களைக் கண்டு பிடித்து அவர்கள் பரவி இருந்த இடங்கள் அனைத்தையும் சிதறி அடிக்க தோள் வளை, கை காப்பு முதலியன கிண் என ஒலி எழுப்ப மேலே சுழன்றன. (முருகனின் வாகைப்புயங்களே) திருமுருகாற்றுப்படை 'ஒரு கை கீழ் வீழ் தொடியோடு மீமிசைக் கொப்ப" உரை - ஒரு கை தொடியோடு மேலே சுழன்று கள வேள்விக்கு முத்திரை கொடுப்ப.

வெருவுவ வெருவ எரிசொரி விழி உள பூத, பிசாசு போத மிகு தொனி பற்றி, முழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன - மற்றவர்கள் பயந்து ஒதுங்கும் துஷ்ட மிருகங்களும் பயப்படும் படியும், தீயைக் கக்குகின்ற கண்கள் உள்ள பேய்களும், பிசாசுகளும் ஓடிப் போகும் படி பலத்த சத்தத்துடன் ஒலி மிகுத்துள்ள கண்டா மணியை வாசிக்க முற்பட்டன. (முருகனின் வாகைப் புயங்களே) திருமுருகாற்றுப்படை - "ஒரு கை பாடின் படுமணி இரட்ட" உரை - மற்றொரு கை ஓசை இனிதாகிய ஒலிக்கின்ற மணியை மாறி ஒலிக்கப்பண்ண, முருகன்

கையில் மணி உண்டு என்பதை கந்த புராணமும், ''வீறு கேதனம் வஜ்ரம், அங்குசம், விசிகம், மாறிலாத வேல் அபயமே வலம், இடம் வரதம், ஏறு பங்கயம், மணி, மழுத்தண்டு, வில், இசைந்த ஆறிரண்டுகை ஆறு முகம்'' எனக்கூறும் பூத பிசாசுகள் சேட்டைகள் மிகுந்த இடங்களில் சேவல் விருத்தம் போல இந்த வகுப்பையும் பாராயணம் செய்வது நல்ல பலனைத் தரும். குமார தந்திரத்தில் 6 ஆவது மூர்த்தியானது சரவணபவ மூர்த்தம் அதன் தியான சுலோகம் பின் வருமாறு:-

சக்திம் கண்டாம் த்வஜஸரஸிஜே குக்குடம் பாசதண்டௌ
டங்கம் பாணம் வரதம் அபயம் கார் முகம் சோத்வஹந்தம்
பீதம் ஸௌம்யம் த்விதசநயநம் தேவஸங்கைரு பாஸ்யம் ! ஸத்பி;
பூஜ்யம் சரவணபவம் ஷண்முகம் பாவயாமி :

விதமிகு பரத சுரவனிதையர் கணம் மேல்தொறும் லீலை யாக விமல சலத்தினை விண் திறந்து மொண்டு வீசிப் பொலிந்தன - பலவகையான பரதக் கலையில் வல்லுனரான தேவ ஸ்திரிகள் கூட்டத்தில் ஒவ்வொருவர் மேலும் (அவர் ஆடும் போது) விளையாட்டாக தூய ஆகாச கங்கையின் ஜலத்தை ஆகாயத்திலிருந்து வருவதற்கு வழி திறந்து அந்நீரை அள்ளி அம் மாதர்கள் மேல் தெளித்து விளங்கின. (முருகனின் வாகைப் புயங்களே). திருமுருகாற்றுப்படை ''ஒரு கை நீல் நிற விசும்பின் மலிதுளி பொழிய'', உரை - ஒரு கை நீல நிறத்தை உடைய மேகத்தாலே மிக்க மழையைப் பொழியா நிற்க. இல் வாழ்வு சிறக்க மழையைப் பொழிவித்தது ஒரு கை.

விதரண தருவின் மலரிடை செருகிய கூதள நீப மாலை விபுதர் குலக், குலிசன் பயந்த செங்கை யானைக்கு இசைந்தன - கொடைக்குப் பேர் போன கற்பக மரத்தின் மலர்கள் நடு நடுவில் வைத்து கோர்க்கப்பட்ட கூதள கடப்ப மாலைகளைத் தேவ வம்சத்தினரான வஜ்ரப்படை ஏந்திய இந்திரன் வளர்த்த சிவந்த கையை உடைய தேவயானைக்குச் சூட்டுவதற்கு உடன் பட்டன (முருகனின் வாகைப்புயங்களே), திருமுருகாற்றுப்படை - ''ஒரு கை வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட'' உரை - ஒரு கை இல் வாழ்க்கைச் சிறப்பாக நிகழ்தல் பொருட்டு மண மாலையைச் சூட்டிற்று.

விகசித தமர பரிபுர முளரி தொழா, அபி ராம வேட்ர் விமலை தினைப்புன, மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன - மலர்ந்துள்ளதும் ஒலி செய்கின்றதுமாகிய பாதச் சலங்கைகள் அணிந்துள்ள தாமரையன்ன திருவடிகளை வணங்கி அந்த அழகு நிறைந்த வேடர்களின் பெண் பரிசுத்தை, தினைக் கொல்லையில் வசித்து வந்த வள்ளியின் மார்பைப் பார்ப்பதற்காக (அதாவது அவளின் பக்குவ நிலையை அறிய) தக்க சமயம் பார்த்து அணைந்தன (முருகனின் வாகைப் புயங்களே) ''மேவிய புனத்து இதணில் ஒவியமெனத் திகழும் மேதகு குறத்தி திருவேளைக்காரனே''.

விதிர்தரு சமர முறிகர கமல நக ஆயுத, கோழி வீற விதரன சித்ர, அலங்க்ருதம் புனைந்து பூரித் திலங்கின - நடுங்கச் செய்யும் போரில் எதிரிகளை அடக்கி அழிக்க வல்ல தனது தாமரையன்ன கையில், கால் நகங்களையே ஆயுதமாகக் கொண்டு சண்டை போடும் (காலாயுதக் கொடியோன்) சேவல் கொடி மேம்பட்டு விளங்க (சேவலங் கொடியான பைங்கர)

கொடையில் சிறந்த அழகிய அலங்காரம் உடையதானதைத் தரித்துக் கொண்டு கம்பீரமாக நின்றன (முருகனின் வாகைப் புயங்களே) விதரண - ''வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்டுமளவில் உதவும் பெருமாளே'' (கோங்க எனத் தொடங்கும் கழுகு மலைத் திருப்புகழ்)

விரகுடை எனது மனதுடன் அகில்பனி நீர்புழு, கோட ளாவி ம்ருகமத கற்புர, குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன - கபடம் மிக்க எனது மனதை தன் வசமாக்கி அகில் பன்னீர் புனுகுச் சட்டம் இவைகளுடன் என் மனதையும் கலந்து, கஸ்தூரி பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ சேர்ந்த இந்தக் கலவையை பூசிக் கொண்டு பிரகாசித்தன. (முருகனின் வாகைப் புயங்களே) அழுக்கும், துர்நாற்றமும் மிக்க என் மனதைப் பக்தியினால் பண்படையச் செய்து தன்னுடன் சேர்த்துக் கொண்டன. ''எனையும் மனதோடு அடிமை கொளவும் வரவேணும்'' - கடம்பையும் என் நெஞ்சையும் தாளிணைக்கே புகட்டிப் பணியப் பணித்தருள்வாய் (கந்தரலங்காரம்).

வினை புரி பவனி தொழுது அழுது உருகிய கோதையர், தூது போக விடும் மது பக்ஷண, வண்டு இனம் திரண்டு சூழப் படிந்தன - தன்னைக் காணும் பெண்களின் உள்ளத்தில் விரகப்போரை உண்டாக்கும், உலாக் காட்சியைக் கண்டு வணங்கி அழுது மனம் நொந்த மாதர்கள் உன்னிடம் காதல் தூதாக அனுப்பிய தேன் உண்ணும் வண்டுகள் கூட்டமாகச் சேர்ந்து மொய்த்திருந்தன. (முருகனின் வாகைப்புயங்களே).

''வண் தரங்கப் புனற்கமல மதுமாந்திப் பேடையினொடும்
ஒண் தரங்க இசைபாடும் அளி அரசே ஒளிமதியத் துண்டர்
அங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க்கு என் நிலைமை பரிந்து ஒருசொல் பகராயே (தேவாரம்)

இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளி, தனாசி தேசி பயிரவி குச்சரி, பஞ்சுரம் தெரிந்து வீணைக்கு இசைந்தன - இராகங்களில் இனிமையான கைசிகை முதலிய ராகங்களின் இலக்கணத்தை அறிந்து கொண்டு அவற்றை வீணையில் அமைத்து மீட்டுவன. (முருகனின் வாகைப் புயங்களே) முருகன் பல ராகங்களில் பிரியம் கொண்டவர் - (ராக விநோதன்). சிவபிரானும் வீணை வாசிப்பார் - ''விடமுண்ட கண்டன் மிக நல்ல வீணை தடவி'' அது போல் முருகனும் தணிகை மலையில் பல வாத்தியங்களை வாசித்து விளையாடுவார் என்பதை கந்த புராணம், ''கோடு இயம்பியும் வேங்குழல் ஊதியும், குரலால் நீடு தந்திரி இயக்கியும்'' மேலும் அருணகிரியார் தனது படைப்புகளில் ராகங்களைப் பற்றி கூறுகையில், இதத்த கயிசிகம் - வகுப்பு, கௌட பைரவி - பூத வேதாள வகுப்பு, 'காலமாறாத வராளி' - புய வகுப்பு தனதனாசி - பூதவேதாள வகுப்பு சாதாரி தேசி நாதநாமக்ரியா பாதாள மாதி'' எனத் தொடங்கும் விராலி மலைத் திருப்புகழ்.

இறுதிஇல் உதய ரவிகண நிகரென ஆறிரு, காது தோயும் இலகு மணிக் கன, விம்ப குண்டலங்கள் மேவிப் புரண்டன - எல்லையற்ற ஒளி வீசும் உதய சூரியனுக்கு ஒப்பான 12 காதுகளில் நிலை பெற்று விளங்கும் ரத்ன பொன் மயமான பிரகாசிக்கும் குண்டலங்கள் பொருந்தப் பெற்று விளங்கின (முருகனின் வாகைப்புயங்களே) (மின் குலவு நவரத்ன மகர குண்டலம் ஆட).

எதிர்படு நெடிய தருஅடு பெரிய கடாம் உமிழ் நாக மேகம் இடிபட மற்பொரு, திண் சிலம்பு அடங்க மோதிப் பிடுங்கின - எதிரே தென்படும் நீண்ட மரங்களை அழிப்பனவாய் அபரிவிதமான மத நீரை வெளிப்படுத்துகின்ற அஷ்ட திக்கு யானைகள் இடி மேகங்கள் போல் ஒன்றோடு ஒன்று மோதிப் பேரொலி செய்ய மற்போர் செய்வித்து வலிமையான அஷ்ட கிரிகளையும் தாக்கிப் பிடுங்கி எறிய வல்லன. (முருகனின் வாகைப்புயங்களே) கந்த புராணம் பேசுகிறது - ''ஆசையங்கிரிகள் தம்மை அங்கை கொண்டு ஒன்றோடு ஒன்று பூசல் செய்விக்கும். குலகிரி அனைத்தும் ஓர் பால் கூட்டிடும் அவற்றைப் பின்னர்த் தலை தடுமாற்றமாகத் தரையினில் நிறுவும்''.

எழுதரும் அழகு நிறம் மலி திறல் இசையாக உதார தீரம் என உரை பெற்ற, அடங்கலும் சிறந்து சாலத் ததும்பின - சித்தரித்துக் கூற அரிதான அழகும் ஒளியும் மேம்பட்ட வீரச் செயல்களும், பிறரால் புகழப்பட்டு இலகு தயாள குணம் வீரம் என்று பேசப்பட்ட அனைத்து நற்பண்புகளுக்கும் இடம் என மேலோங்கி விளங்கின (முருகனின் வாகைப்புயங்களே) (பழுதுறாத பாவாணர் எழுதொணாத தோள் வீர).

இருள்பொரு கிரண இரணிய வடகுல பாரிய மேரு சாதி இனம் என ஒத்து, உலகங்கள் எங்கணும் ப்ரகாசித்து நின்றன - இருளை விலக்குவதும் ஒளி வீசுவதும் பொன் மயமானதும் வட திசையில் விளங்குவதும் சிரேஷ்டமானதும் பருத்ததுமாகிய மேரு மலைக் கூட்டங்களின் ஜாதி போல் திகழ்ந்து அனைத்து உலகங்களிலும் ஒளி வீசி நின்றன (முருகனின் வாகைப்புயங்களே).

இயன்முநி பரவ ஒரு விசை அருவரை ஊட்தி பார கோர இவுளி முகத்தவள், கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன - முத்தமிழில் சிறந்த தேர்ச்சி பெற்ற நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடித் துதித்த போது முன்பு திருப்பரங்குன்றத்தில் பெரிய மலைக் குகையில் மிகப் பெரிய பயங்கரமான குதிரை முகம் கொண்ட கற்கிமுகி எனும் பூதத்தின் பெரிய தனங்களை உடைய மார்பைப் பிளந்து அழித்தன (முருகனின் வாகைப்புயங்களே) (அருவரை திறந்து வன்சங்க்ராம கற்கிமுகி அபயமிட அஞ்சல் எனஅங்கீரனுக்கு உதவி) பூவேதாள வகுப்பு.

இபரத துரக நிசிசரர் கெட ஒரு சூரனை மார்பு பீறி அவன் உதிரப் புனல், செங்களம் துளங்கி ஆடிச் சிவந்தன - யானைப்படை, ரதப்படை, குதிரைப்படை கொண்ட அரக்கர்கள் அழிந்து போகவும், ஒப்பற்ற சூரபத்மனின் மார்பைப் பிளந்து அவனது இரத்த வெள்ளத்தால் சிவந்திருந்த போர் பூமி கலங்கும்படி பரவச் செய்து கோபித்தன. (முருகனின் வாகைப்புயங்களே).

எவை எவை கருதில் அவை அவை தரு கொடையால் மணி, மேக ராசி சுரபி அவற்றோடு, சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன - அடியார்கள் என்ன என்ன விரும்பினாலும் அவைகள் அனைத்தையும் வருவித்துத் தரும் வள்ளல் தன்மையில் (''அடியவர் இச்சையில் எவை எவை உற்றன அவை தருவித்தருள் பெருமாளே''), சிந்தாமணி, மேகக்கூட்டங்கள், காமதேனு இவைகளுடன் சங்க நிதி, பதும நிதி இரண்டையும் தெய்வ தருக்களான கற்பகம் முதலிய ஐந்து கூட்டத்தையும் ஜெயித்து விளங்கின. (முருகனின் வாகைப்புயங்களே)

அசைவற நினையும் அவர் பவம் அகலவெ மேல் வரு, கால தூதரை உடையும் அப்படி, அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன - சலனமின்றி ஏக சித்த தியானம் செய்பவர்களின் (''எழுதிய படமென இருளறு சுடரடி இணைதொழு மௌனிகள்'') பிறவித் துன்பம் நீங்க அவர்களைப் பிடிக்கவரும் எமதூதர்கள் சிதறி ஓடும் படி பல திசைகளிலும் அவர்களைத் துரத்தி வெற்றி கண்டன. (முருகனின் வாகைப்புயங்களே) ''எமபடர் தொடர்ந்து அழைக்கில் அவருடன் எதிர்ந்து உள் உட்க இடி என முழங்கி வெற்றி பேசலாம்'' - கடைக்கண்ணியல் வகுப்பு.

அகிலமும் எனது செயலலது இலையென யான் என, வீறு கூறி அறவு மிகுத்து எழும், ஐம்புலன் தியங்கி வீழத் திமிர்ந்தன - அனைத்தும் எனது சொந்த முயற்சியே தவிர வேறு எவருடைய உதவியும் கிடையாது என்று பெருமை பேசி நான் நான் எனும் இறுமாப்புடன் மேலே கிளம்பி மிகவும் துள்ளுகின்ற பஞ்சேந்திரியங்கள் சோர்ந்து ஒடுங்கும்படி அவற்றின் மேலே விழுந்து அடிப்பன (முருகனின் வாகைப்புயங்களே) (நானா என வரு முத்திரை அழதர).

அனல் எழு துவசம் உடுகுலம் உதிர வியோமமும், ஏழு பாரும் அசலமும் மிக்க, கபிலங்களும் குலுங்க ஆலித்து அதிர்ந்தன - பெரும் சினத்துடன் வரும் கொடிய சேவல், நட்சத்திரக் கூட்டங்கள் சிதறி விழும்படி ஆகாய வெளியும் ஏழு உலகங்களும் மலைகளும் பெரிய பாதாள லோகங்களும் அதிரும்படி பெரும் கூக்குரல் செய்து ஆரவாரித்தன. இப்படிப்பட்ட சேவல் கொடியை ஏந்தி இருப்பன. (முருகனின் வாகைப்புயங்களே).

அடல்நெடு நிருதர் தளம் அது மடிய வலாரி தன், வானை ஆள அரசு கொடுத்து, அபயம் புகுந்த அண்டர் ஊரைப் புரந்தன - வலிமை மிக்க அசுரர்களின் சேனைகள் இறந்து ஒழிய, இந்திரன் தனது விண்ணுலகை ஆள, அரசாட்சியைத் தந்து தம்மிடம் சரண் அடைந்த தேவர்களின் அமராவதியைக் காப்பாற்றின. (முருகனின் வாகைப்புயங்களே) (நாகாந்த அரசாளும்படி படி வா வா வா என்று அழைத்து வானோர் பரிதாபம் தவிர்த்த பெருமாளே).

அடவியில் விளவு தளவு அலர் துளவு குரா மகிழ், கோடல் பாடல் அளிமுரல் செச்சை, அலங்கல் செங்கடம்பு நேசித்து அணிந்தன - காட்டில் வளருகின்ற விளா இலைகள், முல்லை மலர், துளசி, குராமலர், மகிழ மலர், வெண் காந்தள், பாதிரிப்பூ, வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற வெட்சி மாலை, சிவந்த கடப்ப மாலை முதலியவற்றை விரும்பி சூடிக் கொண்டன (முருகனின் வாகைப்புயங்களே).

அரியது ஓர் தமிழ் கொடு உரிமையொடு அடிதொழுதே கவி, மாலையாக அடிமை தொடுத்திடு, புன்சொல் ஒன்று நிந்தியாமல் புனைந்தன - ஒப்பற்ற தமிழில் வழி வழி அடிமை எனும் உரிமையோடு திருப்பாதங்களை வணங்கி பாடல் தொகுதியான இந்த அடியேன் புனைந்த அற்பமான வார்த்தைகளை இகழாமல் ஏற்றுக் கொண்டன. (முருகனின் வாகைப்புயங்களே) ''முடிய வழி வழி அடிமை எனும் உரிமை அடிமை முழுதும் உலகறிய மழலை மொழி கொடுபாடும் ஆசு கவி - மாலை சூடுவதும் - சீர்பாத வகுப்பு, ''மல்லேபுரி பன்னிரு வாகுவில் என் சொல்லே புனையும் சுடர் வேலவனே''- அநுபூதி ''அடியேன் உரைத்த புன் சொல் அது மீது நித்தமும் தண் அருளே தழைத்து உகந்து வரவேணும்'' கடிமா மலர் எனத்தொடங்கும் சுவாமிமலைத் திருப்புகழில் விடுத்த வேண்டுகோளை முருகப் பெருமான் ஏற்றுக்கொண்டு விட்டார் என்பதை உணர்ந்து மேற்கண்ட வரிகள் பாடப்பட்டன.

அழகிய குமரன் உமை திரு மதலை பகீரதி, மாதர் வாழும் அறுவர் ப்ரியப்படு, கந்தன் எந்தை இந்த்ர நீலச் சிலம்பினன் - அழகு மிக்க குமாரக்கடவுள், பார்வதி தேவியின் செல்வப் புதல்வன், கங்கையும் ஆறு கார்த்திகை மாதர்களும் அன்பு செலுத்தும் கந்தசுவாமி, எனக்குத் தந்தையானவன், இந்திரன் வளர்த்த நீலோற்பல பூ மலரும் திருத்தணிகை மலையான்.

அநுபவன் அநகன் அன்னியன் அமலன் அமோகன், அநேகன் ஏகன் அபினவன் நித்தியன், அஞ்சல் என் ப்ரசண்ட வாகைப் புயங்களே - ஆன்மாக்களுக்கு இன்ப துன்ப உணர்வை நுகரச் செய்பவன், பாவம் அற்றவன், ஜீவாத்மாவை விட்டு வேறுபடாத பரமாத்மா, மலம் நீங்கிய தூயவன், இச்சையற்றவன், பல் பொருளாகக்காட்சி தருபவன், ஒரே நித்தியப் பொருளானவன், புதியவன், அழிவற்றவன் ஆகிய முருகப்பெருமானின் பயப்படாதே என குறிப்பு காட்டும் வெற்றி தங்கும் வீர பன்னிரு திருக்கரங்களே (வாகைப்புயங்களே).

**பொழிப்புரை :**

குற்றம் பழிச்சொல் ஆகியவற்றை அறவே நீக்கியவர்களும், விண்ணில் சஞ்சரிப்பவர்களும் சிவ தியானம் நிறைந்த, சிறந்த ஒழுக்கம் வாய்ந்த புண்ணிய ஆத்மாக்களும், அளவற்ற வரங்களைப் பெற்றவர்களும், தவசிகளான சித்த புருஷர்களைப் பயப்படாதீர்கள், அச்சம் வேண்டாம் என அடைக்கலம் கொடுத்து, அவர்களுக்குச் சிரஞ்சீவி வாழ்வு கொடுத்து துணையாக நின்றன.

ரத்ன சரம் மெல்லிய ஓசை எழுப்பும் இடுப்பில் கட்டிய மணி மாலையும் (மொழி புகழும் உடை மணியும்) பொன்னொளி வீசும் அரை ஞாண் இவைகளை மிகவும் விரும்பி வித விதமாகக் கட்டியுள்ள இடுப்பில், சேரும் முறைக்கு ஒத்ததாக விளங்கின.

விவரித்துச் சொல்லத் தக்க ஒளி வீசும் சிவந்த நிறம் மிக்க உதய சூரியனின் பிரகாசத்தைக் கொண்ட உடையை, அழகுடன் அணிந்துள்ள வலிமையான செழிப்பான தொடையதின் மேல் வைக்கப்பட்டு அசைந்தன.

சமுத்திரத்தால் சூழப்பட்ட பூமியை, வலமாக சுற்றிச்சுற்றி மண்டலமிட்டு வரும் அதிசயச் செயலைக் கொண்டதும் தோகை மிகுத்துள்ளதும் ஆன உக்ரமான மயிலின், முகத்தில் ஒளி வீசும் யானைத் தோட்டியைச் செலுத்தி மேன்மையாக விளங்கின.

க்ரவுஞ்சம், எழு கிரிகள் பிளவு பட, அசுரர்களின் முடிகள் சிதறுண்டு விழ, மகர மீன்கள் நிறைந்துள்ள பெரும் கடல் நெருப்பிடையே கலங்க, அசைத்து கூர்மையும், வெற்றியும் நிலைபெற்றுள்ள பரிசுத்தமான வேலாயுதத்தை அலங்காரமாக ஏந்தி நின்றன.

சந்திரன் போலவும் இளம் சூரியன் போலவும் வட்ட வடிவமுடன் ஒளி வீசுவதாய்த் தோலால் செய்யப்பட்டு அகன்றுள்ளதாய் கருமை நிறத்துடன் உள்ள கேடயம் எனும் ஆயுதத்தை ஏந்தி நின்று சுழற்றிச்சுழற்றி வெற்றியை அடைய முற்பட்டு விளங்கின.

மனத்தின் ஓட்டம், குணம் மாறி மாறி இருப்பது, ஒரு நிலை இல்லாமல் ஓடுவது போன்ற மாசு அற்றதாய் யோகியர்கள் தன் மயமாக நிற்கும் நான்காவது நிலைக்கும் மேற்பட்ட துரியாதீதமாகிய - துன்பம் கலப்பு இல்லாத இன்பத்தை அனுபவிக்கும் ஞான மயமான மவுன மந்திரம், (மனம், வாக்கு, காயம், தொழில்கள் அற்றுப் போகச்செய்யும் மந்திரம்) எழுத்து

கணக்குக்கு அப்பாற்பட்டது மௌன மந்திரம் பொருந்தி மார்பில் சின் முத்திரையுடன் விளங்கின.

கூட்டம் கூட்டமாகத் திரண்டு மொகு மொகு என்ற ஒலியுடன் பலவிதமான இசையுடன் வண்டுகள் விருப்பத்துடன் மேலே வந்து விழ, மல்லிகைப் பூ நெருக்கமாகக் கட்டப்பட்ட மாலை மீது விளங்கின.

மேன்மேலும் சிறந்து அண்ட உச்சி வரை, அசுரர் சேனைகளின் இருப்பிடங்களைக் கண்டு பிடித்து, அவர்கள் பரவி இருந்த இடங்கள் அனைத்தையும் சிதறி அடிக்கத் தோள் வளை, கை காப்பு முதலிய கிண் என ஒலி எழுப்ப மேலே சுழன்றன.

மற்றவர்கள் பயந்து ஒதுங்கும் துஷ்ட மிருகங்களும் பயப்படும் படியும், தீயைக் கக்குகின்ற கண்கள் உள்ள பேய்களும், பிசாசுகளும் ஓடிப் போகும் படி பலத்த சத்தத்துடன் ஒலி மிகுத்துள்ள கண்டா மணியை வாசிக்க முற்பட்டன.

பலவகையான பரதக் கலையில் வல்லுனரான தேவ ஸ்திரிகள், கூட்டத்தில் ஒவ்வொருவர் மேலும் (அவர் ஆடும் போது) விளையாட்டாகத் தூய ஆகாச கங்கையின் ஜலத்தை ஆகாயத்திலிருந்து வருவதற்கு வழி திறந்து, அந்நீரை அள்ளி அம் மாதர்கள் மேல் தெளித்து விளங்கின.

கொடைக்குப் பேர் போன கற்பக மரத்தின் மலர்கள், நடு நடுவில் வைத்து கோர்க்கப்பட்ட கூதள கடப்ப மாலைகளை, தேவ வம்சத்தினரான வஜ்ரப்படை ஏந்திய இந்திரன் வளர்த்த சிவந்த கையை உடைய தேவயானைக்குச் சூட்டுவதற்கு உடன்பட்டன.

மலர்ந்துள்ளதும் ஒலி செய்கின்றதுமாகிய பாதச் சலங்கைகள் அணிந்துள்ள தாமரையன்ன திருவடிகளை வணங்கி, அந்த அழகு நிறைந்த வேடப் பெண், பரிசுத்தை, தினைக் கொல்லையில் வசித்து வந்த வள்ளியின் மார்பைப் பார்ப்பதற்காக (அதாவது அவளின் பக்குவ நிலையை அறிய) தக்க சமயம் பார்த்து அணைந்தன.

நடுங்கச் செய்யும் போரில் எதிரிகளை அடக்கி அழிக்க வல்ல தனது தாமரையன்ன கையில், கால் நகங்களையே ஆயுதமாகக் கொண்டு சண்டை போடும் (காலாயுதக் கொடியோன்) சேவல் கொடி மேம்பட்டு விளங்க, கொடையில் சிறந்த அழகிய அலங்காரம் உடையதானதைத் தரித்துக் கொண்டு கம்பீரமாக நின்றன.

கபடம் மிக்க எனது மனதை தன் வசமாக்கி, அகில் பன்னீர் புனுகுச் சட்டம் இவைகளுடன் என் மனதையும் கலந்து, கஸ்தூரி பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ சேர்ந்த இந்தக் கலவையை பூசிக் கொண்டு பிரகாசித்தன.

தன்னைக் காணும் பெண்களின் உள்ளத்தில் விரகப் போரை உண்டாக்கும். உலாக் காட்சியைக் கண்டு வணங்கி அழுது மனம் நொந்த மாதர்கள் உன்னிடம் காதல் தூதாக அனுப்பிய தேன் உண்ணும் வண்டுகள் கூட்டமாகச் சேர்ந்து மொய்த்திருந்தன.

இராகங்களில் இனிமையான கைசிகை முதலிய ராகங்களின் இலக்கணத்தை அறிந்து கொண்டு அவற்றை வீணையில் அமைத்து மீட்டுவன.

எல்லையற்ற ஒளி வீசும் உதய சூரியனுக்கு ஒப்பான பன்னிரண்டு காதுகளில் நிலை பெற்று விளங்கும் ரத்ன பொன் மயமான பிரகாசிக்கும் குண்டலங்கள் பொருந்தப் பெற்று விளங்கின.

எதிரே தென்படும் நீண்ட மரங்களை அழிப்பனவாய், அபரிவிதமான மத நீரை வெளிப்படுத்துகின்ற அஷ்ட திக்கு யானைகள், இடி மேகங்கள் போல் ஒன்றோடு ஒன்று மோதி பேரொலி செய்ய மற்போர் செய்வித்து, வலிமையான அஷ்ட கிரிகளையும் தாக்கிப் பிடுங்கி எறிய வல்லன.

சித்தரித்துக் கூற அரிதான அழகும் ஒளியும் மேம்பட்ட வீரச் செயல்களும், பிறரால் புகழப்பட்டு, இலகு தயாள குணம் வீரம் என்று பேசப்பட்ட, அனைத்து நற்பண்புகளுக்கும் இடம் என மேலோங்கி விளங்கின.

இருளை விலக்குவதும், ஒளி வீசுவதும் பொன் மயமானதும், வட திசையில் விளங்குவதும், சிஷ்டமானதும் பருத்ததுமாகிய மேரு மலைக் கூட்டங்களின் ஜாதி போல் திகழ்ந்து அனைத்து உலகங்களிலும் ஒளி வீசி நின்றன.

முத்தமிழில் சிறந்த தேர்ச்சி பெற்ற, நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடித்துதித்த போது முன்பு திருப்பரங்குன்றத்தில் பெரிய மலைக் குகையில் மிகப் பெரிய பயங்கரமான குதிரை முகம் கொண்ட, கற்கிமுகி எனும் பூதத்தின் பெரிய தனங்களை உடைய மார்பைப் பிளந்து அழித்தன.

யானைப்படை, ரதப்படை, குதிரைப்படை கொண்ட அரக்கர்கள் அழிந்து போகவும், ஒப்பற்ற சூரபத்மனின் மார்பைப் பிளந்து அஃவனது இரத்த வெள்ளத்தால் சிவந்திருந்த போர் பூமி கலங்கும்படி பரவச் செய்து கோபித்தன.

அடியார்கள் என்ன என்ன விரும்பினாலும் அவைகள் அனைத்தையும் வருவித்துத் தரும் வள்ளல் தன்மையில் சிந்தாமணி, மேகக்கூட்டங்கள், காமதேனு இவைகளுடன் சங்க நிதி, பதும நிதி இரண்டையும், தெய்வ தருக்களான கற்பகம் முதலிய ஐந்து கூட்டத்தையும் ஜெயித்து விளங்கின.

சலனமின்றி ஏக சித்த தியானம் செய்பவர்களின் பிறவித் துன்பம் நீங்க, அவர்களைப் பிடிக்கவரும் எமதூதர்கள் சிதறி ஓடும் படி பல திசைகளிலும் அவர்களைத் துரத்தி வெற்றி கண்டன.

அனைத்தும் எனது சொந்த முயற்சியே தவிர, வேறு எவருடைய உதவியும் கிடையாது என்று பெருமை பேசி, 'நான்' 'நான்' எனும் இறுமாப்புடன் மேலே கிளம்பி மிகவும் துள்ளுகின்ற பஞ்சேந்திரியங்கள் சோர்ந்து ஒடுங்கும்படி அவற்றின் மேலே விழுந்து அடிப்பன.

பெரும் சினத்துடன் வரும் கொடிய சேவல், நட்சத்திரக் கூட்டங்கள் சிதறி விழும்படி ஆகாய வெளியும், ஏழு உலகங்களும், மலைகளும், பெரிய பாதாள லோகங்களும் அதிரும்படி பெரும் கூக்குரல் செய்து ஆரவாரித்தன.

வலிமை மிக்க அசுரர்களின் சேனைகள் இறந்து ஒழிய, இந்திரன் தனது விண்ணுலகை ஆள, அரசாட்சியைத் தந்து, தம்மிடம் சரண் அடைந்த தேவர்களின் அமராவதியைக் காப்பாற்றின.

காட்டில் வளருகின்ற விளா இலைகள், முல்லை மலர், துளசி, குராமலர், மகிழ மலர், வெண் காந்தள், பாதிரிப்பூ, வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற வெட்சி மாலை, சிவந்த, கடப்ப மாலை முதலியவற்றை விரும்பி சூடிக் கொண்டன.

ஒப்பற்ற தமிழில் வழி வழி அடிமை எனும் உரிமையோடு திருப்பாதங்களை வணங்கி பாடல் தொகுதியான இந்த அடியேன் புனைந்த அற்பமான வார்த்தைகளை இகழாமல் ஏற்றுக் கொண்டன.

அழகு மிக்க குமாரக்கடவுள், பார்வதி தேவியின் செல்வப் புதல்வன், கங்கையும் ஆறு கார்த்திகை மாதர்களும் அன்பு செலுத்தும் கந்தசுவாமி, எனக்கு தந்தையானவன், இந்திரன் வளர்த்த நீலோற்பல பூ மலரும் திருத்தணிகை மலையான்.

ஆன்மாக்களுக்கு இன்ப துன்ப உணர்வை நுகரச் செய்பவன், பாவம் அற்றவன், ஜீவாத்மாவை விட்டு வேறுபடாத பரமாத்மா, மலம் நீங்கிய தூயவன், இச்சையற்றவன், பல பொருளாகக் காட்சி தருபவன், ஒரே நித்தியப் பொருளானவன், புதியவன், அழிவற்றவன் ஆகிய முருகப்பெருமானின், பயப்படாதே என குறிப்பு காட்டும், வெற்றி தங்கும் வீர திருக்கரங்களே (வாகைப்புயங்களே).

***



# 16. சித்து வகுப்பு

## அறிமுகம்

தாயுமானவர் சித்தர் கணத்தைப்பற்றி பாடும்பொழுது கூறுவார் - 'ஓட்டினை எடுத்து, ஆயிரத்தெட்டு மாற்றாக ஒளிவிடும் பொன்னாக்குவீர்'' என்று. சித்தர்கள் ரச குளிகை என்பதைக் கொண்டு, தாழ் உலோகங்களை பொன்னாக்குவது, உலகமெங்கும் காணப்பட்ட ஒரு நிகழ்ச்சி. இதை இரசவாதம் என்பர். ஆனால், உண்மை ஞானிகளான இந்த சித்தர்கள், இதன் மூலம் பணம் சம்பாதிக்க முயலவில்லை. பிற்காலத்தில் சில போலி சித்தர்கள் புகழும், பொருளும் பெற வேண்டி, மாந்தர்களை ஏமாற்றி பிழைத்து வந்தனர். இந்த போலிகளை நம்பி, தமது செல்வம் எல்லாவற்றையும் இழந்தவர் பல பேர். இந்த நிலையைச், சில திருப்புகழ் பாடல்களிலும் அருணகிரியார் சித்தரித்து, இரசவாத மாய வலையில் சிக்காதீர்கள் என்று எச்சரித்திருக்கிறார். ''இரதாதிகளால் நவலோகம் இடவே கரியாம் இதில் ஏது'' (வரதாமணி) -''கனகம் இயற்றித் திரிந்து துவளும் எனைச்சற்று அறிந்து'' (தலையை மழித்து எனத்தொடங்கும் திருவருணைத் திருப்புகழ்) சாஸ்வதமான சுகத்தைத்தரும் மெய்ப்பொருளை அடைவதற்கு, திருமுருகன் புகழைப் பாடி, அவன் பாதம் எய்துவதே சிறந்த வழி என்கிறார் இந்த வகுப்பில். - மயில் ஏறிய வானவனான அவனே பொன்னும் மணியுமாய்த் திகழ்பவன். நாம் அவனுடைய சாயுஜ்ய நிலையை அடைந்து, நாமே பொன்னாகத் திகழ்ந்தால் நமக்கு இரச வாதம் எதற்காக?

1. தனன தந்த தான தனன தந்த தான
   தனன தந்த தான தனன தந்த தான

2. தனன தனதான தானான தந்த
   தனன தனதான தானான தந்த

3. தான தானன தனதன தந்தன
   தான தானன தனதன தந்தன

4. தனன தானன தனதன தானன
   தனன தானன தனதன தானன

5. தனதன தந்தன தந்தன தானன
   தனதன தந்தன தந்தன தானன

6. தானன தனதன தானந் தந்தன
   தானன தனதன தானந் தந்தன

7. தனதன தனதன தனன தத்தன
   தனதன தனதன தனன தத்தன

8. தத்த தந்த தான தத்தாதன
தத்த தந்த தான தத்தாதன

9. தனன தத்தான தனதன தந்தன
தனன தத்தான தனதன தந்தன

10. தானதன தான தானாந்தன
தானதன தான தானாந்தன

11. தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

12. தான தாத்தன தத்தன தத்தன
தான தாத்தன தத்தன தத்தன

## மூலம்

1. அடல்பு னைந்த வேலு மயிலும் என்றும் வாழி
அரிய தொன்று கூற அருகி ருந்து கேண்மின்

2. அளவில் பலகாய மோடாடி யண்டர்
அறிய விளையாட லாமூலி ஒன்றில்

3. ஆசை வேறிலை அறுமுக வன்திரு
ஆணை மேருவை அடிதலை கண்டனம்

4. அகில லோகமும் அடைவடை வேமுதல்
அருளி னோம்அது சிவனறி யாதல

5. அமையும் எனும்படி நின்ற மநோரதம்
அவைமுழு துந்தரு வம்பத றாது கொள்

6. ஆதியு முடிவுமி லாநந் தந்தரும்
ஆறிரு கரதல நாதன் தந்தவை

## பச்சிலை மூலிகைகள், மருந்து வகைகள் (7.36)

7. அவுஷதம் உளசில கிலுகி லுப்பைகள்
அரசிலை நறுவிலி கரிய கக்கரி

8. அத்தி செம்பி ராகை முட்காவளை
துத்தி சங்கம் ஓரி தழ்த்தாமரை

9. அவுரி கற்றாழை யொடுவைகு றிஞ்சிலி
சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்

10. ஆரைகொடு வேலி வேல்காஞ்சிரம்
வீரையிரு வேலி பேரீ ந்திலை

11. அமுக்குர வெருக்கிலை முருக்கிதழ் செருப்படை
அகத்தி தமரத்தை மதமத்தமொடு பித்திகை

12. ஆலம் ஆத்தி கடுக்கை கொடிக்கழல்
கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை

13. அகில்ப ரம்பை காரை துடரி தும்பை சூரை
அலரி சம்பு நாவல் மருது சிந்து வாரம்

14. அறுகு தழுதாழை மாபாலை புன்கு
புரசு பழுபாகல் பூலா அழிஞ்சில்

15. ஆயி லாவிரை இறலி இரும்பிலி
ஆடி ஆவணி புடமிட என்றழை

16. அவனி பாடல மனல மகீருகம்
இவைச மூலமும் எழுபது சாலடை

17. அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை
பதிமுக வெந்தய மின்கய மோதகம்

18. ஆறிடை அபினிரி தாரங் கந்தகம்
நூறிடை திரிபலை யோரொன் றெண்பலம்

19. அதிவிட யமுமொழி கிருமி சத்ருவும்
அனல்முறு கலுமற முறுகு துத்தமும்

20. அற்பம் ஒன்று கீரை வித்தேழிடை
யத்தில் ஒன்று பாதி தக்கோலமும்

21. அடவி கச்சோல நிமிளை நறும்பிசின்
அரிதம் வெட்பாலை அரிசி கருங்கணி

22. ஆமலகம் ஏலம் நான்மூன்றிடை
சேமசிலை கூட லோகாஞ்சனம்

23. அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர
கசத்தைசத குப்பிவிதை கொத்தமலி திப்பிலி

24. ஆலி கோட்டம் எலிப்பகை சச்சிலை
நீலி காய்ச்சு நிலப்பனை கற்பிசின்;

25. மடல்சி வந்த தாழை மணவ சம்பு நீலம்
வருகு ரும்பை கோடல் துருசு சம்பி ராணி

26. மரிசி வசவாசி காகீச மஞ்சள்
மகிழ விதைமேதை மாமேதை குன்றி

27. வாரி வாய்நுரை சயில சலம்புரி
பூரி வாதுமை சணவுபெ ருங்குமிழ்

28. வடுவில் சீரக பலமயி ரோசனை
கடுகு ரோகணி சிவதைம னோசிலை

29. வகைவகை கொண்டொரு || மண்டல மோரொடு
குகையினில் எண்பது செம்பினில் ஊறவை

30. வாதநல் வழிகள் அநேகம் பண்டையில்
வாகடம் அலகுரு நாதன் தந்தது

31. வழிபடும் அரியர பிரம ருட்பட
மொழிகிற வகையிது சிறிது பெற்றிலர்

32. மற்றும் இந்த்ர சாலம் உச்சாடனம்
முற்று மிங்ங னேத ரத்தாழ்விலை

33. மதலை யர்க்கீது மொழிவது பண்பல
கதவி னிற்றாழை யிடுபயம் ஒன்றிலை

34. வாலுழுவை யோரி காராம்பசு
வாலின்மயிர் கீரி தேவாங்கழை

35. மரித்தவர் சனித்தகுழி உப்புறு சலத்தினை
வடித்தினி தெடுத்தொரு குடத்தினில் நிறைத்துவை

36. மாறில் தோத்திர வித்தை பலித்திடின்
மாடை சேர்க்க வருத்தம் உனக்கிலை

**ரசவாதி கேட்பன (37-72)**

37. மணம தின்று நாளை எனமொ ழிந்து கேளு
மனைகள் எங்கும் ஓடி இனிவி ரைந்து தேடு

38. வளையல் குழைபீலி காலாழி தண்டை
மணிவ யிரவீடு மேலீடு செம்பொன்

39. வாளி பாடக மணிபிறை சங்கிலி
பாளை சூடக மயிலம் இலம்பகம்

40. மவுலி நூபுர மயில்திரு வாசிகை
சவடி தோள்வளை முகவளை மேல்வளை

41. மரகத குண்டலம் வெண்டய மேகலை
அரசிலை கம்பி குறுங்குணி சாலகம்

42. வாரணி யுடைமணி ஆரங் கிங்கிணி
வாகுவ லயநெளி பீடங் கண்டிகை

43. மணிமக ரிகைவளை திகிரி பட்டிகை
பணிகளில் அழகிய பணிகள் கொக்கிகள்

44. வட்ட அம்பொ னோலை முத்தாவளி
சுட்டி சந்து காறை கைக் காறைகள்

45. வடக முத்தோலை அரைவட முஞ்செறி
கடகம் வித்தார மகர நெடுங்குழை

46. மாதரணி தாலி நூல்காஞ்சனம்
மாலிகை மதாணி பீதாம்பரம்

47. மதிப்பரிய கைச்சரி சரப்பணி யிலைச்சினை
பதக்கம் இவையுட்பட அணிப்படலம் இட்டுவை

48. மாடை பாட்டிபு தைத்த குடப்பண
மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன்

49. இடுப்ர சங்கி யாமல் உலைஅ நந்த கோடி
எரியில் வெந்தி டாத கரிநி ரம்ப வேணும்

50. இதுபழைய கவுரி பாஷாண வுண்டை
யிடுசகல வேதி பூநாக செம்பின்

51. ஈயம் ஆனதொர் இரதமும் எண்பலம்
ஏழு கோடியும் இரவு சிவந்திடும்

52. யமுனை நீர்கொடு குகைபதி னாயிரம்
இறுக வேசமை நிலஅறை யூடுவை

53. எழுபதொ டெண்பது வண்டியி லேபதர்
இடுகொடு வந்து சொரிந்து குவாலிடு

54. யாமொழி படரச வாதந் தந்தன
நீசிவ குருவுப காரங் கண்டிரு

55. இரதமொ டுருகிய சருகு பித்தளை
இவைஇவை குகைதொறும் இடை நறுக்கிவை

56. எற்ற வந்தி ராது பொய்க்காளல
எட்டி ரண்டு மாறு தப்பாதுகொள்

57. எழுப தக்ரோணி புடமுள செங்களம்
ரணமு கத்தானை படையொடு வந்திரு

58. ஈழம்வெகு கோடி யாமீந்திட
ஏழுநிலை மாடநீ மேய்ந்துகொள்

59. இபத்திரள் உரித்தன பருத்தன துருத்திகள்
இலக்கற உனக்கரு கடுக்கிவை சடக்கென

60. யாவும் வாய்ப்பது சத்யம் உனக்கிவை
ஏழு நாட்டரும் மெத்த விளைத்தனம்

61. இறைவர் குன்ற மானை மணம கிழ்ந்த நாளில்
இணையில் அண்டரோடும் உணவு கொண்ட தாகும்

62. எமது பசிதீர மாராச இந்த்ர
அமுது படைபோத ஆகாச கங்கை

63. ஆறு போலநெய் சொரிவட கம்படை
நூறு சாலொடு பொரியலை இங்கழை

64. இடுக மாவடு வடையிடை கீரையி
லவணம் ஊறிய கறியடை வேபடை

65. இருபது தண்டை யுடும்பு குவால்சமை
துருவைகள் பன்றி சமைந்தள லாம்அழை

66. யாமைஅ வியல்முயல் ஆணங் கண்டறி
யோமிது சிவசிவ மேலெங் கும்படை

67. இடைவெளி யறமிகு விடுக ருக்கலை
யிறவகை கயல்கெளி றிவைபொ டித்தன

68. எட்டு வண்டி வாளை யிற்பீலியில்
இட்ட முண்டு தீயன் முற்பாடழை

69. இடைகொ ழுப்பாடில் இளையஎ லும்புடன்
அடைசு ரைக்காயில் அடுபடை முன்கறி

70. ஈறுபுளி வார்வி டாய்போம்படி
ஏடு பிரியாத பால்தேன்சொரி

71. இருக்கிற சருக்கரை வருக்கை கதலிக்கனி
ரசத்தினை யனைத்தையும் இலைக்குள் அடையப்படை

72. ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
யாரு மேத்த இனிச்சுகம் உற்றிரு;

**முருகன் பெருமை : சித்தர்களுள் ப்ரசித்தி பெற்றவர் முருகன் திருப்புகழைக் கற்றவரே (73-96)**

73. மிடைத ரும்ப்ர வாள சடைபெ ரும்ப்ர வாக
விமலர் கொன்றை மாலை தருண சந்த்ர ரேகை

74. விரவு மணநாறி பாதார விந்த
விதரண விநோத மாதாவின் மைந்தன்

75. மீன கேதனன் உருவின் மிகுந்தருள்
தான வாரிதி சரவண சம்பவன்

76. விகிர்தி வேதனன் மவுன சுகாதனன்
அகில காரணன் அகில கலாதரன்

77. விகசித சுந்தர சந்தன பாளித
ம்ருகமத குங்கும கஞ்சப யோதரி

78. வேழமு முழைகளும் ஆரும் பைம்புனம்
மேவுறு குறமகள் மேவுந் திண்புயன்

79. விரிகடல் துகள்எழ வெகுளும் விக்ரமன்
அரிதிரு மருமகன் அறுமு கத்தவன்

80. வெட்சி கொண்ட தோளன் வெற்பூடுற
விட்ட வென்றி வேல்மு முச்சேவகன்

81. வெருவு நக்கீரர் சரணென வந்தருள்
முருக னிஷ்க்ரோத முநிகுண பஞ்சரன்

82. மேதகுபு ராண வேதாங்குரன்
ஓதரிய மோன ஞானாங்குரன்

83. மிகைத்தவர் புரத்ரயம் எரித்தவர் ப்ரியப்பட
அகத்திய முநிக்கொரு தமிழ்த்ரயம் உரைத்தவன்

84. வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை
சோதி கார்த்திகை பெற்ற விளக்கொளி

85. வெகுளி வென்ற வேள்வி முநிவர் சங்கம் ஏற
விரவும் இந்த்ர லோக வழிதி றந்த மீளி

86. மிகவிருது கூறு மேவார்கள் கண்டன்
விகட அசுரேசர் சாமோது சண்டன்

87. மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதன னகரி புரந்தவன்

88. விபுத தாரகன் விபுத திவாகரன்
விபுத தேசிகன் விபுத சிகாமணி

89. விபரித கஞ்ச விரிஞ்ச பராமுகன்
அபிநவ கந்தன் அடைந்தவர் தாபரன்

90. மேருவை யிடிபட மோதுஞ் சங்க்ரம
தாரகன் மகுட விபாடன் புங்கவன்

91. வெயிலுமிழ் கொடியொடு வினைமு கத்தினின்
மயில்மிசை வருமொரு வரதன் நிர்ப்பயன்

92. வித்தகன் சுவாமி நிர்ப்பாவகன்
சத்தியன் ப்ரதாப வித்யாதரன்

93. விரத நட்பாளர் பரியும் அசஞ்சலன்
நிருத நிட்டூரன் நிருதர் பயங்கரன்

94. வீரமத லோக வேள் காங்கெயன்
சூரரண சூர சூராந்தகன்

95. வினைப்பகை அறுப்பவன் நினைத்தது முடிப்பவன்
மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக்கடல்

96. **வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்**
**சீலம் ஏத்திய சித்தப்ர சித்தரே.**

**(பாடல்) சொற்பிரிவு 16**

1. அடல் புனைந்த வேலும் மயிலும் என்றும் வாழி
அரியதொன்று கூற அருகிருந்து கேண்மின்

2. அளவில் பலகாயமோடு ஆடி அண்டர்
அறிய விளையாடாலாம் மூலி ஒன்றில்

3. ஆசை வேறில்லை அறுமுகவன் திரு
ஆணை மேருவை அடிதலை கண்டனம்

4. அகில லோகமும் அடைவடைவே முதல்
அருளினோம் அது சிவன் அறியாதல

5. அமையும் எனும்படி நின்ற மநோரதம்
அவை முழுதும் தருவம் பதறாது கொள்

6. ஆதியும் முடிவும் இல்லா ஆநந்தம் தரும்
ஆறிரு கரதலநாதன் தந்தவை

**பச்சிலை மூலிகைகள், மருந்து வகைகள் (7-36)**

7. அவுஷதம் உளசில கிலுகிலுப்பைகள்
அரசிலை நறுவிலி கரிய கக்கரி

8. அத்தி செம்பிராகை முட்காவெளை
துத்தி சங்கம் ஓர் இதழ்த் தாமரை

9. அவுரி கற்றாழை ஒடுவை குறிஞ்சிலி
சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்

10. ஆரை கொடு வேலி வேல் காஞ்சிரம்
வீரை இருவேலி பேரீந்து இலை

11. அமுக்குரவு எருக்குஇலை முருக்கிதழ் செருப்படை
அகத்தி தமரத்தை மதமத்தமொடு பித்திகை

12. ஆலம் ஆத்தி கடுக்கை கொடிக்கழல்
கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை

13. அகில் பரம்பை காரை துடரி தும்பை சூரை
அலரி சம்பு நாவல் மருது சிந்து வாரம்

14. அறுகு தழுதாழை மா பாலை புன்கு
புரசு பழுபாகல் பூலா அழிஞ்சில்

15. ஆயில் ஆவிரை இறலி இரும்பிலி
ஆடி ஆவணி புடம் இட என்று அழை

16. அவனி பாடலம் அனலம் மகீருகம்
இவை சமூலமும் எழுபது சால் அடை

17. அதிமதுரம் தகரம் சிறு பாலடை
பதிமுக வெந்தயம் மின்கய மோதகம்

18. ஆறிடை அபின் அரிதாரம் கந்தகம்
நூறு எடை திரிபலை ஓர் ஒன்று எண் பலம்

19. அதிவிடயம் மொழி கிருமி சத்ருவும்
அனல் முறுகலும் அற முறுகு துத்தமும்

20. அற்பம் ஒன்று கீரை வித்தேழிடை
அத்தில் ஒரு பாதி தக்கோலமும்

21. அடவி கச்சோலம் நிமிளை நறும்பிசின்
அரிதம் வெட்பாலை அரிசி கருங்கணி

22. ஆமலகம் ஏலம் நான் மூன்று எடை
சேமம் சிலை கூட லோகாஞ்சனம்

23. அரப்பொடி கடிப்பகை விடத்திரணம் அப்
பிரகசத்தை சதகுப்பி விதை கொத்தமல்லி திப்பிலி

24. ஆலி கோட்டம் எலிப்பகை சச்சு இலை
நீலி காய்ச்சு நிலப்பனை கற்பிசின்

25. மடல் சிவந்த தாழை மண வசம்பு நீலம்
வரு குரும்பை கோடல் துருசு சம்பிராணி

26. மரிசி **வசவாசி** காகீச மஞ்சள்
**மகிழ** விதை மேதை மாமேதை குன்றி

27. வாரி வாய் நுரை சயிலம் சலம்புரி
பூரி வாதுமை சணவு பெருங்குமிழ்

28. வடுவில் சீரகம் பலம் மயிரோசனை
கடுகு ரோகணி சிவதை மனோசிலை

29. வகைவகையாக கொணடு ஒரு II மண்டலம் மோரொடு
குகையினில் எண்பது செம்பினில் ஊறவை

30. வாதம் நல்வழிகள் அநேகம் பண்டையில்
வாகடம் அல குருநாதன் தந்தது

31. வழிபடும் அரி அரன் பிரமர் உட்பட
மொழிகிற வகை இது சிறிது பெற்றிலர்

32. மற்றும் இந்த்ரசாலம் உச்சாடனம்
முற்றும் இங்ஙனே தரத் தாழ்வு இலை

33. மதலையர்க்கு ஈது மொழிவது பண்பு அல
கதவினில் தாழை இடுபயம் ஒன்றும் இல்லை

34. வால் உழுவை ஓரி காராம்பசு
வாலின்மயிர் கீரி தேவாங்கு அழை

35. மரித்தவர் சனித்த குழி உப்பு ஊறிய சலத்தினை
வடித்து இனிது எடுத்து ஒரு குடத்தினில் நிறைத்துவை

36. மாறில் தோத்திர வித்தை பலித்திடின்
மாடை சேர்க்க வருத்தம் உனக்கிலை

## ரசவாதி கேட்பன (37- 72)

37. மணம தின்று நாளை என மொழிந்து கேளு
மனைகள் எங்கும் ஓடி இனி விரைந்து தேடு

38. வளையல் குழை பீலி காலாழி தண்டை
மணி வயிரம் வீடு மேலீடு செம்பொன்

39. வாளி பாடகம் மணி பிறை சங்கிலி
பாளை சூடகம் மயிலம் இலம்பகம்

40. மவுலி நூபுரம் மயில் திருவாசிகை
சவடி தோள்வளை முகவளை மேல்வளை

41. மரகத குண்டலம் வெண்டயம் மேகலை
அரசிலை கம்பி குறுங்குணி சாலகம்

42. வாரணி உடைமணி ஆரம் கிங்கிணி
வாகுவலயம் நெளி பீடம் கண்டிகை

43. மணி மகரிகை வளை திகிரி பட்டிகை
பணிகளில் அழகிய பணிகள் கொக்கிகள்

44. வட்ட அம்பொன் ஓலை முத்தாவளி
சுட்டி சந்து காறை கைக்காறைகள்

45. வடகம் முத்தோலை அரைவடம் முஞ்செறி
கடகம் வித்தாரம் மகர நெடுங்குழை

46. மாதரணி தாலி நூல் காஞ்சனம்
மாலிகை மதாணி பீதாம்பரம்

47. மதிப்பரிய கைச்சரி சரப்பணி இலைச்சினை
பதக்கம் இவை உட்பட அணிப்படலம் இட்டுவை

48. மாடை பாட்டி புதைத்த குடப்பணம்
மோடு கூட்டி உருக்க விருப்புடன்

49. இடு ப்ரசங்கியாமல் உலை அநந்த கோடி
எரியில் வெந்திடாத கரி நிரம்ப வேண்டும்

50. இது பழைய கவுரி பாஷாண உண்டை
இடு சகலவேதி பூநாகம் செம்பின்

51. ஈயம் ஆனது ஒர் இரதமும் எண்பலம்
ஏழு கோடியும் இரவு சிவந்திடும்

52. யமுனை நீர் கொடு குகைபதினாயிரம்
இறுகவே சமை நில அறையூடு வை

53. எழுபதொடு எண்பது வண்டியில் பதர்
இடு கொடு வந்து சொரிந்து குவால் இடு

54. யாம் மொழிபட ரசவாதம் தந்தனம்
நீ சிவகுரு உபகாரம் கண்டிரு

55. இரதமொடு உருகிய சருகு பித்தளை
இவைஇவை குகைதொறும் இடை நறுக்கிவை

56. எற்ற வந்து இராது பொய்க்கு ஆள் அல
எட்டு இரண்டும் ஆறு தப்பாது கொள்

57. எழுபது அக்ரோணி புடமுடன் செங்களம்
ரணமுகத்து ஆனை படையொடு வந்திரு

58. ஈழம் வெகு கோடி யாம் ஈந்திட
ஏழு நிலை மாடம் நீ மேய்ந்து கொள்

59. இபத்திரள் உரித்தன பருத்தன துருத்திகள்
இலக்கற உனக்கு அருகு அடுக்கிவை சடக்கென

60. யாவும் வாய்ப்பது சத்யம் உனக்கு இவை
ஏழு நாட்டரும் மெத்த விளைத்தனம்

61. இறைவர் குன்ற மானை மணம் மகிழ்ந்த நாளில்
இணையில் அண்டரோடும் உணவு கொண்டதாகும்

62. எமது பசி தீர மாராச இந்திர
அமுது படை போத ஆகாச கங்கை

63. ஆறு போல நெய் சொரி வடகம் படை
நூறு சாலொடு பெரியலை இங்கு அழை

64. இடுக மாவடு வடை இடை கீரையில்
லவணம் ஊறிய கறி அடைவே படை

65. இருபது தண்டை உடும்பு குவால் சமை
துருவைகள் பன்றி சமைந்த எலாம் அழை

66. ஆமை அவியல் முயல் ஆணம் கண்டறியோம்
இது சிவசிவ மேல் எங்கும் படை

67. இடைவெளி அற மிகு இடு கருக்கலை
இறால் வகை கயல் கெளிறு இவை பொடித்தன

68. எட்டு வண்டி வாளையில் பீலியில்
இட்டமுண்டு தீயன் முற்பாடு அழை

69. இடை கொழுப்பாடு இல் இளைய எலும்புடன்
அடை சுரைக்காயில் அடு படை முன்கறி

70. ஈறுபுளி வார் விடாய் போம்படி
ஏடு பிரியாத பால் தேன் சொரி

71. இருக்கிற சர்க்கரை வருக்கை கதலிக்கனி
ரசத்தினை அனைத்தையும் இலைக்குள் அடையப்படை

72. ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
யாரும் ஏத்த இனிச்சுகம் உற்றிரு;

**முருகன் பெருமை : சித்தர்களுள் ப்ரசித்தி பெற்றவர்**
**முருகன் திருப்புகழைக் கற்றவரே 73 - 96**

73. மிடைதரும் ப்ரவாளம் சடை பெரும் ப்ரவாக
விமலர் கொன்றை மாலை தருண சந்த்ரரேகை

74. விரவு மணம் நாறு பாதார விந்த
விதரண விநோதம் மாதாவின் மைந்தன்

75. மீன கேதனன் உருவின் மிகுந்து அருள்
தானவாரிதி சரவண சம்பவன்

76. விகிர்த வேதனன் மவுன சுகாதனன்
அகிஷ காரணன் அகில கலாதரன்

77. விகசித சுந்தர சந்தன பாளித
மிருகமதம் குங்குமம் கஞ்சம் பயோதரி

78. வேழமும் உழைகளும் ஆரும் பைம்புனம்
மேவுறு குறமகள் மேவும் திண்புயன்

79. விரிகடல் துகள்எழ வெகுளும் விக்ரமன்
அரிதிரு மருமகன் அறுமுகத்தவன்

80. வெட்சி கொண்ட தோளன் வெற்பு ஊடுற
விட்ட வென்றி வேல் முழுச்சேவகன்

81. வெருவு நக்கீரர் சரண்என வந்தருள்
முருக நிஷ்க்ரோத முனி குண பஞ்சரன்

82. மேதகு புராண வேத அங்குரன்
ஓதரிய மோன ஞான அங்குரன்

83. மிகைத்தவர் புரத்ரயம் எரித்தவர் ப்ரியப்பட
அகத்திய முநிக்கு ஒரு தமிழ்த்ரயம் உரைத்தவன்

84. வேதமூர்த்தி **திருத்தணி** வெற்பு உறை
சோதி கார்த்திகை பெற்ற விளக்கொளி

85. வெகுளி வென்ற வேள்வி முநிவர் சங்கம் ஏற
விரவும் இந்த்ர லோக வழி திறந்த மீளி

86. மிகவிருது கூறும் மேவார்கள் கண்டன்
விகட அசுரேசர் சாமோது சண்டன்

87. மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதனன் நகரி புரந்தவன்

88. விபுத தாரகன் விபுத திவாகரன்
விபுத தேசிகன் விபுத சிகாமணி

89. விபரிதம் கஞ்சம் விரிஞ்சன் பராமுகன்
அபிநவ கந்தன் அடைந்தவர் தாபரன்

90. மேருவை இடிபட மோதும் சங்க்ரம
தாரகண் மகுட விபாடன் புங்கவன்

91. வெயில் உமிழ் கொடியொடு வினை முகத்தினில்
மயில்மிசை வரும் ஒரு வரதன் நிர்ப்பயன்

92. வித்தகன் சுவாமி நிர்ப்பாவகன்
சத்தியன் ப்ரதாப வித்யாதரன்

93. விரத நட்பாளர் பரியும் அசஞ்சலன்
நிருத நிட்டூரன் நிருதர் பயங்கரன்

94. வீரமத லோக வேள் காங்கெயன்
சூரரண சூர சூராந்தகன்

95. வினைப்பகை அறுப்பவன் நினைத்தது முடிப்பவன்
மனத்துயர் கெடுத்து எனை வளர்த்து அருள் க்ருபைக்கடல்

96. **வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்**
**சீலம் ஏத்திய சித்தரே ப்ரசித்தரே.**

**பதவுரை :**

**அடல் புனைந்த வேலும் மயிலும் என்றும் வாழி** - வலிமைநிரம்பிய வேலாயுதமும், மயில் வாகனமும் எப்போதும் வாழ்க - மணிவாசகரின் திருவாசகம், மகாமந்திரமாகிய பஞ்சாக்ஷரியுடன் 'நமசிவாய' என்று தொடங்குவது போல், இந்த சித்து வகுப்பு 'வேலும், மயிலும் வாழி' என்ற மந்திரத்துடன் தொடங்குகிறது. மேலும் பருவம் எனத் தொடங்கும் தில்லைத் திருப்புகழில் ''செருவெங்களத்தில் வந்த அவுணன், தெறித்து மங்க சிவமஞ் செழுத்தை முந்த விடுவோனே'' என்று கூறி பஞ்சாக்ஷரத்தின் உருவமே 'வேலாயுதம்' என்ற ரகசியத்தை நமக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆதலால் இந்த வகுப்பு வேதங்களின் நடுநாயகமாய், ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் கூறியிருப்பது போல, ஜீவரத்னமாய்த் திகழும் ஐந்தெழுத்துடன் தொடங்கி இருப்பது பெரிய சிறப்பாகும்.

வேலை வாழ்த்தித் துணை கொள்வதால் வினைகள் நீங்கும். 'நான்' 'நான்' என்று அகங்கரித்து வரும் ஆணவப்பேயை, மயிலின் நாம உச்சாடனம் விரட்டி ஓட்டும். முற்காலத்தில் அஷ்டாவதானம், தசாவதானம் முதலியவற்றைச் செய்யும் புலவர்கள், மயில் தியானம் செய்வார்கள்.

**அரியதொன்று கூற** - அருமையான விஷயம் ஒன்று, நான் எடுத்து உரைக்கப் போகிறேன். **அருகிருந்து கேண்மின்** - மற்ற ஜோலிகளை எல்லாம் விட்டு, பக்கத்தே வந்து கேளுங்கள். இதன் உட்பொருள் உலகியல் வியாபாரத்தைத் துறந்து, ஞானம் அடைய வழி தேடுங்கள். ''உங்கள் வித்தையினை இனி விடும் பெருத்த பாருளீர்'' - (கடைக்கணியல் வகுப்பு).

**மூலி ஒன்றில்** - ஒரு பச்சிலை மூலிகையின் உதவிகொண்டு, அளவில் **''பலகாய மோடாடி''** - எண்ணற்ற வேறு சரீரங்கள் எடுத்து உலகில் திரிந்து, இந்தவரிக்கு பரகாயமோடு ஆடி என ஒரு பாடபேதம் உண்டு - இதன் பொருளும் சிறந்தது. அதாவது தன் சரீரத்தை விட்டு வேறு உடலில் புகும், கூடுவிட்டு கூடுபாயும் சித்தி குறிக்கப்படுகிறது. திரு ஆவடுதுறையில் திருமூலசித்தர், ஒரு இடையன் உடலில் புகுந்ததும், ஆதி சங்கரர், அமருகன்

என்ற அரசனின், சரீரத்தை எடுத்ததும், ச்ருங்கேரி பீடத்தின் 10வது குரு ஸ்ரீ வித்யா தீர்த்தர் - லம்பிகாயோகத்தின் மூலம் ஒரு லிங்க வடிவமாக மாறியதும், அருணகிரியாரே கிளிரூபம் எடுத்ததும், இந்த பரகாய சித்தியே. அண்டர் அறிய விளையாடலாம் - தேவர்கள் வியப்புறும்படி விளையாடலாம்.

ஆசை வேறிலை - எனக்கு உலக ஆசையே கிடையாது. சித்தர் அட்டகாசமாகத் தன் பிரதாபத்தை எடுத்துக்கூறத் தொடங்குகிறார். அறுமுகன்மேல் ஆணையிட்டு, தனக்கு ஏதுமே ஆசை கிடையாது என்கிறார். ஆனால், பின்னால் வண்டி, வண்டியாக, நற்சுவை உண்டி கேட்கப் போகிறார். அறுமுகவன் திரு ஆணை - நான் இனி உரைக்கப் போவதெல்லாம், முக்காலும் சத்தியம் ஆறுமுகக் கடவுளே இதற்குச் சாக்ஷி. மேருவை அடிதலை கண்டனம் - மேரு மலையைத் தலைகீழாகப் புரட்டிப் பார்த்திருக்கிறோம்.

அகில லோகமும் - எல்லா புவனங்களையும், அடைவு அடைவே முதல் அருளினோம் - வரிசை வரிசையாக முன்னொரு யுகத்தில் படைத்துக் காட்டினோம், அது சிவன் அறியாதல - என்னுடைய இந்த படைப்புத்திறனை, சிவபெருமானே பார்த்திருக்கிறார்.

அமையும் எனும் படி - போதும் போதும் என்று சொல்லும் அளவுக்கு, நின்ற மநோரதம் - நினைத்துள்ள திருப்தியை அடைய, மனத்திலே நீ ஆசைப்பட்டவை, அவை முழுதும் தருவம் - எல்லாவற்றையும் குறைவு இல்லாமல் கொடுப்போம், பதறாது கொள் - நிதானமாக, ஆத்திரப்படாமல் பெற்றுக்கொள்.

ஆதியும் முடிவும் இல் - ஆரம்பமும் முடிவும் இல்லாத, ஆநந்தம் தரும் - பேரானந்தத்தை "கதித்த நித்திய சித்தி" திருப்புகழ்-தந்து அருளும், ஆறிரு கரதல நாதன் தந்தவை - பன்னிரு புயத்தன், ஷண்முகன் எனக்கு நேரே உபதேசித்து கொடுத்தவையான.

அவுஷதம் உளசில - மருந்து வகைகள் சில என்னிடத்தில் உண்டு. கிலு கிலுப்பைகள் - கிலுகிலுப்பைச் செடி என்னும் நரிமிரட்டி, பேய்மருட்டி எனப்படும் பூண்டு, காய் காய்ந்திருக்கும்போது, காற்றுவீசக் காய்களின் விதைகள் கிலுகிலு என்று ஒலிக்கும். ஒலியைக் கேட்கும் நரிமிரண்டு ஓடுமாம். இது உமிழ்நீர்ப் பெருக்கைக் குறைக்கும்; சொறி, சிரங்குகளைப் போக்கும்.

அரசிலை - அரச மர இலை - தெய்வீக மரம், தாது வெப்பு அகற்றி மலம் இளக்கி, புண் ஆற்றி, சுக்கில குற்றம் அகற்றி, புழு கொல்லி.

நறுவிலி - மூக்குச்சளி மரம் - பழம் வெளுத்த தோலுடன், நீல நிறம், உடல் உரமாக்கும். தாது கெட்டிப்படும். இலைக் குடிநீர் ஆஸ்துமாவைக் குணப்படுத்தும் "நறுவிலி இலைக்கு இரைப்பு நாசம், அவ்வேர்க்கு மறுவில் எலும்புருக்கி மாறும் - நறுவிலியின் தன் பழம் இரத்தப் பித்தம், சார் மேகமும் தீர்க்கும் இன்புற யாவர்க்கும் இசை"- கரிய கக்கரி - பசுமை நிறைந்த முள் வெள்ளரி, மூல அழல் தணிக்கும்.

**அத்தி** - அத்தி மரத்து இலை, வேர் இவை ரத்த வ்ருத்தி, மலக்குடல் சுத்தி, கர்ப்பாசைய உதிரப் போக்கை நீக்கும். அத்திப்பால் நீரிழிவு சூலை இவைகளை போக்கும், அத்திப்பிஞ்சு ரத்த மூலத்தைப் போக்கும், அத்திக் காயைச் சமைத்து உண்டுவரின் பிணிகள் நீங்கும். "கண்டு பூ பூக்கும் காணாமல் காய் காய்க்கும் - பூசணி காணாமல் பூ பூக்கும் - கண்டு காய் காய்க்கும் - அத்தி.

**செம்பிராகை** - பிராய் அல்லது பராய் என்னும் மர வகை இது செம்மை, வெண்மை இருவகை. இது முரட்டு மரம். பத்தடிக்கு மேல் வளராது, முண்டும், முடிச்சும் நிறைந்திருக்கும். பாலுண்டு, இலை சுரசுரப்பாய் இருக்கும், இலையால் கட்டி குணமாகும். குடுக்கைகள் நயம்படுவதற்கு இதனால் தேய்ப்பதுண்டு, பராய்முரடு - பலாமுரடு என்று ஆயிற்று.

**முட்காவளை** - முள்காவெளி - மார்கழி மாதத்தில் காலையில் நீராடுவதால் ஏதாவது இடர் வந்தால், அகத்தியர் அதற்கு கும்மி பாட்டு செய்திருக்கிறார். இதனால் மார்பு நோய், மாந்த ஜுரம், வலி நீங்கும். "சுக்குடன் முட்காவளை இரண்டையும் சுகமாய் காய்ச்சி அருந்திடவே பக்கவலி வாங்கும், வாயுகள் போமென்று பகர்ந்து கும்மியடி".

**துத்தி** - காய்கள் காதணி போல் அழகாக இருக்கும். இதில் 12 வகை உண்டு. இலை, மூல நோய்க்கு சிறந்த பயன் தரும். துத்தி கீரையை விளக்கெண்ணையில் வதக்கி ஆசனவாயில் கட்டினால் Fistula மூலம் மறையும். காய் விதை வெண் குட்டத்திற்கு பயன். "கையில் காலில் படர்ந்த கார்மேகம் போய் ஒழியும் - மெய்யில் உறுகுட்டம் போம், வெப்பு அகலும், துத்தி விதையைச் சுவை !".

**சங்கம்** - இசங்கு எனப்படும் சங்கஞ்செடி வேரைப் பிழிந்த பால், நீர் ஏற்றத்தையும் சுர வேகத்தையும் நீக்கும். "சங்கம் பால் வீக்கமதைத்தான் போக்கும், நீர் வடிக்கும், மங்கு சுர வெப்பு அகற்றும் ஐயமில்லை", இதன் வேர்ப்பட்டை கோழை, இருமல், உட்ஜுரம், வயிற்றுப்புழு இவைகளைப் போக்கும்.

**ஓர் இதழ் தாமரை** - தீராத மேக நோய்களுக்குக் கைகண்ட மருந்து, தேவேந்திரன் ஒழுக்கம் தவறி, அகலிகையை புணர்ந்ததால், உடல் முழுதும் கிரந்திப்புண் ஏற்பட்டது. வெளியில் தலைகாட்ட வெட்கி ஓரிதழ்த் தாமரைக்கடியில் ஒளிந்து கொண்டானாம். ஏனெனில், இந்த மூலிகைக்கு கிரந்திப்புண்ணை ஆற்றும் சக்தி இருக்கிறது. இதன் குணம் சுக்கிளம் கட்டும், உடலுக்கு அழகுத் தரும்.

**அவுரி** - நீலிச்செடி - சகல விஷக்கடிகளுக்கும், முற்காலத்தில் பயன்படுத்தினார்கள். இச்செடியிலிருந்து நீலச்சாயம் தயாராகிறது.

**கற்றாழை** - இதில் பல வகைகள் இருந்தாலும் சோற்றுக்கற்றாழையே மருத்துவக்குணம் உடையது. கடும் பஞ்சகாலத்தில், இதைச் சோறாக சமைத்து மக்கள் பசி ஆற்றியதால் இந்த பெயர் வந்தது போலும். வள்ளிமலை சுவாமிகள் தனது பூர்வாச்மரத்தில் சமையல் தொழில் புரிந்து வந்த பொழுது, ஒருமுறை வெளிநாட்டு விருந்தாளிகளுக்கு இந்த சோற்று

கற்றாழையைப் பக்குவமாக சமைத்து அசைவ உணவு போல அலங்காரம் செய்து படைத்ததை அவர்கள் உண்டு வியந்தனராம். கற்றாழை வற்றல் பிணியைக் கண்டிக்கும், மேகம், பெருவியாதி, மூலம், குன்மம் இவைப்போம்.

ஒடுவை - நிலப்பாலை - இதில் 'ஊசிப்பாலை' நஞ்சு முறிச்சான் ஆகும். ஏழிலைப்பாலை கஷாயம். சூலை குன்மத்திற்கு மருந்து, கடற்பாலையின்இலைக்கு அதிசய குணம் உண்டு. கீழ்ப்புறம் வெப்பத்தைத் தரும். மேல்புறம் குளிர்ச்சியைத் தரும். கட்டிகள் மீது இலையின் அடிப்புறத்தை வைத்துக்கட்டினால் கட்டி உடையும். பிறகு மேல்புறத்தை வைத்து கட்டினால் தோல் கரைந்து விடும்.

குறிஞ்சிலி - (கொடி) ஜன்னி சுரம் போக்கும். சிறுகுறிஞ்சிலி வேர் விஷத்தை முறிக்கும், காதில் அணிவதற்குரிய பூ வகை.

சிவிறி - விசிறி வாழை மரம். கத்தாரி - கத்தரிப் பிஞ்சு கபத்தைப் போக்கும். காய் சிறங்கை விளைவிக்கும். "பிஞ்சான கத்தரிக்காய் பேசு முத்தோஷம் போக்கும்".

பொடுதலை - பூண்டு வகை இலையைத் துவையல் செய்து உண்டால் உள் மூலம் தணியும். 'பொடுதலையின் பேருரைத்தால் அடுதலை செய்காசமும் அடங்கும்'. சீதக்கழிச்சல், இருமல், சூலை இவைப்போம்.

சண்பகம் - (பூ) சுரத்தையும், கண்வெப்பத்தையும் நீக்கும், அத்தர் செய்யலாம்.

ஆரை - தண்டில் நான்கு இதழ் கொண்ட கீரை வகை. நீரிழிவு, சுரம் போக்கும். இலக்கியத்தில் ருசியான குறிப்பு. கம்பன் பொறாமையால் ஔவையை அடி என்று சொல்ல விரும்பி "ஒரு காலடீ" நாலிலைப்பந்தலடீ என புதிர் வினாவ, ஔவை - "எட்டே கால் லட்சணமே எமனேறும் பரியே மட்டில் பெரியம்மை வாகனமே - முட்டமேற் கூரையில்லாவீடே குலராமன் தூதுவனே - ஆரை யடா சொன்னாய் அடா" - ஆரைக்கீரையை நீ சொன்னாயடா.

கொடுவேலி - சித்திரமூலம் - சட்டிப்புண் போகும். "விஷமச் சுரம்தான் பொட்டெனப்பறந்து போகும். புகழ் கொடுவேலி கண்டால்". கருங்கொடுவேலி, செங்கொடிவேலி, வெண்கொடி வேலி என மூவகைப்படும். கட்டி, புண், மூலம், பெருவயிறு, நச்சுச் சுரம் போகும். "கனத்த பெருவயிறும் அட்டுங் கொடுவேலியாம்".

வேல் - வேல மரம் - வேலனின் பெயரைத் தாங்கி இருக்கும். இம்மரம் தமிழ்நாட்டிற்கே உரிய மரவகை. தெய்வீகச்சக்தி மிகுந்த இம்மரம், முற்காலத்தில் காடு காடாக இருந்தன. பல ஊர்கள் இப்பெயரை தாங்கி இருந்தன. வேலூர், திருத்தணி மார்க்கத்தில் இப்போதும் வேலம் எனும் கிராமம் உள்ளது. மது விலக்கின்பொழுது கருவேலம்பட்டையை எடுத்து சாராயம் செய்ததினால், அநேக மரங்கள் அழிந்து போயின. ஆள் அடி உயரம் நீண்டு வளர்ந்து, பிறகு கிளைகளை பரவலாக விட்டு வளருவதால் பார்ப்பதற்கு குடைபோல் காட்சி தரும். ராமநாதபுரம் வட்டத்தில், கொடுமளூரில், முருகன் இரண்டு குடை - வேல மரங்களின் அடியில் தரிசனம் கொடுக்கிறார். வேலம் பட்டை பற்பொடிக்குச் சிறந்தது. வேலம் குச்சியும்

பற்கள் துலக்க உதவும். ஆதலால் ஆன்றோர்கள் ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, 'வேலும் மயிலும் உயிருக்கு உறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி, பாலும் தேனும் உடலுக்கு உறுதி என்பார்கள். 'முள்ளை முள்ளால் எடுப்பது என்ற பழமொழி' இந்த மரத்தைப் பற்றியதே நெருஞ்சி முள், நாகதாளி முள் காலில் ஏறி ஒடிந்து விட்டால், வேலம் முள்ளால் கிளறி எடுத்தால் சீழ் பிடிக்காது. தந்தம் இறுகும் தனிச்சூதப் புண்ணாறும் வந்த சுரம் பித்தம் படியும் காண் கருவேலம் பட்டைக்கு காண் - (அகத்தியர்).

காஞ்சிரம் - இது ''எட்டி''; நரம்புகட்குவன்மை தரும். வாந்தி, கழிச்சல் இவைகளை உண்டாக்கும். 'ஓங்கும் ஐம்புலன்' எனத்துவங்கும் 'எட்டிகுடித் திருப்புகழில் காஞ்சிரங்குடி ஆறுமுகப்பெருமாளே என்கிறார் அருணகிரியார். கசப்புக்கு பெயர் போனது பாம்பாட்டிகள் சிறுவயதிலிருந்தே தினம் கடுகளவு இப்பழத்தை உண்டு பழகுவதால் பாம்பு விஷம் பாதிக்காது என்பார்கள்.

வீரை - வட்டத்திருப்பி எனும் ஆடு தீண்டாப் பாளை, வெள்ளாடு, மலைப்பாறைகளில் ஏறி, அங்கு பல செடிகளைத் தின்றாலும் இந்த செடியைத் தீண்டாது. அதனால் இந்தப்பெயர் ஒருவனை விஷ ஐந்து கடித்தால் எது கடித்தது என்பதை அறிய இந்தப் பூண்டை உபயோகிப்பர். எல்லா விஷக்கடிகளுக்குக் இதனுடைய வேரை இடித்து உள்ளுக்கு கொடுக்கக் விஷம் இறங்கும். தடைபட்ட சூதகத்திற்கும் கொடுப்பது உண்டு.

இருவேலி வெட்டிவேர், குருவேர் - உஷ்ணத்தைத் தணிப்பதில் இணையற்றது. மண்பானையில் காய்ச்சிய நீரைக் கொட்டி, இரண்டு பிடி சுத்தம் செய்யப்பட்ட வெட்டி வேரையும் சிறிது சப்ஜா விதையையும் போட்டுக் குடித்து வந்தால் தேக சூடும் ரத்தக்கட்டிகளும் நீங்கும். இவ்வேரினால் செய்யப்பட்ட தட்டி, விசிறி மிகுந்த குளிர்ச்சியை த்தரும். ''வாச வெட்டி வேர் விசிறி வன்பித்த சோபமொடுவீசும் எரிச்சலையும் வீழ்த்தும்''-

பேரீந்திலை - பேரிச்சை இலை - வேல் முனையைப் போல் கூர்மையினை உடையது.இலைகளால் கூரை வேயப்படும். பழம் மலச்சிக்கலுக்குச் சிறந்தது. உடல் உரம் அளிக்கும். உலர்ந்த காயே கர்ச்சூரக்காய். நீரிழிவுக்கு நல்லது. கழிச்சலையும் போக்கும், பழம் பித்தம், மலபந்தம் இவைகளைக் கண்டிக்கும்.

அமுக்குரவு - அமுக்கிராங்கிழங்கு - இந்த கிழங்கைப் பொடி செய்து நெய்யுடன் உண்டால் அழகு உறுதி. ஆயுள் வலிவு அடையும். ஆயுர் வேதத்தில் அஸ்வகந்தா லேகியம் ப்ரபலம்.

எருக்கிலை - எருக்கஞ்செடியின் இலை. அருக்கன் எனப்படும் சூரியனின் ஜீவசக்தியை சேமித்து வைப்பதால், எருக்கம் எனப்பெயர். விநாயகருக்கு அர்ச்சனை மலர்களில் எருக்கம் பூ இன்றியமையாதது. ரத சப்தமி அன்று ஏழு எருக்கம் இலைகளைத் தலையில் வைத்துக்கொண்டு குளிப்பதால், ஏழு பிறவிப் பாவம் அகலும் என்பது நம்பிக்கை. பூத, ப்ரேத, பைசாச தோஷங்கள் குழந்தைகளுக்கு அணுகாதிருக்க, வெள்ளெருக்கம் மூலிகை நார்களை கயிறாகத் திரித்து, இடுப்பில் கட்டி வைப்பது நம் முன்னோர்களது வழக்கம். மாந்த்ரீக சக்தியில், மகா சக்தி வாய்ந்த மூலிகை இது. மோடி வித்தைக்காரர்கள், இம்மூலிகையை உச்சாடனம்

செய்து மாயவித்தையைக் காட்டுவார்கள். கடுமையான விஷப்பாம்புக் கடிகளுக்கு, இலையை உபயோகிக்க விஷம் முறிந்து பிழைப்பான். இலையை கட்டிமேல் கட்ட, கட்டிகள் பழுத்து உடையும். எலிக்கடி நஞ்சு, பாம்பு நஞ்சு, வயிற்றுப் புழு, மலக்கட்டு இவை போகும்.

முருக்கிதழ் - பலாச இலை - கிருமி சத்துரு எனப்படும்.

செருப்படை - படர் கொடி இனம், மந்தம், குன்மம், சூலை நீங்கும்.

அகத்தி - அகத்திக்கீரை - ஜீரண சுரப்பிகளைத் துண்டுவதால் உபவாச தினமான ஏகாதசிக்கு அடுத்த நாள், இந்த கீரையைச் சேர்த்துக்கொள்கிறார்கள். ஆனால், அடிக்கடி சேர்க்கக்கூடாது. ரத்தம் குறையும். அகத்திப்பூவை பிழிந்து கண்ணில் இட்டால் கண் நோய் அகன்று ப்ரகாசமாகும். வேர்ப்பட்டை மேகம், மெய்யறிவு இவைகளைப் போக்கும்.

தமரத்தை - மரவகை. பழம் நல்ல மருத்துவப் பயன் உள்ளது. "வாத பித்தம் வாத கபம் வாந்தி குரல் கம்மல் கண் நோய் தாது நஷ்டம் பித்தம் தலை நோயோடு ஓது சித்தத் துற்ற, ப்ரமையும் போம் ஒண்தொடியே! - மா புளிப்பாம் நற்றமரத்தம் பழத்தை நாடு" - பழச்சாறு துணிகளில் உள்ள கறையைப் போக்கும்.

மதமத்தம் - அருணகிரியாரால் முதல் பாட்டிலேயே மத்தமும் எனக்கூறப்பட்ட பொன் ஊமத்தை இது தான். பித்த சுரம் நீங்கும். காயால் மயக்கமும், வெறிநோயும் உண்டாக்கும்.

பித்திகை - ஜாதி மல்லிகை, சிறு செண்பகம்.

ஆலம் - பால் மிகுந்துள்ள மரம். எனவே மனித இனத்திற்கு பலவிதங்களிலும் பாதுகாப்பு அளிக்கும். இம்மரத்தடியில் தங்கி இளைப்பாற, உடல் சூடு தணியும். மன அமைதியும், ஞானமும் சேரும். ஆத்ம விசாரணைக்கு ஏற்ற மரம். ஆல மரத்தடியில் இருந்து தவம் செய்து அநேக சித்தர்கள் சித்தி பெற்றுள்ளனர். புத்தர் தவம் செய்து ஞானம் பெற்றது 'போதி' என்னும் ஆலமரத்தடியில்தான். ஆலமரத்தில் இரு வகை உண்டு. ஒன்று கல் ஆலமரம். இதன் அடிமரம் பருத்து நீண்டகிளைகள் விடும். ஆனால் விழுதுகள் கிடையாது. விழுதுடன் கூடிய இரண்டாம் வகை, பல்லாண்டுகள் அழியாமல் பரந்து விளங்கும். ஆலமரத்தின் வேர், பட்டை முதல் மரப்பட்டை, விழுது, இலை மொட்டு, பழம், பால் யாவும் மிகுந்த மருத்துவப்பயனைத்தரும். சீமந்த விழாவில் ஆலமொட்டு, அத்திமொட்டு இரண்டினையும் பிழிந்து கர்ப்பமாய் இருக்கும் பெண்ணின் நாசியில் விடுவார்கள். ஆலமரத்தின் பாகங்கள் எல்லாம் குளிர்ச்சி உண்டாக்கி உடலை உரமாக்கும். மேக ரோகத்திற்கு கைகண்ட மருந்து. நீரிழிவிற்கு நல்ல நிவாரணம். "கொல்லுகின்ற நீரிழிவை கொல்லும் காண்" என்கிறார் அகத்தியர். ஆலங்கன்றை மக நக்ஷத்திரம், வளர்பிறை தசமியில் மஞ்சள் நூலில் காப்பு கட்டி, சோடச உபசாரம் காண்பித்து பஞ்சாட்சரம் ஓதிக்கொண்டே, வேருடன் எடுத்து அரைத்து பில்லை செய்து புடம் செய்த திருநீறு, 'சர்வஜன வசிய விபூதி' ஆகும். விழுதுகளை எட்டு அங்குல துண்டமாக வெட்டி பல் தேய்த்து வர, பல் கெட்டி ஆகும்.

ஆத்தி - செடி வகை - பல் துலக்கப்பயன்.

**கடுக்கை** - கொன்றை - இதன் பூ வயிற்றுப்புழுவைப் போக்கும். சிவபெருமானுக்கு உகந்தமலர். தேவாரத்தில் கார்கொன்றை என்று பேசப்படுகிறது. திருப்புகழில் இதழ் மலர் என்று குறிப்பிடப்படுகிறது. இதன் இலை மலத்தைக் கழிக்கும். படர்தாமரையைப் போக்கும், வேர்ப்பட்டை, வண்டுக்கடி, சொரி இவைகளைப் போக்கும்.

**கொடிக்கழல்** - கழற்சிக்காய் கொடி : கஜ்ஜக்காய், வஜ்ர பீஜம் எனவும் பெயர். மனிதனின் பீஜங்கள் போல் தோற்றமளிக்கும். இதன் காய்களிலிருந்து பருப்பு எடுத்து, சுக்கு, பெருங்காயம் ஒரு துண்டு, நாமக்கட்டி ஒரு துண்டு, இவைகளைச் சந்தனக்கல்லில் வெந்நீர் விட்டு அரைத்து விழுதை ஒருவிரல் அளவு எடுத்து உட்கொண்டு மீதியை விரைக்கொட்டையில் பூச வீக்கம்மறையும். (சுக்கு அதிகம் சேர்க்கக்கூடாது). கஜ்ஜக்காய் பல் பொடியும் செய்வார்கள்.

**கோலி** - இலந்தை - இலையை வதக்கி ஆசனவாயில் கட்ட மூலம் சுருங்கும். புத்திரசந்தான மருந்து இது. இலந்தைப்பழ ஊறுகாய் நல்ல பசியை உண்டாக்கி, மார்பு கபத்தை அறுக்கும்.

**தேட்கடை** - தேள் கொடுக்செடி - இலை சுர சுரப்பாகவும் செடி முனையில் தேளின் கொடுக்கு போல், நரம்பு காணப்படும். சிறு தேள் கொடுக்கு, பெருந்தேள் கொடுக்கு என இருவகை - சிறுதேள் கொடுக்கு எலும்புருக்கி நோய்க்கும், பெருந்தேள் கொடுக்கு மேக நோய்களுக்கும் சிறந்த மருந்து, செடியின் இலையை சாறாகப் பிழிந்து தேள் கொட்டியவாயில் வைத்துக் கட்டினால் நஞ்சு முறியும்.

**நெய்கொடை** - Soap nut tree - இதன் காயை சோப்புக்குப் பதிலாக சவுக்காரமாக உபயோகிப்பார்கள், பூவந்தி, மணிப்புன்கு எனப்படும். இதனால் வயிற்று நோய், தலைநோய், சூதக நோய் விலகும்.

**வக்கணை** - மலைப்புன்கு - வண்டு கடிக்கு மருந்து, வக்கனையின் மூலத்தைப் பாலிற் கொளளச் சில விஷம், வண்டுக்கடி தீரும்.

**அகில்** - அகர் கட்டையை நீர்விட்டு அரைத்துப் பூச தளர்ந்த உடல் இறுகும். புகை மணத்தால் சுரம் நீங்கும்.

**பரம்பை** - வன்னி - சௌனகரின் மாணாக்கர் மந்தாரகனும், அவன் பத்தினி வன்னியும், துதிக்கைப் பெற்ற புருசுண்ட ரிஷியைப் பார்த்து நகைக்க, அவரால் மரமாக சபிக்கப்பெற்றனர். பின்னர், விநாயகரின் அருள் பெற்று, அவருக்குப் பிடித்த வ்ருக்ஷங்களாகத் திகழ்ந்தனர். பாவத்தை க்ஷமிப்பதால் வன்னிக்கு 'க்ஷமி' என்று பெயர். பாண்டவர்கள் வனவாசம் செய்யும் பொழுது அர்ச்சுனனின் வில்லைத் தன்னிடம் மறைத்திருந்தது. வன்னிமரம். ஜன்னி, சொரி நீங்க மருந்து.

**காரை** - சுடுகாட்டுச் செடி. "சூரை காரை படர்ந்து எங்கும் சுட்ட சுடலை" காஞ்சீபுரத்தில் பாடல் பெற்ற ஐந்து திருக்கோயில்களுள் கச்சிநெறி காரைக்காடு ஒன்று. காரைச் செடி மிகுந்திருந்ததால் இப்பெயர். காரைப்பழம் குருதிப் போக்கையும், இலை இரத்தக் கடுப்பையும் நீக்கும்.

துடரி - முட்செடி - சங்க இலக்கியங்களில் வருகிறது. 'கடுவும், தான்றியும், கொடுமுள் தொடரியும்' - புலி தொடக்கி என்றும் பெயர்.

தும்பை - விஷக்கடிகளின் தீக்குணங்களை முறிப்பதில் நிகரற்றது. சீறுகின்ற பாம்பொடு சில்விடங்கள் சென்னிவலி ஏறு கபம் மாந்தம் இருக்குமோ - 'நாறு மலர் கொம்பனைய மாதே குளிர்சீத சன்னி விடும் தும்பை இலை என்று ஒரு கால் ஒது' - இதை வாரம் ஒரு முறை தலைக்கு எண்ணையுடன் காய்ச்சி முழுகுவதால் கழுத்து நரம்பு வலி, பிடரி வலி (Spondilities) விலகும். தும்பைப்பூ போர் பூவாகும், பெருவீரச் செயல் புரிவதன் குறியாக வீரர் போரில் அணியும் அடையாளப்பூ - வீரவாகுவின் வாள் தும்பை மலரைச் சூடிக்கொண்டதை அருணகிரியார் குறிப்பிடுகிறார். ''போரிலே நிர்த்தமிடும் வீர மாலக்ஷ்மி மகிழ் பூசை நேசித்து மலர் தும்பை காத்திடுமே''. தும்பைப்பூ - தேவேந்திர லோகத்தில் ரம்பை, திலோத்தமை, மேனகை போன்ற நடனமாதர்கள் இருந்தார்கள். அவர்களுள் ஒருத்தி தும்பை, ரம்பையின் அழகையும் நடன ஆற்றலையும் கண்டு பொறாமை கொண்டு ஒரு சூழ்ச்சி செய்தாள். ஒரு நாள் சபை அரங்கில் ரம்பையின் பெரிய நடன நிகழ்ச்சி நடைபெறுவதாக இருந்தது. தும்பை அந்த அரங்க மேடையை தயார் செய்யும் பணிகளை ஏற்றுக் கொண்டு ஓர் இடத்தில் எண்ணெயை தடவி விடுகிறாள். ரம்பை ஆடும் பொழுது அங்கு வழுக்கி விழுந்ததால் சபையில் ஒரே சிரிப்பு எழுந்தது. ஆனால் தேவேந்திரனுக்குச் சினம் வந்து மேடையை கண்காணித்த போது எண்ணெய் தடவி இருந்தது தெரிய வந்தது. பணியாளரை மிரட்டிய உடன் உண்மையைச் சொல்லி விட்டான். மிகுந்த கோபம்கொண்ட இந்திரன் தும்பையைப் பார்த்து இந்த ''துர்புத்தியை உடைய நீ இனி இங்கு இருக்கக்கூடாது. மானிட உலகில் பிற'' என்று சாபமிட்டான். அதன்படி தும்பைப் பூ உலகில் ஒரு ருத்ர கன்னிகையாகப் பிறந்தாள். ஆனால் பூர்வ ஜென்ம வாசனையால் எப்போதும் சிவபெருமானைத் தியானித்து வந்தாள். அவள் தவத்திற்கு இரங்கி ஒரு நாள் ஈசன் அவள் முன்னே தோன்றி 'பெண்ணே உனக்கு என்ன வேண்டும்' என்று கேட்டார். இறைவனை நேரில் பார்த்த பயத்தால் வாய் குழறி உன் திருவடியில் என் தலை எப்பொழுதும் இருக்க வேண்டும் என்று கூறுவதற்கு பதிலாக 'என் அடிகள் உன் சிரத்தில் இருக்க வேண்டும் என்று மாறிக் கூறிவிட்டாள். அவரும் அப்படியே ஆகட்டும் என்று சொல்லி சிரித்துக்கொண்டு அவளைச் ஒரு செடியாக்கி அதன் பூக்களை தன் தலையில் வைத்துக் கொண்டார். சூரை - இதுவும் சுடுகாட்டுச் செடி, தூதுவளையும் சூரை எனப்படும்.

அலரி - அரளி - வேர்பட்டையை நல்லெண்ணையுடன் காய்ச்சி, காதில் இரண்டு துளிவிட காது சீழ் வலி போகும். கரவீரம் என்று இச்செடிக்குப் பெயர். கும்பகோணம் அருகே பாடல் பெற்ற தலம் இப்பெயர் கொண்டுள்ளது. இந்த கோயிலில் அலரியே தல வ்ருக்ஷம்.

சம்பு நாவல் - உலகை ஏழு தீவுகளாகப் பிரித்துச் சொல்வார்கள். நாம் வசிப்பது நாவலந்தீவு. திரு ஆனைக்காவில், நாவல் மரத்தடியில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். விநாயகருக்கு மிகப்பிடித்த பழம். முருகன் ஔவையுடன் விளையாடிய வரலாறு யாவரும் அறிந்ததே.

கொட்டையை உலர்த்தி பொடியாக்கி தினந்தோறும் நீருடன் பருகி வர, அதிமூத்திரம், மது மேகம், ஓடிப்போகும். சர்க்கரை வியாதிக்கு பலன் அளிக்கும்.

**மருது** - ஆதி காலத்தில், மதுரை வட்டாரத்தில் மருத மரங்கள் நிறைய இருந்ததால் மருதை என்று பெயர் வந்தது. அது மதுரை எனத் திரிந்ததாகச் சொல்லப்படுகிறது. வடமொழியில் அர்ச்சுனம் என்றால் மருது. ஆந்திராவில் ஸ்ரீசைலம் வடமருது. இங்கு இடைமருது, திருவிடை மருது, கல்லிடைக்குறிச்சி அருகே புடை மருது (கடைசி). பாண்டவர்களில் விஜயன், இம்மரத்தடியில் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து பாசுபத அஸ்திரத்தைப் பெற்றதால், அவனுக்கு அர்ச்சுனன் என்று பெயர் வந்தது. இதன் மரப்பட்டை ஹ்ருதய நோய்க்குச் சிறந்த மருந்தாகும். ஆயுர் வேதத்தில் அர்ச்சுனாரிஷ்டம் என்று தயார் செய்கிறார்கள். சர்க்கரை நோய்க்கும் பலன் அளிக்கும். இதன் பட்டையில் தயாரிக்கும் பல் பொடி சிறந்தது. "ஓதமெனும் நீரிழிவை ஓட்டும், ப்ரமேகம் காதமென ஓடக்கடத்தும், காண் போத மயக்கமொடுதாக மாறும். சுரத்தின் தயக்கம் அறுக்கும் மருதம் சாற்று.

**சிந்துவாரம்** - நொச்சி வெந்நீரில் இலையைக் கொதிக்க வைத்து, நீராவி பிடித்தால் தலையில் கட்டிக்கொண்ட நீர் இறங்கும். சிவபெருமான் சதா கங்கை நீரில் நனைவதால் அதற்கு எதிர் மருந்தாக இந்த நொச்சியைத் தரித்திருக்கிறார் என்று நகைச்சுவையாகச் சொல்வர். "சிந்துவாரமும், இதழியும்" - திருப்புகழ். நொச்சிப்பூ மயிலின் கால் அமைப்பை ஒத்திருப்பதால் முருகனுக்கும் பிடித்தது இந்த மூலிகையே.

**அறுகு** - விநாயகருக்குப் பிடித்த தூர்வா பத்திரம் இதுவே. அவர் மூலாதார தெய்வம். ஆதலால் குண்டலினியின் சூட்டைத் தணிக்க இந்த அறுகினால், அவருக்கு அர்ச்சிக்க வேண்டும். ஆங்கில மருந்து எடுத்துக் கொண்டவர்கள் சித்தமருத்துவரிடம் சென்றால், அதனுடைய நச்சுத்தன்மை போக அறுகின் சாறை ஒரு வாரம் குடித்து விட்டு வரச்சொல்வார்கள். விஷக்கடிக்கும் சிறந்த மருந்து. இக்காலத்தில் மீண்டும் இதற்கு ஒரு மவுசு ஏற்பட்டு பூங்கா, கடற்கரை முதலிய இடங்களில் விற்கப்படுவதைக் காணலாம்.

**தழுதாழை** - எல்லா வாத நோய்களுக்கும் கைகண்ட மருந்து. ஆனால் வெப்பத்தை அதிகரிக்கும், இலையும், வேரும் உபயோகப்படும், பக்கவாதம் முதலிய 80 வாத நோய்கள், மூக்கடைப்பு நோய்கள், குடைச்சல் நீங்கும். ஆனால் அழலை உண்டாக்கும்.

**மா** - சூதம் - கானக்குதிரை - 'மா' என்றாலே சிறப்பு எனப்பொருள். திருமகளையும் குறிக்கும் சொல். ஆதலால் சுபசடங்குகளில் மா இலைத் தோரணம் கட்டுவது, தென்னாட்டுப் பழக்கம். மா தொடர்புடைய பல வரலாறுகள் உண்டு. முருகன் மாங்கனிக்காக விநாயகருடன் போட்டி போட்டது, சூரன் கடைசியில் மா மரமாய் நின்றது, பிறகு வேலால் முக்தி அடைந்தது. காஞ்சியில் ப்ரம்மாண்ட மா மரத்தின் அடியில், ஈசன் லிங்க வடிவில் இருப்பதால் அவருக்கு 'ஏக ஆம்ர நாதர்' என்று பெயர். ஒற்றை மாமரம் - ஒரு மா மிசை அரையர் என்ற ஒரு தனிப்பாடல் உள்ளது. காமாட்சி இவரை பூஜிக்கும் 'மாவடி சேவை' ஒவ்வொரு வருடமும் நிகழும். கொழுந்து, மாந்துளிர் இளம் சிவப்பாகவும் பட்டுப்போல் ம்ருதுவாகவும் இருக்கும்.

இதை இளமாதர் மேனிக்கு ஒப்பிடுகிறார் அருணகிரியார். "வளமாந்தளிர் போல் நிறமாகிய வடிவாலே" (கரிவாம்பரி). சீதபேதி, நீரிழிவுக்கு பலன் தரும். முற்றிய இலை - நெருப்பில் போட்டு புகையை தொண்டைக்கு காட்டினால் குரல் கம்மல், விக்கல் நீங்கும். மாளயபட்சம் 15 நாளும் மா இலையால் பல் துலக்குவது பித்ருக்களுக்குப் ப்ரீதி. மாம்பூ - நெருப்பில் புகைக்க கொசுக்கள் ஓடிவிடும். கற்பில் சிறந்த பெண்ணரசிகள் சிரித்தால் மா மரம் பூக்கும் என்பர். பிஞ்சு - மாவடு ஊறுகாய் போட்டு அன்னம் சாப்பிட, பசியின்மை, குமட்டல் நீங்கும். "மாதா ஊட்டாத அன்னம், மாங்காய் ஊட்டும் என்பது பழமொழி. மாம்பழம் - நாவிற்கு சுவையாகவும், ஊட்டச்சத்து இருந்த போதும், அதிகம் உண்டால் பேதி ஆகும். இதற்குப் பரிகாரம் அதன் கொட்டையை அரைத்து, தூளை உபயோகிப்பது. மூலச்சூடு தணியும். தேரையர் பாடல் - பரிபாஷையில் - "ஆனைக்கன்றில் ஒரு பிடியும், மறையன் விரோதி இளம் பிஞ்சும் கானக்குதிரை புறத்தோலும், காலில் பொடியை மாட்டினதும் தாயைக் கொன்றான் சாறிட்டு - தயவாய் அரைத்து கொள்வீரேல் மானைப் பொருந்தும் விழியாளே வடுகும் தமிழும் குணமாகும்". அத்திப்பிஞ்சு, கோவை பிஞ்சு, மா மரப்பட்டை, செருப்படை மூலிகை இவைகளைச் சமமாக இடித்து வாழைச்சாறு சேர்த்து ஒரு நெல்லிக்காயின் அளவு சாப்பிட்டால் வயிற்றுக்கடுப்பு, சகல ரத்த பேதியும் போகும்.

பாலை - இதில் பல வகைகள் உண்டு. ஊசிப்பாலை - இதுவே நஞ்சு முறிச்சான் எனப் பெயர் பெற்றது. எந்த விஷக்கடியாக இருந்தாலும் இதன் வேர்த்தூளை மூக்கின் வழிவிட்டு ஊத மூர்ச்சை தெளியும். இதன் இலையை அரைத்து உள்ளுக்குக் கொடுக்க விஷம் எல்லாம் பச்சை நிற வாந்தியாகி, நோயாளி பிழைப்பான். பின் கடிவாயிலும் இதைக் கட்டுவார்கள். கடற்பாலை - இலையை அடிப்புறமாக வைத்து, கட்டிகள் மேல் கட்டினால், கட்டி பழுத்து உடையும். அதே இலையை, பிறகு, மேல்புறமாக வைத்துக் கட்டினால், கட்டி கரைந்து மறையும்.

புன்கு - புன்னை க்ருஷ்ணருக்கும், மகேஸ்வரனுக்கும் பிரியமானது. கபாலீஸ்வரர் கோயிலில் புன்னை வனநாதர் சந்நிதியைப் பார்க்கலாம். புன்னை மரத்தடியில், கற்பகாம்பாள் மயில் உருவில் சிவ பூஜை செய்ததாக வரலாறு. பாலக்ருஷ்ணன், புன்னை மரத்தடியில் குழல் ஊதியதை புராணம் பகலும், புன்னைப்பூவை அரைத்து சொறி சிரங்குகளுக்குப் போட நீங்கும். புன்னை விதையிலிருந்து எடுக்கும் எண்ணை 'குனோரியா'வை அகற்றும். மரப்பட்டையை எடுத்து இடித்து நீரில் போட்டுக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொண்டால் ரணங்களைக் கழுவ கிருமி நாசினியாகும்.

புரசு - பூ அரசு - புவி அரசு அர்த்த நாரீச்வரம் - இது சிவசக்தி அம்சம். இதற்குப்புவி அரசன் என ஏன் பெயர் வந்தது? புவியை ஆளும் அரசனுக்கு மூன்று அம்சங்கள் இருக்க வேண்டும். வீரமும், அன்பும், இரக்கமும் ஒருவராய்ச் சார்தல் அரசர்க்கு அழகு. இத்தகைய அருங்குணங்களை ஒத்த குணங்கள் பெற்றிருப்பதால் இம்மரத்திற்கு புவி அரசன் எனப் பெயரிட்டனர். ஒரு மாவீரன் எதிரிகளின் படைகளை ஓட ஓட விரட்டுவது போல் பூ அரசும் தீராத ரோகங்களுக்குக் காரணமான நுண் கிருமிகள், புழுக்கள், பூச்சிகள் இவற்றைப் போராடி அழித்து விடும். பின்பு புண்ணை ஆற்றி சுகம் கொடுக்கும். இதன் மரப்பட்டை

விதை, பூ, மொட்டு, பழுத்து உதிர்ந்த இலை யாவும் உடலில் உண்டாகும், கண்ணுக்கு புலப்படாத புழு, நுண் கிருமிகளை அழிக்கும் ஆற்றல் உடையவை. பழுத்த இலைகளை உலர்த்தி தீயில் கரியாக்கிச் சாம்பலை சேகரித்து சுத்த தேங்காய் எண்ணையுடன் கலந்து சொறி, சிரங்கு, கரப்பான் இவைகளுக்குத் தடவி வர அடங்கும். காய்களை உடைத்தால் வரும் மஞ்சள் திரவத்தை படர்தாமரைக்குத் தடவ நல்ல பயன். "நாவுக்கரசன் வாக்கமுதம் நாளும் சேர்க்கும் இறைவன் அருள், பாவுக்கு அரசன் பாரதியின் பாடல் கூட்டும் நாட்டு உணர்வு, பூ அரசான மூலிகையோ போக்கும் போகா பிணிகளையே'', பூ அரசன் எண்ணையானது மேக ரோகங்களுக்குச் சிறந்த சஞ்சீவினி. முன்காலத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு இதன் மூலம் வழி கண்டார்கள். "பெற்றோர் தந்த ரோகங்கள், பிழையால் பெற்ற பாழ் நோய்கள், பற்றிய தொழு நோய், புணர்புரை நோய், படர் தாமரைகள், கரப்பான் கடி, முற்றும் பற்றாது ஓடிவிடும். பூவரசு என்னும் மூலிகையால் சற்றே பிள்ளை பேற்றுக்கும் தாழ்ப்பாள் ஆகும் பூவரசே".

**பழு பாகல்** - பாகல் பலவகை - காட்டுப்பாகல், கொம்புப்பாகல், நரிப்பாகல், நாய்ப்பாகல் முதலியன. இலையை இடித்து பிழிந்த ரசம், சர்க்கரை வியாதிக்குச் சிறந்தது. வயிற்றுப்புழுக்களையும் வெளிக்கொண்டு வரும். மற்ற மருந்துகள் சாப்பிடும் போது பாகற்காய் சாப்பிடக்கூடாது. ஏனெனில் மருத்தின்தன்மையை முறிந்து விடும். ஒருவருக்கு மருந்து வைத்திருக்கிறார்களா என்று சோதிக்க, நாய்ப் பாகல் இலை ரசத்தை, உள்ளங்கையில் இட்டுப் பார்ப்பார்கள். பழுபாகலால் புழு நோய், தலைவலி, மூலம், தோலைப்பற்றிய நோய்கள் தீரும்.

**பூலா** - கச்சோலம் - கிச்சிலிக்கிழங்கு. எலுமிச்சை இனத்தை சேர்ந்தது. இதனுடன் வேறு பல இனங்களைச் சேர்த்து, ஒட்டிப் பயிரிட்டு விளைந்ததுதான் சாத்துக்குடி, கமலா, நார்த்தை, கடாரங்காய், பம்ப்ளிமாஸ் போன்றவை பழச்சாறு உடல் வெப்பத்தை நீக்கும். தோலை உலர்த்தி ஊறுகாயாக உபயோகிக்கலாம். இதனால் மாந்தம், களச்சூடு, சொறி, சிரங்கு தீரும்.

**அழிஞ்சில்** - வேர்ப்பட்டை பூரான் கடிநஞ்சைப் போக்கும். ஆதி சங்கரரால் சிவானந்தலகரியில் அங்கோலம் என பாடல் பெற்றது. இதன் விதை பறந்து சென்று மரத்தின் அடிப்பாகத்தில் ஒட்டிக்கொள்வது போல், ஜீவாத்மா பரமனை பற்றிக்கொள்ள வேண்டும் என்கிறார். பொன்னேரி அருகில் சின்னக்காவணம் என்ற கிராமக்கோயிலில் இது ஸ்தல வ்ருக்ஷம்.

**ஆயில்** - பூதிகம் - பட்டையை இழைத்து மேல் பூச வெண்குட்டம் போகும். வாதாதி முத்தோஷங்களையும், பழைய சுரத்தையும் போக்கும்.

**ஆவிரை** - ஆவாரை - "ஆவாரை பூத்திருக்க சாவாரை கண்டதுண்டோ" என்பது பழமொழி - நீரிழிவு நோய்க்குக் கைகண்ட மருந்து. பூவை பாலுடன் குடிநீரில் இட்டு அருந்த உடல் சூடு தணியும்.

**இறலி** - இத்தி - கல்லால மரம் - பெரும்பாடு - உதிரப்போக்கு உட்சூடுக்கு பயன் தரும் - விழுது கிடையாது.

இரும்பிலி - இரும்பைப்பொன்னாக்க ரச வாதத்தில் உபயோகப்படுத்தும் மூலிகை இவைகள் எல்லாம்.

ஆடி, ஆவணி - ஆடி ஆவணி மாதங்களில், புடமிட என்று அழை - நெருப்பில் இட்டு பக்குவப்படுத்துவதற்கு அவைகளை வரவழை (அவற்றுடன்).

அவனி பாடலம் - நிலத்துப் பாதிரி - வடநாட்டில் பாடலிபுரம் - தமிழ்நாட்டில் பாதிரிப்புலியூர் - மேற்கண்ட கோயிலில் பெரியநாயகி கரத்தில் பாதிரி மலர் இருக்கிறது. பாதிரி பூக்கும் ஆனால் காய்க்காது. பூவினால் ஜுரம், மேகம் போகும். வேர் - நீரிழிவு, சொறி, சிரங்கு, வயிற்று மந்தம் போகும்.

அனலம் - மக்ருகம் கொடுவேலி - சித்ரமூலம் - கட்டி, மூலம், விஷசுரம் போகும். 'விஷமசுரத்தான் பொட்டென பறந்து போகும் புகழ் கொடு வேலி கண்டாய்'. மகிருகம் - பூமியில் முளைக்கும் கிழங்குகள்.

இவை சமூலமும் எழுபது சால் அடை - இவை எழுபது பொருள்களின் வேர் முதலாகி இலை யாவற்றையும் எழுபது பானைகளில் அடைத்துவை.

அதிமதுரம் - குண்டு மணி - இதன் வேர் உடல் வரட்சியைப்போக்கும். வேருக்கும், வேரைக் காய்ச்சி எடுக்கும் பாலுக்கும், ஒரே குணம், வாத பித்த சிலேத்துமங்களால் வரும் நோய்கள், எலும்புருக்கி, இருமல், விக்கல், தாகம், மூர்ச்சை, வெட்டுக்காய புண்கள் தீரும். அதிமதுரத்தை ஆங்கில மருத்துவத்தில் க்ளிசரின் என்ற பெயரில் உபயோகிக்கிறார்கள். வேரைத் தாய்ப்பாலில் ஊற வைத்து எடுத்து, அந்த பாலிலேயே நன்கு அரைத்து பதம் ஆக்கி, கண்களில் விட மங்கல் நீங்கி ஒளி பெருகும். 'தித்திக்கும் அதி மதுர குணத்தை எடுத்து உரைக்கில், சிரமயக்கம், சுர, தாக, திரிதோஷங்கள் பித்தம் சத்திக்கும் இதுகுணமா, மதுர தீபனமாம்தாது உஷ்ணமும் தவிர்க்கும். விழிக்கு இதமாம் புத்திக்கு வித்தாகும். சந்தாபம் தீர்க்கும். புகைத்தெடுக்கும் சிலேத்துமத்தை பித்த ரோகத்தை, மேகம் தன்னை, வாதத்தினை அறுத்திடும். வஜ்ரம் என்பார் அதிமதுரம் தனையே'' அகத்தியர்.

தகரம் - வாசனை நிறைந்த மரவகை இதிலிருந்து மை சாந்து தயாரிக்கிறார்கள். 'தகர ம்ருகமதமென - கடகலுழி...'தகர நறை பூண்ட விந்தைக் குழலியர்கள்' - எனத் துவங்கும் திருச்செந்தூர்த் திருப்புகழ்.

சிறு பாலடை - ஒரு பூண்டு வகை.

பதிமுக வெந்தயம் - விதைக்கப்பட்டால் உடனே முளைக்கும் வெந்தயம், வெந்தியம் என்னும் கீரை. ப்ரோட்டின், சுண்ணாம்புச்சத்து, வைட்டமின் A, B, C கிடைக்கும். உடலுக்குக் குளிர்ச்சிதந்து சிறுநீரைப்பெருக்கி மலச்சிக்கலைப்போக்கும். அரிசி கஞ்சியுடன் வெந்தயத்தை சேர்த்துக் கொடுக்க, தாய்ப்பால் பெருகும். வெந்த + அயம் - அயச்செந்தூரத்திற்கு உள்ள சக்தி இதற்கும் உண்டு. ''பொருமல் மந்தம் வாயுகபம் போராடுகின்ற இருமல் அருசியிவை ஏகும்- தரையிலே தீதில் உயர் நமனைச் சீறும் விழி

அணங்கே கோதில் வெந்தயக் கீரை கொள்" எனது அநுபவத்தில் இரவில் ஒரு தேக்கரண்டி வெந்தயத்தை அரை குவளை தண்ணீரில் ஊற வைத்து காலையில் வெறும் வயிற்றில் நீரையும் வெந்தயத்தையும் உட்கொள்ள கொலஸ்ட்ரால், ட்ரைகிளிஸரேட் குறைகிறது.

**மின்கய மோதகம்** - ஒளி விடும் பெருமையைக் கொண்ட மோதகவல்லி எனும் மரத்துப்பட்டை, கொழுக்கட்டை என்ற பெருமரம். ரத்தபேதி, சீதபேதி பெரும்பாடு நீங்கும். ஒதியன் மரத்திற்கும் இந்தப்பெயர் உண்டு. இறைவன் சில தாவரங்களை மனிதனுக்கோ கால்நடை இனங்களுக்கோ பயனாகாமல் படைத்திருக்கிறான். இவ்வகையை சேர்ந்தது ஒதியன் மரம். ப்ரம்மாண்டமாக வளர்ந்து நிழல் தரும், ஆனால் இலைகளை ஆடுமாடுகள் கூட உண்ணுவதில்லை. மனிதரில் வாட்டசாட்டமாய் வளர்ந்து விட்டு, தனக்கும் மற்றவர்க்கும் உபயோகம் இல்லாதவனை, ஒதிமரம் என்று திட்டுவார்கள். "உறு வயிறு நிறைய வெண்சோறு அடைத்து இவ்வுடலை ஒதி போல் வளர்த்து நாளும்" என்பது வள்ளலார் வாக்கு. ஆனால், இம்மரத்திற்கும் மருத்துவப்பயன் உண்டு என்று பலர் அறியார். இலையை விளக்கெண்ணெய் விட்டு வதக்கிக் கட்டினால், எல்லாவித வீக்கமும் கரையும். வேர்பட்டை 20 கிராம், 4 கோப்பை தண்ணீரில் சிதைத்துப் போட்டு காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொண்டால் ஆறாத ரணங்கள், யோனிப் புண்கள் அடிக்கடி கழுவி வர, குணம் ஆகும். மரப்பட்டையைச் சுத்தநீரில் ஏழுமுறை கழுவி எடுத்து, அதில் 50 கிராம் எடுத்து 100 மி.லி. சுத்த பன்னீர் விட்டு அதனுடன் அடுக்கு நந்தியாவட்டம் பூவைப்போட்டு 24 மணி நேரம் ஊறிய பின்பு இரண்டு துளி கண்களில் விட, கண் வியாதிகள் நீங்கும்.

**ஆறிடைஅபின்** - ஆறு எடை அளவுக்கு அபின் - கசகசா காயைக் கீறி அதிலிருந்து வடியும் பால் உறைந்திருப்பதற்கு அபின் என்று பெயர். காதுவலி, பல்வலி போகும். அதிக அளவு எடுத்துக்கொண்டால் ஆளைக்கொல்லும். காய்க்குப் போஸ்தகக் காய் எனப்பெயர். காயை உடைத்தால் வெள்ளை நிறமணல் போல இருப்பதுவே கசகசா - கசகசா,வால் மிளகு, பாதாம்பருப்பு, கற்கண்டு, சம அளவு எடுத்து இடித்து, தேன் நெய் சேர்த்து, லேகிய பதமாக கிளறி சுண்டைக்காய் அளவு பாலுடன் குடித்துவர வீரிய விருத்தி வரும்.

**அரிதாரம்** - தாளக பாஷாணம் - கஸ்தூரி மான் வயிற்றில் பிறக்கும் என்பது பழைய நூல், **கந்தகம்** - Sulphur இதுவும் பாஷாணம்.

**நூறிடை - திரிபலை** - கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக் காய்களின் கூட்டு. இதில் நூறு எடை வைக்கச் சொல்கிறார். ஆயுர் வேதத்தில் இருமலுக்கு திரிபலா சூர்ணம் கொடுப்பார்கள். "திரிபலை சுக்கு திப்பிலி இட்டு தெளிய வைத்து".

**ஓர் ஒன்று எண்பலம்** - ஒவ்வொன்றும் எட்டு பலம் அளவு.

**அதிவிடயமும்** - செடி வகை - வேர் பயன்படும். முறைச்சுரம், கோழை வாந்திகளைப் போக்கும்.

**மொழி கிருமி சத்ருவும்** - "சொல்லப்படும் கிருமி நாசினி", பலாசம் விதை, மர, இலை, பூ, விதை, பட்டை பிசின் பயன்படும். வைதிக சடங்குகளில் இலை உபயோகம்.